


## எவ்வளவு நிர்மலமானது பாருங்கள்

வெளிச்சத்துக்கு எதிரே பிடித்தால் பியர்ஸ் சோப்புக் கட்டியின் மூலமாக நீங்கள் ஊடுருவிப் பார்க்க முடியும்! பியர்ஸ் நிர்மலம் என்றால் அது தான்! க்ளிஸரின் கலந்த பியர்ஸ் சோப் பச்சிளங் குழந்தையின் மென்மையான சருமத்துக்கும் **பூரணமான பாதுகாப்புத்** தருகிறது.



## எவ்வளவு நல்லதென்று உணருங்கள்

பியர்ஸ், சருமத்துக்குப் புது மெருகும் போஷாக்கும் அளித்துப் பல்லாண்டுகள் மிருதுவாகவும் எழிலோடும் வைத்திருக்கிறது. அந்தக் காரணத்துக்காகவே, உலகெங்கும் உள்ள அழகிகள் பியர்ஸ் சோப்பைப் பிரதிதினமும் உபயோகித்து தமது மேனியின் நவ யௌவனக் களையைப் பாதுகாத்து வருகிறார்கள்.
பியர்ஸ் சோப்பை வழக்கமாக உபயோகப் படுத்தத் தொடங்குங்கள். அது எவ்வளவு நல்லதென நீங்களும் உணர்ந்து கொள்வீர்கள்




# பியர்ஸ் சோப்

**அசல் க்ளிஸரின் கலந்த அழகு தரும் சோப்**

TG. 84-50

மலர் 16 இதழ் 21

# கல்கி

துன்முகி ௵ மார்கழி 9

## பொருளடக்கம்


| | | |
|---|---|---|
| தேர்தல் பட்ஜெட் | (தலையங்கம்) | ... 3 |
| இணைப்பு வைத்தியம் உதவாது! | ... | ... 4 |
| அமெரிக்க விஜயம் | (கார்ட்டூன்) | ... 5 |
| சென்னையில் சங்கீத விழாக்கள் | ... | ... 6 |
| ராஜாஜி ஜெயந்தி | ... | ... 7 |
| நாதஸ்வர சக்கரவர்த்தி | ... | ... 8 |
| ரகுபதி ராகவ | ராஜாஜி | ... 10 |
| அழகப்பரின் அதிசய சாதனைகள் | பகீரதன் | ... 12 |
| கிறிஸ்து பிறந்தார் | அ. சீநிவாசராகவன் | ... 18 |
| பாமாவின் பிரயாணம் | நா. ராமச்சந்திரன் | ... 27 |
| பானுவின் காதலன் | ராஜம் கிருஷ்ணன் | ... 32 |
| இங்கிதம் வேண்டும் | வசுமதி ராமசாமி | ... 40 |
| கற்றுக்கொண்டு வா! | ராஜாஜி | ... 42 |
| மோட்டார் வளர்ந்த கதை | ... | ... 44 |
| ஊமை ராஜா | துரோணன் | ... 46 |
| கடல் கண்ட கனவு | சோமு | ... 51 |
| பணமா, பாசமா? | சரஸன் | ... 61 |
| முள்! | கார்த்திகை பாலன் | ... 68 |
| கனவா? நினைவா? | வேதியன் | ... 71 |
| இலட்சிய மனைவி | அநுத்தமா | ... 74 |
| அபலை அஞ்சுகம் | கி. ரா. கோபாலன் | ... 83 |
| கோமதியின் காதலன் (நாடகம்) | காந்தன் | ... 92 |
| இசைக்கலையின் அற்புதம் | கல்கி | ... 95 |


"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.



மலர் 16 இதழ் 21

தமிழ்த்திரு நாடு தன்னைப் – பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

துன்முகி ௵ மார்கழி 9

# தேர்தல் பட்ஜெட்!

சென்னை ராஜ்ய நிதிமந்திரி திரு சி. சுப்பிரமணியம் சென்ற திங்கட்கிழமையன்று 1957-58-ம் வருஷத்திய இடைக்கால வரவு செலவுத் திட்டத்தைச் சென்னை சட்டசபையில் சமர்ப்பித்துள்ளார்.

சாதாரணமாக ஏப்ரல் மாதம் தொடங்கும் நிதி வருஷத்தில்தான் எல்லா ராஜ்ய சர்க்கார்களும் தங்கள் தங்கள் பட்ஜெட்டுகளை வெளியிடுவது வழக்கம். சென்னை சர்க்கார் இப்போது வெளியிட்டுள்ள பட்ஜெட் ஒரு இடைக்கால பட்ஜெட்டேயாகும். பொதுத் தேர்தல் நடைபெற்ற பிறகு புதிய மந்திரி சபை ஏற்படுமல்லவா? புதிய மந்திரி சபை ஏற்பட்டபிறகு முழு பட்ஜெட் விவரங்களும் வரி விவரங்களும் இன்னொரு தடவை வெளியாகும். பின் இப்போது ஒரு பட்ஜெட் எதற்கு என்றால் அடுத்து வரும் நிதி ஆண்டின் முதல் நாலு மாத காலத்துக்குச் சென்னை சர்க்காரின் திட்டங்களுக்கும் வேலைகளுக்கும் ஒரு தாற்காலிக பட்ஜெட் தயாரித்திருக்கிறார்கள். இந்த பட்ஜெட்டில் ஐந்து கோடியே ஆறு லட்சம் ரூபாய் துண்டு விழுகிறது என்று நிதிமந்திரி தமிழில் அறிவித்துள்ளார். ரொம்ப சந்தோஷம். சந்தோஷம் எதற்கு என்றால், ராஜ்யச் சீரமைப்புக்குப் பிறகு சென்னை ராஜ்ய சட்டசபையில் பட்ஜெட் பிரசங்கத்தைத் தமிழில் நடத்தியிருப்பதற்காகத்தான். சட்டசபையில் பட்ஜெட் பிரசங்கத்தை நிதிமந்திரி தமிழில் நிகழ்த்தியிருப்பது குறித்துத் தமிழ் மக்கள் பெரிதும் மகிழ்ச்சி அடைந்திருப்பார்கள். பொதுத் தேர்தல் நெருங்கிக் கொண்டிருக்கும் இச் சமயத்தில் நிதி மந்திரியின் தமிழ்ப் பிரசங்கம் காங்கிரஸ் ஆட்சிக்குப் பெரும் பலத்தைத் தேடித் தரும் என்பதில் சந்தேகமில்லை.

பொதுவாக, சர்க்கார் வரவு செலவுத் திட்டத்தின் தராதரத்தை இரண்டு முக்கிய அம்சங்களைக் கொண்டு நிர்ணயித்து விடலாம்.

முக்கியமாக, குறைந்த வருமானமுள்ளவர்களைப் பாதிக்கக் கூடிய புதிய வரிகள் அடங்கிய எந்தத் திட்டமும் பொதுமக்களுக்குத் திருப்தியைக் கொடுக்காது.

ஏழைகளுக்கும் குறைந்த வருமானம் உள்ளவர்களுக்கும் சலுகைகள் அளித்துத் தயாரிக்கப்படும் திட்டத்தை ஜனநாயகத்தில் பற்றுள்ள சகலரும் ஆதரிப்பார்கள்.

சென்னை நிதிமந்திரி சமர்ப்பித்துள்ள இடைக்கால வரவு செலவுத் திட்டம் இந்தப் பரீட்சையில் பூரணமாகத் தேறியுள்ளது.

ஏனெனில், மேற்படி திட்டத்தில் புதிய வரிகள் எதுவும் விதிக்கப்படவில்லை. கிராமச் சிப்பந்திகளுக்குப் பிரயாணப்படி வசதிகளும் வைத்தியச் சலுகைகளும், அவர்களுடைய குழந்தைகள் ஆறுவது படிவம்வரை இலவசமாகக் கல்வி பெறுவதற்கான சலுகைகளும் அளிக்கப்பட்டுள்ளன.

இதுவரையில் கேட்பாரற்று அனாதைகளாக இருந்த கர்ணம், தலையாரி, வெட்டி, நீர்க்கட்டி உள்பட எல்லாக் கிராமச் சிப்பந்திகளுக்கும் சலுகைகள் அளிக்கப்படுவதை மகிழ்ச்சியுடன் வரவேற்காதவர்கள் இருக்க முடியாது.

கிறிஸ்தவர்களாக மதம் மாறிய ஹரிஜனங்களுக்கு இதுவரை கல்விச் சலுகைகள் அளிக்கப்படவில்லை. புதிய திட்டத்தின்படி அவர்களுக்கும் இனிமேல் கல்விச் சலுகைகள் உண்டு என்று அறிவிக்கப்பட்டிருக்கிறது.

புதிய திட்டத்தின்படி, சீரமைப்புக்குப் பிறகு ஏற்பட்டுள்ள சிறிய சென்னை ராஜ்யத்தின் வருமானம் 52.65 கோடி என்றும், செலவு 57.71 கோடி என்றும் மதிப்பிட்டிருக்கிறார்கள். எனவே, 5 கோடியே 6 லட்சம் ரூபாய் துண்டு விழுகிறது.

ஆனால், அதிகப்படி செலவாகும் இந்தப் பெரும் தொகையைச் சென்னை சர்க்கார் எப்படி ஈடு செய்ய உத்தேசித்திருக்கிறார்கள் என்பது திட்டத்தில் கூறப்படவில்லை. அந்தப் பொறுப்பை வரப்போகும் புதிய சென்னை சர்க்கார் தலையில் கட்டிவிட்டிருக்கிறார்கள்.

அதைப் பற்றி இப்போது கவலைப்பட்டுப் பிரயோஜனமில்லை. இப்போதைக்கு நாம் மகிழ்ச்சியடையக் கூடிய இரண்டாவது முக்கிய விஷயம் கிராமத்திலுள்ள சர்க்கார் சிப்பந்திகளுக்கு அதிகப்படி வசதிகளும் அவர்கள் குழந்தைகளுக்கு இலவசக் கல்வி ஏற்பாடுமே யாகும். இந்த ஏற்பாட்டைப் பொது மக்கள் எல்லாருமே வரவேற்பார்கள். ஏழை சர்க்கார் சிப்பந்திகள் வரவேற்பார்கள். பொதுத் தேர்தலில் இவர்களுடைய பெருவாரியான வோட்டுகளைப் பெற்றே காங்கிரஸ் வெற்றி பெற வேண்டும். நிதி மந்திரி சுப்பிரமணியம் பொதுத் தேர்தலை மனத்தில் கொண்டு மிகவும் சாமர்த்தியமாகப் புதிய பட்ஜெட்டைத் தயாரித்துள்ளார். இதற்காக அவரைப் பெரிதும் பாராட்டுகிறோம்.

# இணைப்பு வைத்தியம் உதவாது

சென்னை சர்வகலாசாலையின் உப அத்யட்சகர் திரு லட்சுமணசாமி முதலியார் அவர்கள் தக்க சமயத்தில் தகுந்த எச்சரிக்கை ஒன்றைச் செய்திருக்கிறார்.

சென்னை சர்க்காரின் வைத்தியப் படிப்பைப் பற்றிய கொள்கை மிகவும் ஆபத்தானது என்றும் முன்னேற்றத்துக்குத் தடையானது என்றும் மிக வன்மையாக எச்சரித்துள்ளார்.

''மேனாட்டு வைத்திய முறை, இந்திய வைத்திய முறை, இவ்விரண்டின் கலப்படம், முன்னேற்றம் என்னும் கடிகாரத்தின் முள்ளைத் திருப்பி வைப்பதாக முடியும்'' என்று சமீபத்தில் கோயமுத்தூர் ஜில்லா வைத்திய சங்கக் கூட்டத்தில் பேசியிருக்கிறார்.

முப்பதாண்டுகளுக்கு முன் சென்னையில் 'இந்திய வைத்தியப் பள்ளிக்கூடம்' என்ற பெயரில் ஆயுர்வேதம், யுனானி, சித்த வைத்தியம் முதலிய இந்திய வைத்திய முறைகளைப் போதிக்க ஒரு பள்ளிக்கூடம் ஆரம்பிக்கப் பட்டது. இந்தப் பள்ளிக்கூடம் நமது கிராம மக்களுக்கு மிகச் சொற்பச் செலவில் வைத்திய உதவி அளிக்கும் நோக்கத்துடன் ஆரம்பிக்கப் பட்டது. கிராமங்களிலுள்ள கடைகளில் சுக்கு, மிளகு, திப்பிலி முதலிய வைத்திய சிகிச்சைக்கான பொருள்கள் சொற்ப விலையில் சுலபமாகக் கிடைக்கக் கூடியவை. இவைகளைக் கொண்டு கிராம மக்களுக்குச் சாதாரணமாக ஏற்படக்கூடிய தலைவலி, ஜுரம் முதலிய சாதாரண நோய்களைச் சுலபமாகக் குணப்படுத்திவிட முடியும். இவ்வாறு ஏழை கிராம மக்களுக்கு எளிய முறையில் வைத்தியம் செய்யக்கூடிய பயிற்சி பெற்ற வைத்தியர்களை உண்டாக்குவதற்காகவே இந்திய வைத்தியப் பள்ளி ஏற்படுத்தப்பட்டது.

ஆனால் துரதிர்ஷ்டவசமாக, சென்னை சர்க்காரில் சுகாதார இலாக்காவுக்கு மந்திரியாக வந்தவர்களில் பெரும்பாலோர் இந்திய வைத்திய முறையில் விஞ்ஞான ரீதியான முறை இருக்கிறது என்பதைக் காணும் சக்தியற்றவர்களாக இருந்தனர். எந்த நோக்கத்தோடு இந்தப் பள்ளி ஆரம்பிக்கப்பட்டது என்ற நினைவும் அவர்களுக்கு இல்லாமற்போய் விட்டது. எல்லாவற்றுக்கும்மேலாக மேனாட்டு வைத்திய முறையில் அர்த்தமில்லாத ஈடுபாடு கொண்டவர்களாக இருந்தனர்.

இதன் பயனாக, இன்று சென்னை சர்க்கார் நடத்தும் ''கவர்ன்மெண்ட் காலேஜ் ஆப் இண்டக்ரேடட் மெடிஸின்'' வெறும் கலப்படமாக இருக்கிறது. அங்கு இந்திய வைத்தியப் படிப்பை எவ்வளவு தூரம் சுருக்கலாமோ அவ்வளவு சுருக்கி விட்டிருக்கிறார்கள். இனி இந்திய வைத்தியம் உயிரை விடவேண்டியது ஒன்றுதான் பாக்கி !

இந்திய வைத்தியப் படிப்புக்கு என்று ஒதுக்கப்பட்டிருந்த நேரத்தையும், பாடங்களையும் கணிசமான அளவு குறைத்து விட்டார்கள். இந்த வைத்திய முறையில் பாடம் கற்பிக்கச் சுமார் 1800 மருந்து வகைகள் இருந்தன. இப்பொழுது அதைப் பெருமளவு குறைத்து இருநூறு மருந்துகளோ, முந்நூறு மருந்துகளோ போதும் என்று முடிவு செய்துவிட்டார்கள். இந்திய வைத்திய முறைகளைப் போதிக்கும் பல ஆசிரியர்கள் வேலையை விட்டே வீட்டுக்கு அனுப்பப் பட்டிருக்கின்றனர். வேறுசிலர் சர்க்காரின் மாற்றாந்தாய் நடவடிக்கையைத் தாங்க முடியாமல் தாங்களாகவே வேலையை விட்டு வெளியேறியிருக்கின்றனர்.

அடிமை ஆட்சியில்தான் மேனாட்டு மோகம் தலைவிரித்தாடியது என்றால், சுதந்திர பாரதத்தில் அதைவிட மோசமாக இருக்கிறது.

ஆனால், இந்திய வைத்திய முறையை மாணவர்களே வேண்டாம் என்று சொல்லுகிறார்களே என்று சர்க்கார் வாதிக்கலாம்.

மாணவர்கள் இஷ்டத்துக்காக மட்டும் சர்க்கார் கல்லூரியை நடத்தக்கூடாதல்லவா?

பாரத நாட்டின் வனங்களிலே எத்தனை வகை மூலிகைகள் இருக்கின்றன என்று காட்டு இலாகா இப்பொழுது பரிசீலித்து, அவ்வப்போது செய்திகள் சர்க்கார் வசம் அனுப்பப் பட்டு வருகிறது. இதைத் தவிர பழம் சுவடிகளையும், வைத்தியச் சுவடிகளையும் சர்க்கார் ஆராய்ந்து வெளியிட்டு வருகிறார்கள். இவற்றில் உள்ள உண்மைகள், ரகசியங்கள் எல்லாம் பல நூற்றாண்டுகளாக உலகம் அறியாமலே இருந்து வந்திருக்கின்றன. இவற்றை யெல்லாம் உலகம் அறியச் செய்வது, சர்க்காரின் கடமை. ஆராய்ச்சி முறையோடு இந்திய வைத்திய முறையைப் போதிக்கும் கல்லூரியும், அதனோடு வைத்திய ஆராய்ச்சிக்கூடமும் அவசியம் தேவை. ஆகவே சர்க்கார் இந்தக் கல்லூரியில் இந்திய வைத்திய முறைக்குத் தான் முக்கியத்துவம் அளித்துக் கற்பிக்கப் படும் என்று சந்தேகத்துக்கிடமின்றி மாணவ உலகத்துக்குச் சொல்லவேண்டியது அவசியம்.

## அமெரிக்க விஜயம்

"குழந்தையின்
க்ஷேமத்துக்காக"

ஐஸன்ஹோவர்

ஈடன்

நாட்டோ

பிரிந்தவர்
கூடினர்

## சரியான தந்திரம்!

தேர்தல்
வெற்றிக்கு
வழி

சென்னை சர்க்கார்

மக்கள்

# சென்னையில் சங்கீத விழாக்கள்

ஹங்கேரி நெருக்கடி, சூயெஸ் குழப்பம், தேர்தல் கவலை — எது எப்படியானாலும் சென்னையில், டிசம்பர் மாதக் கடைசியில் நடைபெறும் சங்கீத விழாக்கள் இவ்வருஷமும் வழக்கம்போல் ஜாம் ஜாம் என்று ஆரம்பமாகியுள்ளன.



ஸ்ரீ மொரார்ஜி தேசாய்

சென்னை சங்கீத வித்வத் சபையினர் ராயப்பேட்டை மௌபரீஸ் ரோடில் தங்களுக்குச் சொந்தமாயுள்ள விஸ்தாரமான மனையில் மிகவும் விசாலமாகவும் கம்பீரமாகவும் அழகிய பந்தல் அமைத்துள்ளார்கள்.

வித்வான்கள் அமர்ந்து பாடுவதற்கும் ரசிகர்கள் சௌகரியமாக உட்கார்ந்து அனுபவிப்பதற்கும் ஏற்ற முறையில் பந்தல் மிகவும் வசதியுடன் அமைந்துள்ளது. வித்வத் சபையைத் தவிர இன்னும் பல சங்கீத விழாக்களும், ஆங்காங்கே நடைபெறப் போகின்றன. கார்ப்பொரேஷன் கட்டடத்துக்கருகில் அமைந்துள்ள பந்தலில் இந்தியன் பைன் ஆர்ட்ஸ் சங்கத்தார் வெள்ளி விழாக் கொண்டாடுகிறார்கள். தமிழிசைச் சங்கத்தார் ராஜா அண்ணாமலை மன்றத்தில் பதினைன்காவது இசை விழாவை நடத்துகிறார்கள். சமீபத்தில் நமது சுதந்திர சர்க்காரில் மந்திரிப் பதவி ஏற்றுள்ள ஸ்ரீ மொரார்ஜி தேசாய் இவ்வருஷ வித்வத் சபை மகாநாட்டைத் தொடங்கி வைக்கப் போகிறார். மகாநாட்டுக்குப் பிரபல நாதஸ்வர வித்வான் திருவிழிமிழலை ஸ்ரீ சுப்பிரமணிய பிள்ளை தலைமை வகிக்கிறார். ஜனவரி முதல் தேதியன்று கூடப் போகும் வித்வத் சபை சதஸுக்கு மத்திய சர்க்கார் மந்திரி ஸ்ரீ நித்தியானந்த கனுங்கோ தலைமை வகிக்கிறார்.



ஸ்ரீ கனுங்கோ

வித்வத் சபையார் நடத்தும் சங்கீத விழாக்களில் சங்கீத உலகில் பிரக்யாதி பெற்ற பல பழம் பெரும் வித்வான்களின் பெயர்களோடு பிற்பகல் கச்சேரியில் பங்கு பெறப்போகும் முன்னுக்கு வரவேண்டிய இளம் வித்வான்களின் பெயர்களும் காணப்படுகின்றன. சங்கீதத்தின் தரமும், பண்பும், உயர்வும் காப்பாற்றப்பட வேண்டியதின் அவசியத்தை உணர்ந்த வித்வத் சபையினர் கடந்த முப்பது ஆண்டு காலமாகச் சங்கீதத்தின் முன்னேற்றத்துக்காகச் செய்து வரும் சேவைகளை ரசிகர்கள் நன்கு அறிவார்கள்.

பழைய நாளில் பல பெரிய வித்வான்கள் முன்னுக்கு வர வேண்டிய தங்களுடைய சிஷ்யர்களை உற்சாகமூட்டி வந்தார்கள். இளம் வித்வான்கள் பாடும்போது எதிரில் போய் உட்கார்ந்து சிரக்கம்பமும் கரகோஷமும் செய்து பாராட்டி வந்தார்கள். தங்களுடன் சேர்ந்து பாடவும், தனிக் கச்சேரி செய்யவும் சந்தர்ப்பம் அளித்தார்கள். பழைமையான சங்கீதத்தின் பெருமையும் சிறப்பும் பெரிய வித்வான்களுடன் அறுபட்டுப் போகாமல் இருக்கவே அவர்கள் இவ்வாறு செய்தார்கள். சங்கீத வித்வத் பரம்பரை இதனால் செழித்தோங்கி வாழையடி வாழையாக வளர்ந்து வந்தது. இத்தகைய உயர்ந்த கைங்கர்யத்தை இப்போது சங்கீத வித்வத் சபையாரே செய்து கொண்டு வருகிறார்கள்.

பெரிய வித்வான்கள் கலந்து கொள்ளும் மேடையில் இளம் வித்வான்களுக்கு இடமளித்து ஊக்கமும் ஆக்கமும் அளித்து வரும் வித்வத் சபையைப் பாராட்டுகிறோம்.



ஸ்ரீ சுப்பிரமணிய பிள்ளை

## நேயர்களுக்கு ஒரு நல்ல சேதி

பொங்கல் தமிழ்த் திருநாளை யொட்டி 13-1-57 'கல்கி' இதழ் விசேஷக் கவிதைகள், கட்டுரைகள், வர்ணச் சித்திரங்களுடன் 120 பக்கங்கள் கொண்டு கலை மணம் கமழும் பொங்கல் மலராக வெளிவருகிறது.

இந்தப் பொங்கல் மலரிலேயே திரு கி. ரா. கோபாலன் அவர்களின் புதிய சரித்திரத் தொடர்கதையும் ஆரம்பமாகிறது.

# ராஜாஜி ஜெயந்தி

சென்னையில் ராஜாஜியின் 78வது பிறந்த தின விழா மைசூர் ராஜ்யத்தின் முன்னாள் முதன் மந்திரி திரு கே. ஹனுமந்தய்யா தலைமையில் 18ல் சிறப்பாக நடைபெற்றது. விழாவில் பல பிரமுகர்கள் கலந்து கொண்டு ராஜாஜியை வாயார மனமாரப் பாராட்டி வணக்கங்களைச் செலுத்திக்கொண்டனர். 1. சென்னை ஆர்ச் பிஷப் பேசுகிறார். 2. தருமபுர ஆதீனத் தலைவரின் வாழ்த்துரையை திரு சோமசுந்தரத் தம்பிரான் வாசிக்கிறார். 3. காசா சுப்பாராவ் 4. குமாரிகள் ராதாவும் விஜயாவும் பிரார்த்தனை கீதங்கள் பாடுகின்றனர். 5. திரு கே. பாலசுப்பிரமணிய அய்யர் 6. விழாத் தலைவர் திரு கே. ஹனுமந்தய்யா. 7. ஸ்ரீமதி லைப்வாலா ஜாதவ் 8. ஸ்ரீமான் எஸ். வரதாச்சாரியார் 9. திரு லான்சந்த் தாதா 10. நிதி மந்திரி சி. சுப்பிரமணியம் 11. சென்னை ஷெரிப் காஸ்டல். 12. திரு ம. பொ. சிவஞான கிராமணியார்.

போட்டோ: விச்சு

# நாதஸ்வர சக்கரவர்த்தி

நாதஸ்வர வாத்தியம் நாதனை இழந்து பரதவிக்கிறது. தோடி ராகம் மூர்ச்சித்துக் கீழே விழுகிறது. சப்த ஸ்வரங்களும் நிலை குலைந்து புலம்புகின்றன. ஆதார சுருதி 'ஐயோ!' என்று அலறுகிறது. தாளமும், தவிலும் தாங்க முடியாத சோகத்தில் ஆழ்ந்திருக்கின்றன. சங்கீத தேவதை கண்ணீரும் கம்பலையுமாய்க் காட்சி அளிக்கிறாள்.

இசை உலகின் ஈடு இணையற்ற அரசன், வாத்திய சங்கீதத்தின் வல்லுநர், நாதஸ்வர சக்கரவர்த்தி, திருவாவடுதுறை திரு டி. என். ராஜரத்தினம் பிள்ளை கடந்த 12-12-56 புதன்கிழமை காலை காலமாகி விட்டார் என்ற செய்தி கேட்டுச் சங்கீதஉலகமே பெருந் துயரத்தில் ஆழ்ந்திருக்கிறது.

என்றோ ஒருநாள் அழிய வேண்டிய இந்த அநித்யமானஸ்தூலஉடலை அவர்பிரிந்துவிட்ட போதிலும், அவர் நமக்கு அளித்துள்ள இன்பமயமான இசை வெள்ளமும், அவர் அடைந்துள்ள கடல் போன்ற மங்காத புகழும் இந்த உலகத்திலே என்றென்றும் நிலைத்து நிற்கும்.

ஏழு எழுத்துக்கள் கொண்ட ராஜரத்தினம் ஏழு ஸ்வரங்களாக மாறி இசையோடு கலந்து நம்மிடையே என்றென்றும் வாழ்ந்து வருவார். அவர் தோடியாகத் தோற்ற மளிப்பார்; பைரவியாகப் பவனி வருவார். காம்போதியாகவும் கானடாவாகவும் காட்சி அளிப்பார். நாட்டையாகவும் நட பைரவியாகவும் நடமாடிக்கொண் டிருப்பார்!

இதற்கு முன்னால் எத்தனையோ வித்வான்கள் தோடி ராகத்தைச் சிறப்புறக் கையாண்டு புகழ் அடைந்திருக்கிறார்கள். ஆனால் திரு ராஜரத்தினம் பிள்ளை தோடியைக் கையாண்டதனால் தோடி ராகமே தனிப் பெரும் புகழும் பெருமையும் பெற்றது. தோடி ராகம் ராஜரத்தினம் பிள்ளையின் தனிமையான மெருகு வாய்ந்த கற்பனை ஸ்வரங்களுடன் பூர்ண ஜீவகளையைப் பெற்றுக் கேட்போரைக் கிறுகிறுக்கச் செய்து விடும். அப்போது நாம் நீர்ப்பரப்பிலே மிதப்போம். ஆகாச வெளியிலே ஆனந்தமாய்ப் பறப்போம். மழலையின் இன்பமும் மகா மேருவின் கம்பீரமும் ராஜரத்தினத்தின் தோடி ராகமாக நம் மனக்கண்முன் காட்சி தரும். ஆகா! இனி ஒரு முறை அவருடைய தோடி ராகத்தை எங்கே கேட்கப் போகிறோம்? அவர் குழலெடுத்து ஊதும்போது குயில்கள் கொஞ்சின; மயில்கள் ஆடின; சிம்மங்கள் கர்ஜித்தன; சர்ப்பங்கள் சீறின; கங்கையும் காவிரியும் பிரவகித்துப் பெருகின! இவ்வளவு அனுபவங்களும் இனி நமக்கு எங்கே கிடைக்கப் போகின்றன?

* * *

திரு ராஜரத்தினம் பிள்ளை தமது வாழ்நாளில் ஒப்பற்ற இசைக் கலைஞராக விளங்கினார். தம்முடைய பால்யப் பருவம் முதலே சங்கீதக் கலையில் ஈடுபட்டுச் சங்கீத தேவதையின் பூஷணமாக விளங்கினார். திருவாவடுதுறை ஆதீனத்தின் ஆஸ்தான வித்வானாகப் பதவி வகித்தார். சுதந்திர பாரத சர்க்காரால் விருது பெறும் கௌரவத்தை அடைந்தார். தம்முடைய அபூர்வ வாசிப்பின் மூலம் பல்லாயிரக் கணக்கான ரசிகர்களை ஒருங்கே கவர்ந்தார். சங்கீத ரசிகர்களிலே, பாமர ரசிகர்கள்என்றும், பண்டிதரசிகர்கள் என்றும் இரு வகையினர் உண்டு. சிலருடைய சங்கீதம் பாமரர்களை மட்டும் ரஞ்சகப்படுத்துவதாயிருக்கும். இன்னும் சிலருடைய சங்கீதம் பண்டித ரசிகர்களை மட்டும் கவர்வதா யிருக்கும். திரு ராஜரத்தினம் பிள்ளையின் சங்கீதம் பாமரர்கள், பண்டிதர்கள் இரு சாராரையும் கவர்வதா யிருந்தது.

கடந்த வியாழக்கிழமை அவருக்கு ஈமக் கிரியை நடைபெற்ற சமயம் ஆயிரக்கணக்கான ரசிகர்களும் எண்ணற்ற நண்பர்களும் சேர்ந்து ஒரு மைல் நீளத்துக்குமேல் மயானம் வரை ஊர்வலமாகச் சென்று தங்களுடைய இறுதி மரியாதையைச் செலுத்தி விட்டு வந்தார்கள். மயானத்தில் பல பிரமுகர்களும், தலைவர்களும், கலைஞர்களும், வித்வான்களும் கூடி நின்று திரு ராஜரத்தினத்தின் ஒப்பற்ற சங்கீத மேதையைப் பாராட்டிப் பேசினார்கள்.

ராஜரத்தினம் பிள்ளை ஐம்பத்தெட்டு ஆண்டு காலம் நம்மிடையே வாழ்ந்து நாதஸ்வர இசை உலகத்தின் ஏக சக்ராதிபதியாக விளங்கிப் பெரும் கீர்த்தியோடு மறைந்துவிட்டார். அவர் பிரிவினால் துக்கப்பட்டுக் கொண்டிருக்கும் அவர் குடும்பத்தாருக்கும்பல்லாயிரக் கணக்கான ரசிகர்களுக்கும் நண்பர்களுக்கும் நம்முடைய ஆழ்ந்த அனுதாபத்தைத் தெரிவித்துக் கொள்கிறோம்.



திரு டி. என். ராஜரத்தினம் பிள்ளை

# ரகுபதி ராகவ

[அகமதாபாத் நவஜீவன் காரியாலயத்தினர் பிரசுரம் செய்திருக்கும் 'சத்தியமே தெய்வம்' என்னும் காந்தி வசன மஞ்சரியிலிருந்து ராஜாஜி எடுத்து எழுதியது]

58

கீதையின் உபதேசத்தில் அஹிம்சையும் ஒரு பாகமாக இருப்பின் ஏன் யுத்தத்தை வைத்து உபதேசம் எழுதப்பட்டிருக்கிறது என்கிற கேள்வியுண்டு. அந்தக் காலத்தில் அஹிம்சா தர்மம் ஒப்புக் கொள்ளப் பட்டிருந்த போதிலும் யுத்தம் தர்மத்தினின்று விலக்கப்படவில்லை. க்ஷத்திரிய கடமைகளுக்கும் அஹிம்சைக்கும் விரோதம் அந்தக் காலத்தில் பெரியோர்கள் காணவில்லை. கீதையின் நோக்கம் அஹிம்சா முறையை ஊர்ஜிதப் படுத்துவதற்கல்ல என்பதை ஒப்புக் கொள்ளுகிறேன். பயனைத் துறத்தல் என்கிற மார்க்கத்தைக் காட்டுவதற்காகவே கீதை தோன்றியது. இரண்டாவது அத்தியாயத்திலேயே இது மிகத் தெளிவாகக் காணப்படுகிறது. ஒரு உண்மையை உபதேசிக்கும்போது அதனுடைய எல்லா முடிவுகளையும் எடுத்துக் காட்ட வேண்டும் என்பது அவசியமில்லை. 'பயனைத் துறந்து கடமைகளைச் செய்' என்பது கீதையின் உபதேசம். இந்த உபதேசம் வாழ்க்கையில் பல சந்தர்ப்பங்களில் எங்கெங்கே கொண்டு போய் விடும் என்பதைப் பற்றி யெல்லாம் கீதையில் விவகரிக்க வில்லை. முனிவர்களுடைய பெருமை என்ன வென்றால் அவர்களுடைய உபதேசம் சுருக்கமாக இருக்கும். அது காலத்துக்கு ஏற்றபடி பலவித நற்பயன்களைத் தரும். அந்தக் காலத்தில் எதிர்பாராத பொருளும் கூடப் பிற்காலத்தில் அதனின்று தோன்றும்.

யாகங்கள் கீதைக்கு முந்திய காலத்திலும் செய்யப்பட்டு வந்தன. வேள்விகளில் பிராணிகளை வதை செய்தும் வந்தார்கள். ஆனபோதிலும் யாகமென்று கீதையில் பல இடங்களில் சொல்லப்பட்டிருந்தாலும் பிராணஹிம்சை கலந்த யாகம் அதில் காணப்படவே இல்லை. கீதையில் கூறப்பட்டிருக்கும் வேள்விகளுக்குள் ஜபயக்ஞம் என்பதே சிறந்ததாகச் சொல்லப்பட்டிருக்கிறது. ஆண்டவனை ஏகாக்கிர சித்தத்துடன் தியானிப்பதே சிறந்த வேள்வி என்பதைக் காண்கிறோம். மூன்றாவது அத்தியாயத்தில் தேக சிரமத்தைச் செலுத்திப் பணி செய்வதும் ஒரு வேள்வியாகச் சொல்லப்படுகிறது. மூன்றாவது நான்காவது அத்தியாயங்களைச் சேர்த்துப் படித்தால் வேள்வி என்பதற்குப் பல பொருள்கள் காண்கிறோம். கீதையில் பல வேள்விகளைப் பற்றிச் சொல்லப்பட்டிருந்தாலும் பிராணிகளைக் கொல்லும் வேள்விகளை அவற்றில் காண முடியாது. யக்ஞம் என்கிற பழைய சொல்லுக்குப் புதுப் பொருள்கள் கீதையில் தோன்றி விட்டன.

இப்படியே சந்நியாசம் என்கிற சொல்லும் கீதையில் பொருள் மாறி விட்டிருக்கிறது. எவ்வித காரியமும் செய்யாமல் இருக்கும் நிலை கீதையில் சொல்லப்பட்ட சந்நியாசம் ஆகாது. கீதையில் சொல்லப்பட்ட சந்நியாசத்தில் எல்லா வேலையும் செய்ய வேண்டியதே. செய்த போதிலும் செய்யும் முறையில் செய்தால் அது செய்யாமையே யாகும். பயனைக் கருதாது செய்யப்பட்ட கர்மம் அகர்மமாகும். ஆசையை மனத்தில் வைத்துக்கொண்டு வெளிப்படையாக ஆசையைப் பூர்த்தி செய்யாமலிருந்தாலும்அது கர்மமாகும்.

கீதையில் யுத்தத்தை விலக்க வில்லை என்பது உண்மையாயினும், நாற்பது ஆண்டுகள் கீதா உபதேசத்தின்படி வாழ்க்கையை நடத்த முயற்சி செய்து வந்ததில் நான் கண்ட உண்மை என்னவென்றால்—இதை மிக அடக்கத்துடன் சொல்லுகிறேன் — பற்றுகளை அறவே நீக்க வேண்டுமானால் அஹிம்சை இல்லாமல் முடியாது. கீதை உபதேசத்தை முற்றிலும் நிறைவேற்றினால் யுத்தத்தை விலக்க வேண்டியதாகிறது.

பகவத் கீதையானது சுருக்கமான சூத்திரங்கள் கொண்ட நூல் அல்ல. அதில் மூழ்க மூழ்க ஆழ்ந்த பல கருத்துக்களைக் காணலாம். சாதாரண மக்களுக் கென்று தோன்றிய நூலானபடியினால் கூறியதையே திரும்பத் திரும்ப இனிய முறையில் கூறுகிறது. படிக்கும்போது அது குற்றமாகத் தோன்றாது. நாள்செல்லச் செல்ல, காலபேதத்தினால் சொற்களின் பொருள் விரிவடையும். ஆயினும் அதனுடைய நடுநாயக உபதேசம் மாறுபடாது. பக்தர்கள், கீதையினின்று வெவ்வேறு ரத்தினம் போன்ற பொருள்களை அடைவார்கள். பக்தர்களுடைய கருத்துக்களும் கொள்கைகளும் வெவ்வேறு விதமாக இருக்கலாம். ஆயினும் முக்கிய உபதேசத்தை ஒன்றாகவே கண்டு ஒப்புக் கொள்வார்கள்.

செய்ய வேண்டியதும் விலக்கப் பட வேண்டியதுமான ஒரு பட்டியல் கீதையில் இல்லை. ஒருவனுக்கு ஒன்றைச் செய்ய வேண்டியது தர்மமாகும். மற்றொருவனுக்கு அது அதர்மமே யாகும்.

ஒரு காலத்தில் ஒன்றைச் செய்வதில் தவறில்லை. அதே செயல் மற்றொரு காலத்திலும் இடத்திலும் தவறாக இருக்கலாம். எது தர்மம் எது அதர்மம் என்று முடிவு கட்டுவதற்கு உரை கல் ஒன்றே. லாபத்தை விரும்பாமல் செய்யப்பட்ட செயலா என்பதே அது. அதுதான் எந்தச் சந்தர்ப்பத்திலும் கட்டுப்படுத்தும் நிபந்தனை.

ஞானத்தைப் பற்றி மிக மேன்மைப் படுத்தியே கீதையில் சொல்லப்பட்டிருக்கிறது. ஆனால் கீதையில் சிறப்பித்துச் சொல்லப்பட்ட ஞானம் மூளையை மட்டும் சார்ந்ததல்ல. இதயத்தைச் சார்ந்தது. அறிவு மட்டும் ஞானமாகாது. ஆனபடியால் பக்தியில்லாதவர்களுக்குக் கீதை பயன்படாது. இதனால்தான் கண்ணன் கீதை முடிவில் சொல்கிறான்:

"இந்த உபதேசத்தை வேள்வி யற்றவனுக்குச் சொல்லாதே. சிரத்தையில்லாதவனுக்குச் சொல்லாதே. உபதேசத்தை விரும்பாதவனுக்குச் சொல்லாதே. என்னை மறுப்பவனுக்குச் சொல்லாதே. இந்த உபதேசத்தை பக்தர்களுக்கு எடுத்துச் சொல்லுகிறவன் பெரும் புண்ணியம் செய்தவனாவான். அவன் என்னையே அடைவான். அருமையில்லாமல் இந்த உபதேசத்தைப் பக்தியோடு ஒப்புக் கொண்டு வாழ்க்கை நடத்துகிறவர்கள் வீடுபெறுவார்கள்."

[யங் இந்தியா, 6-8-31]




இந்தக் கல்வி ஸ்தாபனம் ஆரம்பித்த கதை நேயர்களுக்குத் தெரிந்ததுதான். ஆனால் மீண்டும் ஒருமுறை நினைவூட்டி வைக்கிறேன். ஒரு சமயம் வைஸ்சான்சலர் திரு லட்சமண சாமி முதலியார் ஆற்றிய சொற்பொழிவைக் கேட்டுவிட்டு உடனே இந்தக் கல்லூரியை ஆரம்பித்தார் டாக்டர் அழகப்பர். முதலில் காரைக்குடி நகரில் காரைக்குடி நகரசபைக்குச் சொந்தமான 'காந்தி மாளிகை' என்னும் கட்டடத்தில் 140 மாணவர்களுடன் இந்தக் கல்லூரி தொடங்கப்பட்டது. அப்பொழுது சென்னை ராஜ்யத்தின் கல்வி மந்திரியாக இருந்த திரு அவினாசிலிங்கம் செட்டியார் அவர்கள் அழகப்பா கலைக் கல்லூரியைத் திறந்து வைத்தார்.

பிறகு காரைக்குடி ரயில்வே நிலையத்துக்கு அருகில் உள்ள திறந்த வெளியில் சுமார் ஒரு சதுர மைல் விஸ்தீரணம் நிலம் கல்லூரியின் கட்டடம் கட்டுவதற்காக வாங்கப்பட்டது. அங்கு துரித காலத்தில் கட்டடங்கள் கட்டப்பட்டன. ஒரே வருஷத்தில் கட்டடங்கள் வளர்ந்து விட்டன. அதுபோலவே கல்லூரியில் மாணவர்களின் எண்ணிக்கையும் 140-ல் இருந்து 312 ஆக உயர்ந்து விட்டது.

1948-ம் ஆண்டு சென்னை ராஜ்யத்தில் முதன் மந்திரியாக இருந்து வந்த திரு ஓ. பி. ராமசாமி ரெட்டியார் அழகப்பா கலைக் கல்லூரியின் புதிய கட்டடத்தைத் திறந்து வைத்தார். அப்பொழுதே இந்தக் கல்லூரியில் பி. எஸ்ஸி. விஞ்ஞான சாஸ்திர வகுப்புகள் நடைபெற ஆரம்பித்து விட்டன.

டாக்டர் அழகப்பரின் சலியா உழைப்பினாலும், பிரின்ஸ்பல் திரு சூரியநாராயணன், பிரின்ஸ்பல் திரு ஏ. என். தம்பி ஆகியவர்களுடைய திறமை மிக்க நிர்வாகத்தினாலும் அழகப்பா கலைக் கல்லூரி சிறப்புடன் ஓங்கி வளர ஆரம்பித்து விட்டது.

கல்லூரிக் கட்டடங்களை ஒட்டி மாணவர்களுக்கான விடுதிகள் கட்டப்பட்டன. விசாலமான விளையாட்டு மைதானம் அமைத்தார்கள். மேலும் கல்லூரி வளர்ந்தது. பலவிதமான சாஸ்திரப் பாடங்கள் போதிக்





கும் வசதியைப் பெற்றது. இன்றைய தினம் கலைக் கல்லூரியில் மட்டும் 1,300 மாண வர்கள் படித்து வருகிறார்கள். அழகப்பா கலைக் கல்லூரி தமிழ் நாட்டில் இமயம் போல் நிமிர்ந்து நிற்கிறது. சென்ற பத்தே ஆண்டு காலத்துக்குள் சென்னை ராஜ்யத்தில் உள்ள மிகச் சிறந்த கலைக் கல்லூரிகளில் ஒன்றாக மாறி விட்டது!

இப்பொழுது அழகப்பா கலைக் கல்லூரியில் எல்லாவிதமான கலைகளையும் கற்றுக் கொடுக் கின்றனர். ஆங்கிலம், தமிழ், விஞ்ஞானம், பூகோளம், சரித்திரம், பூதத்துவம், உடல் தத்துவம் இன்னும் கலைக் கல்விகளுக்கு வேண் டிய அத்தனை பாடங்களும் கற்றுக் கொடுக் கின்றனர். இந்தப் பாடங்களை யெல்லாம் சொல்லிக் கொடுப்பதற்கு அனுபவம் நிறைந்த பல அறிஞர்கள் இருக்கின்றனர். ஒவ்வொரு பகுதிக்கும் மிகச் சிறந்த நூல் நிலையம், கண் காட்சிச்சாலை எல்லாம் இருக்கின்றன. பூதத்து வக் கண்காட்சிக்கூடம் பார்த்துப் பார்த்து அனுபவிக்கக்கூடியதா யிருக்கிறது. இந்தக் காட்சிக் கூடத்துக்குள் ஒரு மனிதன் சென்று விட்டால் அவன் சாதாரணப் பொருளாக மாறி விடுவான். அவ்வளவு அதிசயமான பொருள்கள், கற்பனை செய்து பார்க்க முடி யாத அபூர்வ சாமான்கள் இருக்கின்றன. மாணவர்களின் அறிவு வளர்ச்சிக்கு இவ்வளவு சாதனங்கள் செய்து வைத்திருப்பதுடன் திருப்தி அடையாமல் அடிக்கடி வெளி இடங் களிலிருந்து பல அறிஞர்களையும் வரவழைத்து மாணவர்களுக்குப் பாடம் போதித்து வருகின்றனர்.

இந்தக் கல்லூரி மாணவர்களின் கட்டுப் பாட்டையும், அவர்களிடம் வளர்ந்துள்ள சிறந்த பண்பாட்டையும் பாராட்ட வேண் டும். இந்தச் சிறந்த கலையைப் பெறுவதற் காவது அழகப்பா கலைக் கல்லூரியில் படிக்க லாம்போல் தோன்றுகிறது. ஒரே வார்த்தை யில் சொல்ல விரும்பினால் அழகப்பா கல்லூரி மாணவர்கள் உண்மையான கல்வி அறிவைப் பெற்ற மாணவர்களாகத் திகழ்கின்றனர்.

''இந்தப் பள்ளிக்கூட மாணவர்கள் பள்ளிப் படிப்பு முடிந்து வெளியில் சென்றதும், எந்த வேலையைச் செய்யவும் தயங்க மாட்டார்கள். வெறும் போலி கௌரவத்தை எண்ணிச் சோம்பேறிகளாக வாழ மாட் டார்கள். தங்கள் பிற்கால வாழ்க்கையில் மிகுந்த நம்பிக் கையுடன் இருப்பார்கள்'' என்று அழகப்பா கல்லூரி பிரின்ஸ்பல் திரு ஏ. என். தம்பி கூறியதை நான் வெறும் உபசார வார்த் தையாக எண்ணவில்லை. அவர் கூறியது முற்றிலும் உண்மை என்பதை அழகப்பா கல்லூரி மாணவர்களைப் பார்த்தவுடனேயே தெரிந்து கொள்ள முடிகிறது.

## கலைக் கல்லூரி பிரின்ஸ்பல்

அழகப்பா கலைக் கல்லூரியின் பிரின்ஸ் பலாக இருந்த திரு டி. சூரியநாராயணன் அவர்கள் ஹைதராபாத் கல்வித் துறைத் தலைவராக மாற்றப்பட்ட பின் திரு ஏ. என். தம்பி பிரின்ஸ்பலாகப் பதவியேற்றார்.

திரு ஏ. என். தம்பி சேர நாட்டில் நீண்ட நாட்கள் இருந்தவர். திருவாங்கூர் சமஸ்தா னத்தின் கல்வித்துறைத் தலைவராகப் பல காலம் பணியாற்றியவர். அவர் காலத்தில் திருவாங்கூர் ராஜ்யத்தில் பல நூற்றுக்கணக் கான ஆரம்பப் பள்ளிகளையும், உயர்தரப் பள்ளிகளையும் ஆரம்பித்து வைத்திருக்கிறார். திருவாங்கூர் மக்கள் நூற்றுக்கு நூறு படித்த வர்களாக இருப்பதற்குத் திரு ஏ. என். தம்பி யின் சேவையையும் குறிப்பிட வேண்டும். இவ்வளவு திறமையாகக் கல்வி இலாகாவின் தலைமைப் பதவியை ஏற்று நடத்தி வந்த திரு ஏ. என். தம்பி 1950-ம் ஆண்டு அந்தப் பதவியில் இருந்து ஓய்வு பெற்றார். ஓய்வு பெற்றவுடனேயே அழகப்பா கலைக் கல்லூரி யில் பிரின்ஸ்பல் பதவியை ஏற்றுக் கொண் டார். தம்முடைய நீண்ட நாள் அனுபவத்தை எல்லாம் பயன்படுத்திக் கல்லூரியை மிகச் சிறந்த முறையில் நடத்தி வருகிறார்.

திருவாங்கூர் சமஸ்தானத்தின் கல்வி இலாகா தலைவராக இருப்பதற்கு முன்னும் பலவிதமான பதவிகளை வகித்துப் பெயரும் புகழும் பெற்றவர் திரு ஏ. என். தம்பி. இன்றையதினம் அழகப்பா கல்லூரி மாண



# அமிர்தாஞ்சனம்



வலிகளுக்கு

ஒப்பற்ற

நிவாரணி




அமிர்தாஞ்சன் லிட்., சென்னை-4 இதர இடங்கள்-பம்பாய்-1 கல்கத்தா-7

AL-66-6 TAL

---

# தேனு  பாங்க்

தேவகரன் நான்ஜி பாங்கிங் கம்பெனி லிட்.

ஸ்தாபிதம்: 1938

63 காரியாலயங்களும், 14 ஸேப் டிபாஸிட் வால்ட்களும்

## சேமிப்பு சேவைகள்

★ சேவிங்ஸ் அகௌண்ட்ஸ்
வட்டி 2¼% வரை

★ காஷ் சர்டிபிகேட்டுகள்
வட்டி 3¼% வரை

★ பிக்ஸட் டிபாஸிட்டுகள்
வட்டி 3½% வரை

வெளிநாட்டுப் பரிவர்த்தனையில் உங்கள் தேவைகளை
தேனு பாங்கி மூலம் பூர்த்தி செய்து கொள்ளுங்கள்

சென்னைக் கிளை :
149, அண்ணு பிள்ளைத் தெரு, ஜி.டி.

பிரவின்சந்திர வி. காந்தி
*மானேஜிங் டைரக்டர்*

வர்களுக்கு வெறும் ஏட்டுக் கல்வியை மட்டும் அவர் போதிக்கவில்லை. நமது நாட்டுப் பண்பாட்டையும், நமது முன்னோர்களின் ஆற்றலையும் அவர்கள் செய்த விந்தைகளையும் மாணவர்கள் உணரும்படி செய்து வருகிறார்.



திரு ஏ. என். தம்பி, பிரின்ஸ்பல்

இதனால்தான் இங்குள்ள மாணவர்களைப் பார்த்தபோது வெறும்டம்பத்துக்காகவாழும் ஏட்டுக் கல்வி மாணவர்களாக நமக்குத் தோன்றவில்லை. தங்கள் முன்னோர்களையும், தங்கள் நாட்டையும் போற்றி வரும் உத்தம மாணவர்களாகவே அவர்கள் திகழ்ந்து வருகிறார்கள்.

“இதோ தேசிய மாணவர் படையைப் பாருங்கள்! கல்வியறிவோடு மன உறுதியும், உடல் வலிவும், ராணுவப் பயிற்சியும் மாணவர்களுக்கு அவசியம் தேவையல்லவா? அதற்காக மாணவர்கள் தேசிய மாணவர் படையில் சேர்ந்து ராணுவப் பயிற்சி பெற்று ஆயுதங்களை உபயோகிக்கக் கற்றுக்கொள்ளும் அதிசயத்தைப் பாருங்கள்!” என்று அடுக்கிக் கொண்டே போனார், கலைக் கல்லூரி பிரின்ஸ்பல் திரு தம்பி அவர்கள்.

மக்கள் ஆட்சி மக்களின் நலனுக்காகத் தாய் நாடு முழுவதிலும் நடந்து வருகிறது. ஆட்சிப் பொறுப்பு இப்போது மக்கள் கையில் இருக்கிறது. ஆட்சி அதிகாரப் பொறுப்புக்களில் முக்கியமான பொறுப்பு தேசப் பாதுகாப்புப் பொறுப்பாகும். ‘தேச சுதந்திரத்தையும், விடுதலையையும் பாதுகாக்கும் மகத்தான புனிதப் பணியில் தங்கள் பங்கை நிறைவேற்றி வைக்க மாணவர்கள் முன் வந்து விட்டார்கள்’ என்று தோன்றியது. மாணவர்கள் ஆயுதம் தாங்கி, அணிவகுத்து நிற்பதைக் கண்டதும், சந்தோஷத்தினால் நானும் ராணுவ நடை பயின்றேன்.

தேசியப் படையில் சேருவதினால் ஒழுங்கும், கட்டுப்பாடும், ஒற்றுமையும், தலைமை தாங்கி நடத்தும் ஆற்றலும் மாணவர்களுக்கு வளர்ந்து வருகின்றன என்று பிரின்ஸ்பல் தம்பி எடுத்துக் கூறினார்.

இப்போது நம் நாடு வறுமை, வியாதி, அறியாமை ஆகியவற்றை ஒழிக்கும் போராட்டத்தில் ஈடுபட்டிருக்கிறது. இத்தீய சக்திகளை ஒழிப்பதில் மாணவர் தேசியப் படை ஈடுபட்டால் விரைவில் தீய சக்திகள் ஒழிந்து தேசம் சுபிட்சப் பாதையில் முன்னேறி விடும் என்பதில் சிறிதும் ஐயமில்லை.



திருமதி சுதா, பிரின்ஸ்பல்

திரு தம்பியின் முயற்சியால் இங்கு ஒரு பெரிய நூல் நிலையமும் இருந்து வருகிறது. ஒவ்வொரு கல்விக்கும் வேண்டிய புத்தகங்களும் அதற்கான துணைக் கருவிகளும் ஏராளமாக இருக்கின்றன. இவ்வாறு இந்தக் கல்வி ஸ்தாபனம் வளருவதற்கு டாக்டர் அழகப்பருடன் எத்தனையோ பேர்கள் இரவு பகலாகப் பாடுபட்டு வருகிறார்கள் என்ற விவரங்களையும் பிரின்ஸ்பல் திரு ஏ. என். தம்பி மூலமாகத் தெரிந்து கொண்டேன்

கடைசியில், “ஏதோ எங்களால் முடிந்தவரையில் தொண்டாற்றி வருகிறோம்” என்று அடக்கமாகக் கூறினார் திரு தம்பி அவர்கள்.

அவரிடம் அளவற்ற ஆற்றலும் அதற்கேற்ற அடக்கமும் இருப்பதைக் கண்டு பெரிதும் வியந்தேன். எப்போதும் நிறைகுடம் தளும்புவதில்லையல்லவா? திரு ஏ. என். தம்பி நீண்ட காலம் திருவாங்கூர் ராஜ்யத்தில் இருந்ததால்தானோ என்னமோ, தமிழ் மக்களிடத்திலும் தமிழ் மொழியின்மீதும் அளவற்ற அன்புகொண்டிருக்கிறார். அவருக்குள்ள தமிழ்ப் பற்றை விளக்குவதற்கு ஒரே ஒரு சம்பவத்தைச் சொன்னால் போதும்.

திருவாங்கூர் சமஸ்தானத்தின் கல்வித் துறைத் தலைவராக இருந்தபோது நாஞ்சில் நாட்டில் கட்டாயக் கல்வியைக் கொண்டு வந்தார் திரு ஏ. என். தம்பி. அந்தத் தொண்டைப் பாராட்ட நாஞ்சில் நாட்டு மக்களின் சார்பாகக் கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை அவர்கள் திரு தம்பிக்கு ஒரு பாராட்டுப் பத்திரம் வாசித்துக் கொடுத்தார். “கவிமணியிடம் பாராட்டுப் பத்திரம் பெற்றதைவிட எனக்கு வேறு என்ன பாக்கியம் வேண்டும்?” என்று திரு ஏ. என். தம்பி பெருமையாகச் சொல்லிக் கொண்டது இன்றும் என் காதில் ஒலித்துக் கொண்டே இருக்கிறது.

தமிழ்ப் பற்றும், கல்வித் துறையில் நல்ல அனுபவமும் பெற்ற திரு தம்பியின் தலைமையில் நடைபெற்று வரும் அழகப்பா கலைக் கல்லூரி மேலும் மேலும் சிறப்புற்று விளங்கும் என்பதில் சிறிதும் சந்தேகமில்லை.

திரு தம்பி அவர்களிடம் விடைபெற்றுக் கொண்டு கிளம்பியதும், “கோட்டையூருக்குப் போவோமா?” என்று கேட்டார் உடன் வந்தவர்.

“கோட்டையூருக்கா? நமக்கு அங்கு என்ன வேலை இருக்கிறது?” என்று கேட்டேன்.

“அங்குதான் அழகப்பா பெண் கல்லூரி இருக்கிறது!”

“கோட்டையூரிலா? ஏன் காரைக்குடியில் அதற்கு இடம் இல்லையோ?”

“தற்பொழுது அதற்குக் காரைக்குடியில் இடம் இல்லை என்பது உண்மைதான். அதற்கான கட்டடம் இப்போது

தான் இங்கு கட்டப்பட்டு வருகிறது. அந்தக் கட்டடம் கட்டி முடிந்தவுடன் அழகப்பா பெண் கல்லூரி காரைக்குடிக்கே வந்துவிடும்.''

''இப்போது பெண்கல்லூரி கோட்டையூரில் நல்ல கட்டடத்தில் தான் இருக்கிறதா?''

''என்ன கேள்வி இது? அழகப்பா கல்லூரிகளுக்குள்ளேயே மிக நல்ல கட்டடத்தில், அரண்மனையிலேயே இருப்பது அழகப்பர் பெண் கல்லூரி ஒன்றுதான். அதை நேரில் பார்த்தால்தான் உண்மை விளங்கும்.''

இதைக் கேட்டதும் எனக்கு அழகப்பா பெண்கள் கல்லூரியை உடனே போய்ப் பார்க்க வேண்டும் என்ற ஆவல் ஏற்பட்டு விட்டது.

## அழகப்பா பெண்கல்லூரி

நாற்பது ஆண்டுகளுக்கு முன்னால் நம்முடைய ஒப்புயர்வற்ற கவிஞராகிய சுப்பிரமணிய பாரதியார் பாரத நாட்டுப் பெண்கள் இருந்த நிலையை எண்ணி எண்ணி மனம் நொந்தார். அவர்கள் விடுதலை அடைவதற்கு வழி இல்லையா என்று நைந்து நைந்து உருகினார். பொது வாழ்விலும், கல்வித் துறையிலும் பெண்கள் ஆண்களுக்குச் சமமாக முன்னேற வேண்டும் என்பதற்காக, ''பெண்மை வாழ்கவென்று கூத்திடுவோமடா!'' என்ற விடுதலைச் சங்கை முழங்கினார்.

உடனே அவருக்குப் பெண்கள் விடுதலை அடைந்து மேன்மை நிலை அடைந்து விட்டது போன்ற உணர்ச்சி ஏற்பட்டு உற்சாகம் மேலிட்டு விட்டது. தமிழ் நாட்டில் புதுமைப் பெண்கள் தோன்றி வளர்வதைக் கண்டார்.

''போற்றி போற்றி
ஓராயிரம் போற்றிநின்
பொன்னடிக்குப்
பல்லாயிரம் போற்றிகாண்!''

என்று புதுமைக் கவி பாரதியார் புதுமைப் பெண்ணுக்குப் போற்றி கூறினார். இவ்விதம் மகாகவியினால் பாமாலை சூட்டப்பெற்ற புதுமைப் பெண்கள் இந்த நாட்டில் தோன்ற வேண்டாமா? அதற்காகவே டாக்டர் அழகப்பர் காரைக்குடியில் பெண்கள் சங்கம் ஒன்றும் ஆரம்பித்திருக்கிறார்.

இந்திய சர்க்கார் நிதி மந்திரியாக இருந்த திரு சிந்தாமணி துவாரகநாத் தேஷ்முக் அவர்களால் 1954-ம் ஆண்டு அழகப்பா பெண் கல்லூரி ஆரம்பித்து வைக்கப்பட்டது. இப்பொழுது இந்தக் கல்லூரியில் இண்டர்மீடியட் வரை சொல்லிக் கொடுக்கப்படுகிறது. 1957ம் ஆண்டில் பட்டப் பரீட்சைகள் ஏற்படலாம் என்று எதிர்பார்க்கப்படுகிறது.





அழகப்பா பெண் கல்லூரியை எங்கு வைத்து நடத்துவது என்று புரியாமல் தவித்துக் கொண்டிருந்தபோது டாக்டர் அழகப்பர் கோட்டையூரில் உள்ள தம்முடைய அரண்மனை போன்ற பங்களாவையே அந்தக் கல்லூரிக்காகக் கொடுத்து விட்டார். கல்லூரியின் கட்டடத்துக்குள் நுழையும் போதே கல்லூரி பிரின்ஸ்பல் மிஸ் எஸ். சுதா மிகுந்த உற்சாகத்துடன் வரவேற்றார். மிஸ் எஸ். சுதா எம். ஏ., பி. டி., அவர்கள் சென்னை திருவல்லிக்கேணி தேசியப் பெண் உயர்தரப் பாடசாலையில் உபாத்தியாயராகவும், பெண் க்ஷேமநல உதவி அதிகாரியாகவும் தொண்டாற்றியிருக்கிறார். பெல்லாரி, அனந்தப்பூர், திருச்சி, கோவை, சேலம், நீலகிரி முதலிய இடங்களில் பெண் க்ஷேமநல உதவி அதிகாரியாகப் பணியாற்றியிருக்கிறார். இவ்வாறு பல இடங்களில் சேவை செய்த அனுபவத்துடன், கல்வித் துறையில் தொண்டாற்ற வேண்டும் என்ற உற்சாகமுடையவராகவும் இருக்கிறார். எனவே அழகப்பா பெண் கல்லூரி அவர் காலத்தில் நமது ராஜ்யத்திலேயே சிறந்த கல்லூரியாகத் திகழும் என்று நிச்சயம் எதிர்பார்க்கலாம்.

அமைதியான சூழ்நிலையில் அரண்மனை போன்ற மாளிகையில் அமைந்திருக்கும் பெண் கல்லூரியில் இருந்து திரும்பிய பொழுது எனக்கு ஒரு எண்ணமே மேலோங்கி யிருந்தது. இந்தக் கல்லூரியை விட்டு வெளியேறும் எத்தனையோ பெண்மணிகள் விஜயலக்ஷ்மி பண்டிட்களாகவும், சரோஜினி தேவிகளாகவும், கஸ்தூரிபாக்களாகவும் உலகம் புகழும்படி விளங்கப் போகிறார்கள் என்பதில் சந்தேகமில்லை.

''தமிழ் நாட்டுப் பண்பு கெடாமல் பெண்கள் பட்டப் படிப்பும் பெறவேண்டும் என்பதுதான் டாக்டர் அழகப்பரின் நோக்கம்'' என்றார் பிரின்ஸ்பல் மிஸ் சுதா.

ஆமாம்; பெண்கள் படித்தால் மட்டும் போதுமா? நமது பண்பாடு அல்லவா முக்கியம்? அதற்கான முறையில் கல்லூரியை அமைத்து நடத்திவரும் அழகப்பருக்குத் தமிழ்நாட்டுப் பெண்மணிகளின் சார்பாக என் நன்றியைத் தெரிவித்து விட்டுக் கோட்டையூரிலிருந்து புறப்பட்டேன்.

''இன்னும் எத்தனை கல்லூரிகள் பார்க்க வேண்டும்?'' என்று கேட்டேன்.

''இரண்டு கல்லூரிகள் இருக்கின்றன.''

''சரி; அவைகளையும் பார்த்து விடுவோம். புறப்படுங்கள்'' என்றேன். கார் காரைக்குடியை நோக்கிப் பறந்தது.

(அடுத்த இதழில் முடியும்)

அவள் அழகில் வெற்றி இருக்கிறது — அவள் அழகில் ஒரு இரகசியம் இருக்கிறது

"நான் வத்னியை உபயோகிக்கிறேன்"
என்று மதுபாலா கூறுகிறார்.

"மூன்று நல்ல காரணங்களுக்காக:

அது கடைசி செதிள்வரை புதுமையும் நறுமணமுமுள்ளது.

அது உயர்ந்த ரகமும் ஸ்வதேசியுமானது.

அது கோத்ரெஜினால் தயாரிக்கப்பட்டது"

மதுபாலா மேலும்
கோத்ரெஜ்
டாய்லெட் பவுடர்
கூந்தல் தைலம்
சலவை சோப்புத் தூள்களை
உபயோகிக்கிறார்

"அவைகள் மிகவும் நம்பகமானது" என்று கூறுகிறார்.



100% இந்திய
நிர்வாகம்
மூலதனம்




நீங்கள் விரைவில் "ராஜ் ஹத்" என்ற படத்தில் மதுபாலாவைக் காண்பீர்கள்.

Godrej கோத்ரெஜ் வத்னி*
ரிஜிஸ்டர்டு
சாவி மார்க்

வத்னி 'பேபி' விலை 2½ அணாதான்

*"தாய்நாடு" என்று அர்த்தங்கொண்ட 'வதன்' என்ற வார்த்தையிலிருந்து திரிபு பெற்றது.

# கிறிஸ்து பிறந்தார்

இன்னும் இரண்டொரு நாளில் கிறிஸ்து பிறந்த புண்ணிய தினத்தை உலகெங்கும் கொண்டாடப் போகிறார்கள். புண்ணிய தினந்தான்; கிறிஸ்தவர்களுக்கு மட்டுமில்லை, மனிதனுடைய ஆத்ம பலத்தில் நம்பிக்கையும், இறைவனிடத்தில் உண்மையான ஈடுபாடும் உடைய எல்லோருக்கும் ஆறுதல் அளிக்கும் நாளே அது.

கிறிஸ்து பிறந்தார். சுமார் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன், பாலஸ்தீனம் என்ற நாட்டில், பெதலேம் என்ற ஊரில், மாட்டுக் கொட்டில் ஒன்றில், மார்கழிப் பனி இரவில், இயேசு என்ற தெய்வ மதலை பிறந்தது; வளர்ந்தது. மனிதனுடைய உள்ளத்தில் பரலோக ராஜ்யத்தை வளர்த்தது; தேவகுமாரன் என்று, துன்பத்தில் உழன்ற ஏழை மக்கள் பலரால் ஏற்றுக் கொள்ளப் பெற்றது. கடைசியில், சிலுவையில் அறையப் பெற்று, வேதனையை அமைதியோடு தாங்கி, 'மனிதனுக்கு உய்வு உண்டு' என்பதற்குச் சாட்சியாக, அந்த உய்வைத் தேடித் தந்த தியாக மூர்த்தியாக, அந்த அற்புத வடிவம் மறைந்தது. பிறகு, உயிர் பெற்று எழுந்து 'வானத்திலும், பூமியிலும் சகல அதிகாரமும் எனக்குக் கொடுக்கப்பட்டிருக்கிறது' [1] என்று, தன்னை நம்பியவர்க்கு உறுதி கூறி, பரலோகத்திற்குத் திரும்பியது. [2] பிறந்தது, சிலுவையில் மறைந்தது, உயிர்த்தெழுந்தது—மூன்று நிகழ்ச்சிகள். இம்மூன்றை ஒட்டியும், இவற்றின் இடையில் இருந்த கால வெளியிலும், நெய்யப் பெற்ற கருணை அம்பரமே இயேசு கிறிஸ்துவின் வரலாறு என்று சொல்லலாம்.

கிறிஸ்தவ வேதமாகிய பைபிளில் [3] புதிய ஏற்பாட்டில் இந்த வரலாறு இடம் பெறுகிறது. மத்தேயு, மாற்கு, லூக்கா, யோவான் ஆகிய நால்வர், இவ்வரலாற்றை நேரடியாகத் தருகிறார்கள். ஒரே வரலாறுதான், இயேசு கிறிஸ்து என்ற ஒருவருடைய வாழ்க்கைச் சரித்திரந்தான், இந் நால்வராலும் தரப்படுகிறது. இயேசுவின் வாழ்க்கையில் முக்கியமான சம்பவங்களைப் பற்றி, நால்வரும் பொதுவாக ஒரேபடித்தாகத்தான் பேசுகிறார்கள். என்றாலும், அந்த வரலாறு, பேசுகின்ற ஒவ்வொருவருடைய உள்ளத்திலும் தோய்ந்து வருவதால், அவர் அவருடைய பக்குவத்திற்கு ஏற்றபடி, தனி வண்ணம் பெறுகிறது. அதே சமயத்தில், இயேசு என்ற தனி மனிதன் ஒருவருடைய இதயத்தை, பேசுகின்ற நால்வரும் மிகத் தெளிவாகக் காட்டுகிறார்கள். அதிலே வேற்றுமை இல்லை. அப்படிக் காட்டும்போது, தங்களையும் இனம் காட்டிக் கொள்ளுகிறார்கள்.

வேறு என்னதான் செய்ய முடியும்? 'இந்தக் கூடையில் எத்தனை கத்திரிக்காய்?' என்று எண்ணிக்கை தெரிந்த நாலுபேரைக் கேட்கிறோம். 'நூறு' என்று சொல்கிறார்கள். அதோடு கதை முடிந்தது. அவர்களுடைய உள்ளக்கிடக்கை என்ன என்பதை இந்தக் கத்திரிக்காய்க் கணக்கு காட்டப் போவதில்லை. ஆனால்மனித இதயம் ஒன்றைச்

---

1. மத்தேயு. அதி. 28., 18. 2. மாற்கு. அதி. 16., 19.
3. 'பைபிள்' என்ற சொல்லுக்கு, கிரேக்க மொழியில் 'புத்தகம்' என்ற பொருள்.

பேராசிரியர் அ. சீநிவாசராகவன்

சொல்லிலே வடித்துக் காட்ட ஒருவன் முற்படும்போது, தன்னுடைய இதயத்தையும் அதோடு ஒட்ட வைத்துக் கொள்ள வேண்டி இருக்கிறது. கிறிஸ்துவின் இதயத்தோடு ஒட்டி நின்று தான், மத்தேயுவோ, யோவானோ, அதைச் சொல்லிலே நமக்குத் தர முடியும். அப்படி ஒட்டி நின்று அவர்கள் பேசும்போது, பேசுவது இயேசு கிறிஸ்துவைப் பற்றித்தான் என்றாலும், தம்மையும் அறியாமல் அங்கங்கே தமது பாங்கையும் வெளியிடுகிறார்கள். இதனால் அவர்கள் பேசுகின்ற உண்மை எந்த அளவிலும் குறையவில்லை. ஒரே உண்மையைத் தான் காண்கிறோம்; ஆனால் நான்கு உள்ளங்களின் மூலமாகக் காண்கிறோம். அதாவது, அவர்கள் பேச்சு இலக்கியமாகிறது. அதோடு, இயேசு என்ற ஒருவருடைய மிக மிக அருமையான அன்பு இதயம் அந்தப் பேச்சின் மூலமாக நமக்குக் கிடைப்பதால், பேச்சு உயர்ந்த இலக்கியம் ஆகிறது. மனித உள்ளத்தின் சொல் வடிவமே இலக்கியம், பேசப்படும் உள்ளத்தின் தன்மை உயர உயர இலக்கியமும் சிறந்ததாகிறது.

பைபிளில் உள்ள எத்தனையோ செய்திகளை வைத்துக்கொண்டு, இயேசுவின் இதயத்தை நம்மால் தொட்டுப் பார்க்க முடிகிறது. ஏழைகள், பாபம் புரிந்தவர்கள், துயரத்தில் அழுந்தியவர்கள், தீராப் பெருநோயில் துடித்தவர்கள் இவர்களிடையே அவர் வாழ்ந்தார். அவருடைய அற்புத சக்தியினால் ஊமை பேசினான், குருடன் விழி பெற்றான், வாத நோயால் முடங்கியவன் எழுந்து நடந்தான், குஷ்டரோகி குணமடைந்தான். இப்படி எத்தனையோ. வேறொரு விதத்திலும் அவர் மக்களுக்கு ஆறுதல் அளித்தார். இந்த உலகத்துத் துன்பத்தையும், சோர்வையும், தோல்வியையும் கண்டு கலங்காமல் அவற்றின் மத்தியிலேயும், சலனமில்லாமல் வாழ்வதற்கு முடியும், வாழவேண்டும் என்று மனிதனுக்கு அவர் காட்டினார். எப்படி? அவர் பேசுவதைக் கேட்போம்:

ஒரு பிடி சோற்றுக்கும், நாலு முழத் துண்டுக்கும், நாள் முழுதும் ஓயாமல் போராடிச் சிறுமைப்படும் நம்மைப் பார்த்துத் தான் பேசுகிறார்:

'என்னத்தை உண்போம், என்னத்தைக் குடிப்போம் என்று உங்கள் உயிருக்காகவும், என்னத்தை உடுப்போம் என்று உங்கள் உடலுக்காகவும், கவலைப்படாது இருங்கள். உணவைவிட உயிர் அருமையானதல்லவா? உடையைவிட உடல் உயர்ந்ததல்லவா?' [4] உணவுக்காகவும், உடைக்காகவும் உயிரையும் உடலையும் பணயம் வைத்து இழந்து விட்டால், பிறகு உணவு எதற்கு? உடை தான் எதற்கு? சரிதான். உணவும் உடையும் வேண்டாமென்று இருக்க வேண்டும், அது முடிகிற காரியமா? வேண்டாம் என்று யார் சொன்னது. அவற்றைத் தேடிப் பெறுவதே ஜன்ம சாபல்யம் என்று எண்ணுவதுதான் தவறு. மனிதர்கள் மட்டும், எப்படி வாழ வேண்டுமோ அப்படி வாழக் கற்றுக்கொண்டு விட்டால், உணவும் உடையும் கிடைப்பதுதானா பிரமாதம்?

'காற்றிலே வரும் பறவைகளைப் பாருங்கள். அவை விதை விதைப்பதில்லை, கதிர் அறுப்பது மில்லை, களஞ்சியத்தில் ஒன்றையும் சேமித்து வைப்பதுமில்லை. அவற்

4. மத்தேயு, அதி. 6., 25.



றையும் உங்கள் பரம பிதா உணவு தந்து அளிக்கிறார். இப்பறவைகளைவிட, உங்கள் மதிப்பு உயர்ந்ததுதானே, இல்லையா? அப்படித்தான் கவலைப்பட்டீர்கள், அதனால் உங்களில் யாராவது ஒரு முழம் வளர்ந்தது உண்டா?

உடைக்காக ஏன்கவலைப்படுகிறீர்கள்? அதோ, காட்டு மலர்கள், அவை வளர்வதைப் பாருங்கள். அவை உழைப்பதில்லை, நூற்பதுமில்லை. என்றாலும், தன் பெருமை அவ்வளவோடும் விளங்கிய சாலொமோன்கூட, அம்மலர்களில் ஒன்றைப் போல உடை அணிந்த துண்டா, இல்லை. [5]

உண்மைதான். அப்படியானால் என்ன செய்ய வேண்டும்? 'என்னத்தை உண்போம், என்னத்தைக் குடிப்போம், என்னத்தை உடுப்போம் என்று கவலைப் படாதிருங்கள்...

இவையெல்லாம் உங்களுக்குத் தேவை என்பது உங்கள் பரம பிதாவுக்குத் தெரியும். இறைவனுடைய நாட்டையும், அவனுடைய நீதியையும் முதலில் தேடுங்கள். அப்போது, இவை யெல்லாம் உங்களுக்குக் கிட்டும்.' [6]

5. மத்தேயு. அதி. 6., 26—29. சாலொமோன் என்பவன் பேரரசனாக வாழ்ந்தவன்.
6. மத்தேயு. அதி. 6,. 31—33.

இப்படியாகக் கடவுளிடம் தளராத நம்பிக்கை வைத்து வாழ்வதுதான் வாழ்வு என்பதை இயேசு கிறிஸ்து வற்புறுத்தினார். உலகத்தில் உள்ள எல்லாப் பொருள்களைப் பெற்றும், ஒருவன் தன் ஆன்மாவை இழந்தால், அவன் ஒன்றையும் பெறவில்லை என்பதை எடுத்துக் காட்டினார். இறைவனுடைய கருணை அலகில்லாதது, அதை நம்பியவர் ஈடேறுவது உறுதி என்று கூறினார். இந்த நம்பிக்கையின் விளைவு, அதன் அடையாளம், எல்லா மனிதரிடத்திலும், பகைவரிடங்கூட அன்பு பாராட்டுவதே என்று பேசினார். இதை அவரே சொல்கிறார், கேட்போம் :

'உங்கள் பகைவரிடத்து அன்பு செலுத்துங்கள்; உங்களை வெறுப்பவர்களுக்கு நன்மை செய்யுங்கள்; உங்களை நிந்தித்து, துன்பப்படுத்துகிறவர்களுக்கு நலம் விளையப் பிரார்த்தனை புரியுங்கள்.

இப்படிச் செய்வதனால், பரலோகத்தில் உள்ள உங்கள் பிதாவின் புத்திரர்கள் ஆகிறீர்கள். அவர் ஆணையால், நல்லோருக்கும், தீயோருக்கும் ஒன்றாக ஒரே சூரியன்தான் எழுகிறான்; நீதியில் நிற்போருக்கும், அது பிறழ்ந்தாருக்கும் ஒன்றாகத்தான் மழை பொழிகிறது.' [7]

இக்கருத்துக்களை, வெறும் கருத்துக்களாக மட்டும் இயேசு கிறிஸ்து தருவதில்லை. அழகிய உவமைகள், வைரமணி போல் ஒளிவீசும் உருவகக் கதைகள், இவற்றின் மூலமாக, கருத்துக்களை நெஞ்சிலே கலக்கும் அனுபவமாக அவர் தருகிறார். இது கவிஞனுடைய வழி. இதனால்தான் இயேசு கிறிஸ்துவின் சொற்கள் — அவை அளிக்கும் ஞானம் ஒருபுறம் இருக்க — சிறந்த இலக்கியத் தன்மை பெற்றுத் திகழ்கின்றன.

இந்த இலக்கியத்துக்கு இலக்கணமாக அவர் வாழ்ந்தார். சிலுவையில் அவரை அறைந்தபோது, அந்த அன்பு வடிவம் பேசியது என்ன?

'பிதாவே, இவர்களை மன்னியும். தாங்கள் செய்வது இன்னது என்று அறியாதிருக்கிறார்களே.' [8]

தம்மைப் பற்றிக் கவலை இல்லை. தம்முடைய மரண வேதனையைப் பற்றிய நினைவே இல்லை. தம்மை வருத்துகின்ற மக்களுடைய அறியாமையை எண்ணுகின்ற பரிவு; அவர்களை இறைவன் மன்னிக்க வேண்டும் என்று இறைஞ்சுகின்ற கருணை; எந்த நிலையிலும், அவனை நோக்கித் திரும்புகின்ற நம்பிக்கை, இவற்றைப் பேசுகின்றன இயேசுவின்

7. மத்தேயு. அதி. 5., 44 - 45.
8. லூக்கா, அதி. 23., 34.

அவதார புருஷரான ஏசுநாதரின் திருவுருவமே இவ்விதழ் அட்டையை அலங்கரிக்கிறது.

GIFT COUPON

5 LBS.

OK

6 POINTS

# பார்த்து வாங்குங்கள்.

இந்த மாதிரி

# இனாம் பரிசுக் கூப்பன்

நீங்கள் வாங்கும்






## ஓ.கே. வனஸ்பதி

டின்களில் உள்ளதா என்று
நன்கு கவனித்து வாங்குங்கள்

1 பவு., 2 பவு., 5 பவு., 10 பவு.,
லீவர்–லிட் டின்களில் கிடைக்கின்றன.

உங்கள் அருகிலுள்ள 'ஓ.கே.' வியாபாரி
உங்களுக்கு உதவி செய்ய இருக்கிறார்

குடும்பத்திலுள்ள பெண்கள் கவனிக்கவும்: இந்தப் பரிசுத் திட்டம் உங்கள் லாபத்திற்காகவே ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. உங்களுக்குத் தேவையான ஒரு பூரண ஸெட் பாத்திரங்களை நீங்கள் இனாமாகப்பெறும்வரை இது நீடிக்கும். டின்னில் கூப்பன் இருக்கிறதா எனக் கவனியுங்கள். இல்லையென்றால், ''ஏன் இல்லை''? என்று கடைக்காரரிடம் விசாரியுங்கள்.




தி ஈஸ்ட் ஏஷியாடிக் கம்பெனி (இந்தியா)
பிரைவேட் லிமிடெட், மதராஸ் - 1

EP

## குடும்பத்தில்

## ஓர்

## அறிவாளி



வீட்டில் ஒரு
ரேடியோ இருக்
தால், குடும்பத்தில்
ஒரு 'அறிவாளியும்'
இருப்பார்—அதைக்
கெடுப்பதற்கு! ஆனால்.
அது ஒரு பிலிப்ஸ் செட்
டாக இருந்தால் உங்
கள் வியாபாரியின்
யோசனையை நாடுங்கள்
பிலிப்ஸ் வியாபாரிக்கு உங்களுடைய
ரேடியோவைப்பற்றி நன்றாகத் தெரியும்.
அவரிடம் 'பிலிப்ஸ் ஸர்வீஸ் மான்யுவல்'
என்ற புத்தகமும், சரியான பழுதுபார்க்கும் கருவிகளும்
உண்மையான தனி உறுப்புக்களும் இருக்கின்றன.

எனவே உங்கள் ரேடியோவுக்கு மேற்பார்வை தேவைப்பட்டால் . . .

**. . . அதை உங்கள் பிலிப்ஸ் வியாபாரியிடம்
ஒப்படைத்து விடுங்கள்**



பிலிப்ஸின் விற்பனையும் சேவையும் ஒருங்கே கைகோர்த்துச் செல்கின்றன. பிலிப்ஸ் ரேடியோ தொல்லையற்ற சேவையை அளிக்கிறது. அதன் தயாரிப்பின் ஒவ்வொரு நிலையிலும் அது நன்கு பரிசோதிக்கப்படுகிறது. பிலிப்ஸ் ரேடியோ எங்கு விற்கப்பட்டாலும், அதை எல்லா இடத்திலும் பழுதுபார்த்துக் கொள்ளலாம்.



**பிலிப்ஸ்** ரேடியோ

பிலிப்ஸ் எலக்டிரிகல் கம்பெனி (இந்தியா) பிரைவேட் லிட்

PS.PH 205

கடைசிச் சொற்கள். இவற்றையே பேசு கிறது அவர் வாழ்க்கை. இந்த வாழ்க் கையின் மேன்மையை வடித்துத் தரும் பைபிள்—புதிய ஏற்பாடு சிறந்த இலக் கியமாகத் திகழ்வதில் வியப்பு என்ன?

இந்த இலக்கியத்திலிருந்து எத்த னையோ காவியங்களும், பாடல்களும் பல மொழிகளில் தோன்றின. இன்றும் தோன்றி வருகின்றன. சமீப காலத்தில் இருந்த ஆங்கிலக் கவிஞர் எழுதிய பாடல் ஒன்று நினைவுக்கு வருகிறது. 'கிறிஸ்து சிலுவையில் மறைந்துஎத்தனை நூற்றாண்டுகள் கழிந்து விட்டன? ஆயி னும், [9] கல்வாரி மலையில் எதற்காக வேதனையை ஏற்றாரோ அந்த நோக்கம் நிறைவேறி விட்டதா என்றால், அது தான் இல்லை. மனிதர்கள் எல்லோரும் உலகப் பொருள்களின் பந்தத்திலிருந்து விடுபட்டு, உள்ளத்தில் ஆண்டவ னுடைய அரசுக்கு இடம் தந்து விட்டார் களா? இல்லை. பாபம் செய்யாமலிருக்க, தருமத்திலேயே ஊன்றி நிற்கக் கற்றுக் கொண்டு விட்டார்களா? அதுவும் இல்லை. இறைவனை நோக்கி, கோடிக் கணக்கான உள்ளங்கள் இன்னும் திரும்பவேண்டி இருக்கிறது. பாபங்கள். அவை என்றுதான் மறையுமோ, அப் படிக் காடாக மண்டிவிட்டன. கிறிஸ்து, இறைவன் திருக்குமரன், அவர் மண் ணிலே தோன்றி மறைந்து எவ்வளவோ காலம் ஓடிவிட்டது. என்ன செய்வது?' என்று எண்ணமிடும் கவிஞர் முன்னே, முள்ளால் ஆன கிரீடம் அணிந்து — அதைத்தானே அவரைச் சிலுவையில் அறைந்தபோது அவருக்குச் சூட்டினார் கள்! — இயேசு கிறிஸ்து நடந்து செல் கிறார். பிறகு? பாட்டைப் பார்ப்போம்:

> என்முன் முள்முடி சூடிச் சென்றனன்
> இறைவன் திருக்குமரன்.
> 'இன்னமும் முடிய வில்லையோ, ஐயா
> ஏற்ற துயர்?' என்றேன்.
> நொந்த விழியால் நுவல்வான்: 'ஒவ்வொரு
> உயிருமேன் கல்வாரி
> எந்தப் பாபமும் இன்றுமேன் சிலுவை
> இதனை அறிந்திலையோ?

ஆம், காக்கப்பட வேண்டிய ஒவ்வொரு உயிருக்காகவும் கிறிஸ்து இன்றும் கல் வாரி மலை ஏறுகிறார்; மனிதன் இயற்றும் ஒவ்வொரு பாபச் செயலும் அவரை வருத்தும் சிலுவையாகிறது. எளிமை யான, ஆனால் அருமையான பாடல்.

இறைவனை நோக்கித் திரும்புகின்ற உள்ளங்களும் இல்லாமல் இல்லை. புயல்

9. கல்வாரி என்ற மலையின் மேலேதான் இயேசு கிறிஸ்து சிலுவையில் அறையப் பெற்றார். இப் பாடலை எழுதியவர் ரேச்சல் அன்னந்த் டேலர் என்ற கவிஞர்.

சீறுகிறது; கடல் கொந்தளித்து விம்முகிறது; கப்பல் நிலை தடுமாறித் தத்தளிக்கிறது. கப்பலில் கார்டினல்நியூமன்[10] என்ற ஆங்கில அறிஞர் இருக்கிறார். எந்த நேரத்திலும் கப்பல் கவிழ்ந்து விடக்கூடும் என்பது அவருக்குத் தெரிகிறது. சாவு வரலாம். அடுத்த கணம் வரலாம்; ஆனால் அது பெரிய காரியமில்லை. சாவதற்குள், கடவுளுடைய திருவுள்ளத்தின்படி நடக்கக் கற்றுக் கொண்டோம் இல்லையே என்ற கவலை தான் அவர் நெஞ்சை வாட்டுகிறது. மனம் போனபடி உலகப் பொருளிலே வாழ்க்கையைப் படரவிட்டு, என்னத்தைக் கண்டுவிட்டோம், பரலோக ராஜ்யம் என்ற வீட்டை விட்டு நெடுந் தூரம் நடந்து வந்து விட்டோம். இப்போது சுற்றிலும் காரிருள் இரவு. இதிலிருந்து ஈடேறுவதுதான் எப்படி? தன்வழியே பிடிவாதத்தோடு சென்ற உள்ளத்தையும், இதுவரை காத்து வந்த பேரருள் இப்போது இல்லாமலா போய்விட்டது? அந்த அருட்சுடர் வழிகாட்டும், இருள் விலகும், முன் என்றோ நேசித்து இடையிலே மறந்திருந்த ஆண்டவனுடைய அமர கணங்களின் முகத்தில் அன்பு முறுவல் மலரும் என்ற நம்பிக்கையோடு, இறைவனுடைய அருளொளியைத் தனக்கு வழிகாட்ட அழைக்கிறார்:

சூழ்ந்திடும் இருளில் உழல்கிறேன் அன்புச்
  சுடரொளியே வழி காட்டு.
பாழிருள் இரவிது வீடோ தொலைவினில்
  பரிவொளியே வழி காட்டு.

பாதையின் முடிவில் உள்ளதோர் காட்சி
  பார்த்திட வேண்டிலேன்; இங்கென்
பாதம் பெயர்த்திட ஓரடி போதும்
  பரஞ்சுடரே வழி காட்டு.

என்னை நீ அழைத்துச் செல்லென நின்னை
  ஏழையேன் இறைஞ்சிய தில்லை.
என்றுமே முரடாய் என்வழி சென்றேன்
  என்னினும் வழியினைக் காட்டு

பகட்டொளி உலகப் படரிலே படர்ந்தேன்
  பயம் எனைப் பற்றிய போதும்
அகம்பிடித் தலைந்தேன்; அதையெல்லாம் எண்ணா(து)
  அருட் சுடரே வழி காட்டு.

இன்றளவு என்னைக் காத்ததுன் ஆற்றல்
  இன்னமும் அது வழி காட்டும்
குன்றிலும் சேற்றிலும் காட்டிலும் மேட்டிலும்
  கூட வந்தே கரை ஏற்றும்.

சென்றிடும் இரவு. சேர்ந்திடும் உதயம்.
  தேவ நின் தூதரின் முறுவல்
என்றோ இழந்தது இன்று என்முனே மலரும்:
  எழிற்சுடரே வழி காட்டு.

கிறிஸ்து பிறந்த புண்ணிய தினத்தன்று, இறைவனை நம்புகின்ற அனைவரும், எச்சமயத்தவராயினும், இந்தப் பாடலைப் பாடலாம். 'அவன் அருளாலே அவன்தாள் வணங்கி' என்று எண்ணி, அவனை நோக்கித் திரும்பினால், அந்தக் கருணைச் சுடர் வழிகாட்டாமலா போகும்?

குறிப்பு: இக் கட்டுரை, இயேசு கிறிஸ்துவுக்கும், அவர் வரலாற்றில் மலர்ந்த இலக்கியத்துக்கும் தமிழன் ஒருவன் செலுத்தும் அஞ்சலி. கட்டுரையில் உள்ள மொழிபெயர்ப்புப் பகுதிகள் எல்லாம் ஆங்கில மூலத்திலிருந்து எழுதப் பெற்றவை. அவற்றில் தவறு ஏதாவது இருந்தால், அதற்கு நானே பொறுப்பு. கிறிஸ்தவ மதக் கோட்பாடுகளுக்குப் பொருந்தாத கருத்து ஏதாவது இங்கே தோன்றி இருந்தால், என் அறியாமையே அதற்குக் காரணம் என்று எண்ணி, கிறிஸ்தவ சகோதரர்கள் மன்னிப்பார்களாக.

10. ஜான் ஹென்ரி நியூமன். பத்தொன்பதாம் நூற்றாண்டில் வாழ்ந்தவர். கத்தோலிக்க மார்க்கத்தில் உயர்ந்த பதவிகளுள் ஒன்றான கார்டினல் என்ற பதவியை வகித்தவர்.

படர் - துன்பம். இறைவனைத் தேவன் என்றும், அவனுடைய அமர கணங்களைத் தேவ தூதர் என்றும் அழைப்பது கிறிஸ்தவ மரபு.




எந்த
சந்தர்ப்-
பத்திற்கும்
சிறந்த
அன்பளிப்பு




அளிப்பவருக்கும் பெறுபவருக்கும் பெருமை அளிக்கும் வெகுமதி. வாலிபருக்கும் வயோதிக ருக்கும் கல்வியும், கேளிக்கையும் அளிக்கும் வற்றாத ஊற்று. பிரகாசமான பிம்பம் விழ டிலக்ஸ் வ்யூ மாஸ்டரில் தக்கதோர் ஒளி ஏற்பாடு அமைந்திருக்கிறது. 9 பொறுக்கி எடுக்கப்பட்ட ரீல்கள் (மூன்று பாக்கெட்டுகளில்) இலவசம். பெருமை தரும் அழகிய வெகுமதிப் பெட்டி இதற்கு அதிகச் செலவு இல்லை.




(உள்ளூர் வரி தனி)

வியாபாரிகள் இல்லாத இடங்
களில் வியாபாரிகள் தேவை

# VIEW-MASTER®
# வ்யூமாஸ்டர்

குடும்பத்திற்கு கேளிக்கை

முழு விவரங்களுக்கு எழுதவும்.

**பட்டேல் இந்தியா**
**(பிரைவேட்) லிட்.**
190, ஹார்ன்பி ரோடு, பம்பாய்-1
கிளைகள் : புது டில்லி, கல்கத்தா, மதராஸ்



SHILPI P.I. 403 A TAL.

# பாமாவின் பிரயாணம்

நா. ராமச்சந்திரன்

கோபுவுக்கு உள்ளம் ஜில்லிட்டு விட்டது. இந்தக் கார்த்திகைத் திருநாளை இரண்டு நாட்கள் என்று வகுத்தவர்கள் மீது அவனுக்குக் கோபம் கோபமாக வந்தது. யார் மீது கோபப்படுவது என்றுதான் அவனுக்குத்தெரியவில்லை தன்னுடைய உள்ளத்தோடு அவன் போராடிக் கொண்டிருந்தான்.

அத்தை பெண் பாமா கார்த்திகையையொட்டி ஊருக்கு வந்திருந்தாள். பாமா வீட்டில் இருப்பதே குத்து விளக்கு ஏற்றி வைத்திருப்பது போலத்தான் கோபுவுக்கு இருந்தது. அவளுடைய அழகை அன்னத்தோடும் மயிலோடும் சம்பந்தப்படுத்தி அநுபவித்துக் கொண்டிருந்தான் அவன். அவள் குரலுக்கு உவமை சொல்லுவதற்கு அவனால் முடியவே இல்லை.

கார்த்திகைக்கு முதல் நாள் பாமா ஊரிலிருந்து வந்து சேர்ந்தாள். அன்றையதினமே கோபுவின் உற்சாகம் அளவுகடந்ததாயிருந்தது. ஒன்று, இரண்டு என்று நாட்கள் சிட்டாய்ப் பறந்து விட்டன.

மூன்றும் நாளன்று, மாம்பலத்திலிருக்கும் பாமாவின் சித்தப்பா கும்பகோணம் வரப் போவதாகவும் அவருடன் கூடப் பாமாவை அனுப்பி வைக்கும்படியும் பாமாவின் தந்தையிடமிருந்து கடிதம் வந்தது. கடிதத்தைப் படித்தவுடன் கோபுவுக்குச் சப்த நாடியும் ஒடுங்கி விட்டது. 'கார்த்திகைத் திருநாளை முன்னிட்டுப் பாமா வீட்டுக்கு வந்து இன்னும் மூன்று நாட்கள் கூடப் பூர்ணமாக ஆகவில்லை. அதற்குள் அவள் ஊருக்குக் கிளம்ப வேண்டுமாமே!'

சென்ற வருஷம் பாமா நவராத்திரிக்காக வந்திருந்தாள். அவளுடைய அழகில் மயங்கிக் கோபு தேன் குடித்த நரியாகி விட்டான். சதா 'பாமா, பாமா' என்று அவளையே சுற்றிக் கொண்டிருந்தான். ஒருநாள் பாமா நிலைக்கண்ணாடியின் முன் நின்று தன்னைச் சிங்காரித்துக் கொண்டிருந்தாள். கும்பிருட்டில் பிரகாசிக்கும் வர்ண விளக்கைப்போல அன்று அவள் விளங்கினாள். பாமா இயற்கையிலேயே நல்ல அழகி. அதன்மீது செயற்கை அலங்காரம் கண்களையும் கருத்தையும் கவருவதாக இருந்தது.

அன்று அவள் சிவப்பு நிற உடையால் தன்னை அலங்காரம் செய்து கொண்டிருந்தாள். சிவப்பு நைலான் புடவை; சிவப்பு வெல்வெட் ரவிக்கை; கையில் சிவப்பு பிளாஸ்டிக் பை. தலைப் பின்னலில் சிவப்புப் பட்டு ரிப்பன் பட்டாம்பூச்சியின் இறகுகள் போல ஊசலாடிக் கொண்டிருந்தது.

செவ்வொளி படர்ந்த பாமாவின் அழகைப் பருகிக்கொண்டே கோபு அறையில் நுழைந்து கொண்டிருந்தான். அப்போதுதான் பாமா கனகாம்பரத்தைப் பந்து போலச் சுற்றித் தலைப்பின்னலில் செருகிக் கொண்டிருந்தாள்.

''பாமா! ரொம்பப் பிரமாதம்! இன்று உன் அலங்காரம் பிரமாதமாக இருக்கிறதே'' என்று உற்சாகத்தோடு சொன்னான் கோபு.

பாமா பதில் பேசாமல் மெதுவாகச் சிரித்துக் கொண்டாள். அவள் கைகள் மட்டும் கனகாம்பரத்தைத் தலையில் பொருத்தப் பாடுபட்டுக் கொண்டிருந்தன. இரண்டு மூன்று நிமிடங்கள் சிரமப்பட்டும் பாமாவினால் கனகாம்பரப் பூவைச் சரியாகக் கேசத்தின்மீது இணைத்துக் கொள்ள முடியவில்லை. பூவின் ஒரு நுனி வெளியே வந்து தொங்கிக் கொண்டிருந்தது.

கோபு, பாமாவைப் பார்த்துச் சிரித்துக் கொண்டே, அவள் அருகில் சென்று பூவின் நுனியை மெதுவாக வளைத்து அவள் கேசத்துக்குள் தள்ளி விட்டான். பாமாவின் அழகு பூர்ணமாகி விட்டது.

''பார்த்தீர்களா? நீங்கள் வரவேண்டும் என்றுதான் அது காத்திருந்தது!'' என்றாள் பாமா நகைத்துக் கொண்டே.

கோபு பதில் பேசாமல் கண்களை மூடிக் கொண்டான். சடசடவென்று வானவீதியில் பறப்பதைப் போன்ற பிரமிப்புத்தான் அவனுக்கு அப்போது ஏற்பட்டது.

''மணி அஞ்சு ஆகிவிட்டதே, கிளம்ப வேண்டுமே!'' என்றாள் பாமா.

''பாமா! தினமும் இப்படித்தானா அலங்காரம்? ஒரு நாளைக்கு ஏதாவது வேஷம் போட்டுக் கொள்ளேன்.''

''என்ன வேஷம்போட்டுக் கொள்ளலாம்?''

கோபு ஆகாயத்தையும் பூமியையும் மாறி மாறிப் பார்த்துவிட்டு, ''கிருஷ்ண வேஷம் போட்டுக் கொள்ளேன்'' என்றான்.

பாமா கலகலவென்று சிரித்து விட்டுச் சொன்னாள்: ''நீங்கள் ராதை வேஷம் போட்டுக் கொண்டால் நான் கிருஷ்ண வேஷம் போட்டுக் கொள்கிறேன்....''

கோபுவின் சிந்தனை சட்டென்று கலைந்தது. சென்ற வருஷத்தில் நவராத்திரியின் ஞாபகம் வந்தபோது அவன் கண்களில் கண்ணீர் துளித்து விட்டது. ''பாமா என்னை ராதை வேஷம் போட்டுக்கொள் என்று சொன்னாளே, அதன் அர்த்தம் எனக்கா தெரியாது?'' என்று மனத்துக்குள் முணுமுணுத்துக் கொண்டான் அவன்.

* * *

அன்று மாலை கோபுவின் தகப்பனார் ஆத்மநாதன் இறகுகள் கட்டிக் கொண்டு பறந்தார். ''பாமா! நேரமாச்சு. சாமான்களை எல்லாம் எடுத்து வைத்துக்கொள். உன் சித்தப்பா வீட்டுக்குக் கொண்டுபோய் விட்டு விடுகிறேன்'' என்றார் அவர்.

கோபு தெய்வங்களை எல்லாம் வேண்டிக் கொண்டான். பாமா இன்னும் ஒரு வாரம் இருந்து விட்டுப் போனால்தான் என்ன?

'சூட்கேஸை'க் கையில் எடுத்துக் கொண்டு எல்லோரிடமும் விடைபெற்றுக் கொண்டாள்



பிச்சைக்காரன்:— உன் பெண்ணுக்குக் கல்யாணம் செய்தாயே, மாப்பிள்ளைக்கு என்ன கொடுத்தே!

மற்றொரு பிச்சைக்காரன்:— மாப்பிள்ளைக்கு இரண்டு தெருவையே கொடுத்து விட்டேன்!

---

பாமா. கோபுவிடம், ''போய்விட்டு வரட்டுமா?'' என்று சொல்லும்போது அவள் கண்களில் கண்ணீர் குளமாகத் தேங்கிவிட்டது.

கோபுவின் தாயார் மீனாவிடம் பாமா வந்து விடைபெற்றுக் கொள்ளும்போது, அறையில் ராஜராஜேசுவரி படத்துக்கு எதிரே ஒளி விட்டுப் பிரகாசித்துக் கொண்டிருந்த அகல் விளக்கு 'தொப்'பென்று கீழே விழுந்து சுக்கு நூறாக உடைந்து விட்டது. அகல் விளிம்பு வரை இருந்த வேப்பெண்ணெய் அறை முழுதும் சிதறி, பாமாவின் புடவை முகப்பைத் தெப்பமாக்கி விட்டது.

அபசகுனம்போல அகல் விளக்கு கீழே விழுந்து உடைந்தவுடன் மீனாவின் உடல் பயத்தால் வெலவெலத்தது.

''என்ன கிளம்பியாச்சா?'' என்று துரிதப் படுத்தினார் ஆத்மநாதன்.

''இன்றைக்குக் குழந்தை ஊருக்குக் கிளம்ப வேண்டாம். அவள் கிளம்பின சமயம் பூஜையிலிருந்த அகல் விளக்கு விழுந்து உடைந்து விட்டது. எனக்கு மனசே சரியாக இல்லை'' என்று கவலையோடு சொன்னாள் மீனா.

''விளக்கு உடைந்தால் என்ன? பாமா ஊருக்குப் போகட்டுமே!..'' என்று கூறினார் ஆத்மநாதன்.

''வேண்டாம், வேண்டாம். சகுனம் சரியாக இல்லை'' என்று பாமாவின் பிரயாணத்தை நிறுத்திவிட்டாள் மீனா.

''அப்படியானால் அவள் சித்தப்பாவுக்குத் தகவல் சொல்லிவிட்டு வரவேணும்'' என்றார் ஆத்மநாதன்.

''இதோ நானிருக்கிறேன். சொல்லிவிட்டு வருகிறேன்....'' என்று சைக்கிள் மணியைக் 'கிலிங் கிலிங்' என்று அடித்தான் கோபு.

பாமாவின் பிரயாணம் நின்று போனதில் வெகு திருப்தி கோபுவுக்குத்தான். ஆனால் அந்தத் திருப்தி ஒரு வாரம்தான் நீடித்தது.

அத்தை மறுபடியும் கடிதம் எழுதியிருந்தாள். பள்ளிக்கூடப் படிப்பு வீணாகப் போவதாகவும் உடனே பாமாவை அனுப்பும்படியும் தபால் வந்தபோது கோபு மயக்கம் போட்டுக் கீழே விழுந்து விட்டான். 'பாமா இந்த ஊரிலேயே படித்தால்தான் என்ன?' என்று தோன்றியது அவனுக்கு.

பாமாவை எப்படிக் கும்பகோணம் அனுப்புவது என்ற யோசனையில் ஆழ்ந்து போனார் ஆத்மநாதன். அவருக்கோ ஆபீஸில் லீவு இல்லை. பாமாவை அனுப்ப வழி தெரியாது விழித்துக் கொண்டிருந்தார். அப்போதுதான் சமய சஞ்சீவியைப்போல அவருடைய ஆபீஸ் காஷியர் அவர் உதவிக்கு வந்தார். காஷியரின் தாயார் கும்பகோணம் போவதாக இருந்தது. பாமாவையும் அந்த அம்மாளுடன் கூட அனுப்பிவிட்டால் சௌகரியமாக இருக்கும் என்று எண்ணினார் ஆத்மநாதன்.

பாமா ஊருக்குக் கிளம்பப் போகிறாள் என்பதை அறிந்தவுடன் கோபு துடிதுடித்துப் போய் விட்டான்.

திங்கட்கிழமை காலை பாமா எல்லோரிடமும் விடைபெற்றுக் கொண்டு கிளம்பினாள். மழை பெய்து சகதியாக இருந்த காரணத்தினால் 'பேபி டாக்ஸி' வீட்டு வாசலில் வந்து நிற்கவில்லை. தொலைவில் தெருக்கோடியில் நின்றிருந்தது. ஆத்மநாதன் டாக்ஸியில் ஏறி உட்கார்ந்திருந்தார்.

பாமா வெளியில் கிளம்பும் சமயம் மூன்றுவது வீட்டு ராமாயண பட்டர் எதிரே வந்து கொண்டிருந்தார்!

''வந்தது மோசம்!'' என்று பலமாகக் கத்தினான் கோபு.

''என்னடா அது?'' என்று கேட்டாள் கோபுவின் தாயார் மீனா.

''என்னவாவது? எதிரே யார் வருகிறது பார்த்தாயா? பட்டர்! அம்மா எனக்குத் தெரியாது; சகுனம் சரியாக இல்லை....'' என்றான் கோபு.

''பாமா, உள்ளே வாம்மா'' என்று அன்றும் அவள் பிரயாணத்தை நிறுத்திவிட்டாள் மீனா.

பத்து நிமிடங்கள் 'டாக்ஸி'யில் காத்திருந்துவிட்டு ஆத்மநாதன் வீட்டுக்கு வந்து விஷயம் என்ன என்று கேட்டார். 'சகுனம் சரியில்லை' என்று மீனா சொன்னவுடன் அவருக்குக் கோபம் கங்கு கரையின்றிப் பெருகிக் கொண்டு வந்தது.

இருவருக்கும் வாக்குவாதம் முற்றியதே யொழியப் பாமாவின் பிரயாணம் நின்றது நின்றதுதான்.

மேலும் ஒருவாரம் கழிந்தது. இந்தச் சமயம் ஊரிலிருந்து கடிதம் வந்தபோது, கடிதத்தில் விஷயம் கடுமையாக இருந்தது. ஆத்மநாதன் கடிதத்தைப் படித்துவிட்டு ஆத்திரம் அடைந்தார். சம்பளம் போனாலும் போகட்டும் என்று நான்கு நாட்கள் லீவு போட்டு விட்டார்.

''மீனா! நாளைக்குப் பாமாவை அழைத்துக் கொண்டு நானே கும்பகோணம் போகலாம் என்று இருக்கிறேன்'' என்று சொன்னார் ஆத்மநாதன்.

கணவரே பாமாவை அழைத்துக் கொண்டு போவதில் மீனாவுக்குப் பரம திருப்தி. ஜவுளிக் கடைக்குச் சென்று பாமாவுக்குப் பிடித்த

மான கலரில் இரண்டு புடவைகள் எடுத்து வந்தாள்.''

கோபு கோவிலுக்குச் சென்று அங்கப் பிரதட்சணம் செய்து கொண்டிருந்தான். ''சுவாமி, பகவானே! பாமாவின் பிரயாணத்தை நிறுத்த மாட்டாயா?'' என்று பக்தி சிரத்தையோடு வேண்டிக் கொண்டான்.

மறுநாள் மாலை பாமாவின் பிரயாணத்துக்கு வேண்டிய ஏற்பாடுகள் யாவும்சித்தமாகிவிட்டன. ''பாமா காதுஜாக்கிரதை, மூக்கு ஜாக்ரதை'' என்று ஆயிரத்தோராவது தடவையாக அவளுக்கு மீனு எச்சரிக்கை செய்தாள்.

ஆத்மநாதன், ''பாமா கிளம்பு, கிளம்பு'' என்று துரிதப்படுத்தி விட்டுக் கோபுவைத் தேடினார். கோபு வைக்காணவில்லை. கையிலிருந்த கூஜாவைக் கீழே வைத்துவிட்டு ஆத்மநாதன் பக்கத்திலிருந்த சபேசன்வீட்டுக்குள் நுழைந்தார்.

சபேசன் வீட்டில், அவனுடைய விதவைத் தாயார் ஜபம் செய்துகொண் டிருந்தாள். அவள் பக்கத்தில் கோபு மண்டியிட்டு உட்கார்ந்து, ''பாட்டி, பாட்டி! சீக்கிரம் வெளியில் கிளம்பி வாங்களேன். என்னுடைய அம்மா உங்களிடம் ஏதோ அவசரமாகப் பேச வேண்டுமாம்....'' என்று சொல்லிக் கொண்டிருந்தான்.

''ஜபம் பண்ணி விட்டு வரேண்டா, கோபு!'' என்றாள் பாட்டி.

கோபுவா விடுகிறவன்? ''பாட்டி, ஜபம் அப்புறம் செய்து கொள்ளலாம். இப்போ கிளம் பித் தெருப் பக்கம் வாருங்கள்'' என்றான் விடாப்பிடியாக.

''டேய், கோபு! எதற்கடா பாட்டியைப் போய்த் தொந்தரவு பண்ணறே?'' என்று அதட்டினார் ஆத்மநாதன்.





"என்னுடைய இந்தப் பேனாவுக்கு வெள்ளி விழாக் கொண்டாடப் போகிறேன்!"
"இருபத்தைந்து வருஷமாக அவ்வளவு பத்திரமாகக் காப்பாற்றி வந்தீர்களோ?"
"இல்லை; இது இருபத்தைந்தாவது பேனா!"

---

தந்தையைப் பார்த்தவுடன் கோபுவுக்கு வியர்த்து விட்டது. "அ...ப்...பா...." என்றான் தடுமாற்றத்துடன்.

"கோபு! தெரியுமடா உன் சமாசார மெல்லாம். வா இப்படி, வெளியே" என்று அதட்டிக் கூப்பிட்டார் ஆத்மநாதன்.

கோபு பயந்து போய்ப் பூனை மாதிரி எழுந்து வெளியே வந்தான்.

ஆத்மநாதன் வீட்டுக்கு வந்த பொழுது அங்கு ராமாயண பட்டர் நின்று கொண்டிருந்தார். கோபுவையும் ஆத்மநாதனையும் பார்த்து விட்டு அவர் சொன்னார்: "ஆத்மநாதன், வாங்கோ! உங்களைத்தான் எதிர் பார்த்துக் கொண்டிருக்கிறேன். ஒரு வாரத்துக்கு முன்பு என்னைக் கூப்பிட்டு அனுப்பினீர்களாம். 'அவசரமாக வாங்கோ' என்று கோபு சொல்லி விட்டுப் போனான். நான் வந்தபோது நீங்கள் வீட்டில் இல்லை. தெருக்கோடியில் மோட்டாரில் உட்கார்ந்திருப்பதாகப் பாமா சொன்னாள். ஏதாவது விஷயம் உண்டா?"

"கோபுதான் உங்களை வரச் சொன்னானா?" என்று கேட்டுவிட்டுக் கோபுவை விழித்துப் பார்த்தார் ஆத்மநாதன்.

கோபு ஆகாயத்தை அண்ணாந்து பார்த்துக் கொண்டிருந்தான்.

"மீனா! உன் பிள்ளை சமர்த்தைப் பார்த்தாயா? அன்றைக்குப் பாமா ஊருக்குக் கிளம்பும்போது ராமாயண பட்டரை நான் கூப்பிட்டதாகச் சொல்லி அவரை எதிரே வரச் செய்தான். இன்றைக்கு என்னடாவென்றால் பக்கத்து வீட்டுப் பாட்டியிடம் மண்டியிட்டுக் கொண்டிருக்கிறான். 'பாட்டி! அம்மா கூப்பிடுகிறாள் வாருங்கள்!' என்று அந்தக் கிழவியின் உயிரை வாங்கி விட்டான்" என்றார் ஆத்மநாதன்.

"நான் பாட்டியைக் கூப்பிடவே இல்லை" என்றாள் மீனா.

"நான் மட்டும் அன்று ராமாயண பட்டரைக் கூப்பிட்டேனா? நீ கூப்பிட்டாய் என்றால் தானே பாட்டி வருவாள். நீயும் சகுனம் சரியில்லை என்று சொல்லலாம்."

"அதற்குத்தான் இவ்வளவு ஏற்பாடா?"

"பின்னே என்னவாம்? அன்று அகல்விளக்கு கீழே விழுந்து உடைந்ததே, அது யார் செய்த வேலை என்று நினைத்துக் கொண்டிருக்கிறாய்? அதைக்கூட இவன்தான் கையாலே தட்டிக் கீழே விழ வைத்தான். தெரிந்ததா?"

"இப்படியெல்லாம் எதற்குச் செய்தான்?"

"பாமாவின் பிரயாணத்தை நிறுத்துவதற்குத்தான்."

"அவள் பிரயாணத்தை இவன் எதற்கு நிறுத்த வேண்டும்?"

"மீனா, நீ ஒரு கர்நாடகம். இதெல்லாம் உனக்குப் புரியுமா? கோபு, இதோ பார்! இது கார்த்திகை மாதம். இன்னும் ஒரு மாசம் பொறுத்துக்கொள். பாமா உன்னை விட்டு அப்புறம் எங்கும் போகமாட்டாள்" என்று சொல்லிக் கோபுவையும் பாமாவையும் மாறி மாறிப் பார்த்தார் ஆத்மநாதன்.

பாமாவின் முகம் நாணத்தால் சிவந்து போய் விட்டது.

தெருக்கோடியில் நின்று கொண்டிருந்த டாக்ஸி டிரைவர் 'பூம் பூம்' என்று 'ஹாரன்' அடித்தான்.

பாமாவின் பிரயாணம் அதற்குப் பிறகு யாதொரு தடையுமின்றி ஆரம்பமாயிற்று.

உங்கள் குழந்தைக்கு டூமெக்ஸ்
கொடுக்கும்பொழுது அவன் வளர்ச்சி
யைப்பற்றி கவலைப்பட வேண்
டியதில்லை. மிகவும் நேர்த்தியானதும்,
புதுமை கெடாமலும், நிறைய விட
மின் அடங்கியுள்ள இந்தப் பால் உணவு
காற்றுப் புகாமல் ஸீலிடப்பட்ட
டின்களில் கிடைக்கின்றன.
ஆகவே குழந்தைகளுக்குச் சிறந்ததும்,
பாதுகாப்பு அளிக்கும்
பால் உணவு டூமெக்ஸைக் காட்டிலும்
வேறொன்றும் இல்லை.





உங்கள் குழந்தைகளுக்கு

# டூமெக்ஸ்

பால் உணவைக்

கொடுத்து அவர்களின் வளர்ச்சியைக் கவனியுங்கள்

## 6. சின்னுவின் எச்சரிக்கை!

உள்ளம் ஒன்றை நினைந்து, அதைச் செயலாக்குவதற்குள் எண்ணத்தை மாற்றிக் கொண்டு விடுவதும் உண்டு. அப்படித்தான், காவேரிக்கு முழுகக் கிளம்பிய சின்னத்துரை, படித்துறைக் கருகில் வந்ததும் தண்ணீரில் இறங்காமல் கரையோடு கிழக்கே நடக்க ஆரம்பித்தான். ஒரு வேப்பங் குச்சியைஒடித்துப்பல்லைத் துலக்கிக் கொண்டே அந்தப் பாழ் மண்டபத்தைக் குறி வைத்து அவன் சென்றான்.

மண்டபத்தை நெருங்கு முன்னரே வௌவால் வாடை அவன் மூக்கைத் துளைத்தது. கல் தூண்கள் நிறுத்தப்பட்ட பழங்கால மண்டபம், அது. மூலையிலே சருகுக் குப்பைகளை ஒதுக்கிவிட்டு ஒருபரதேசி படுத்துத் தூங்கிக் கொண்டிருந்தான். வேறு ஒரு மனிதப் பூண்டுகூட அந்தப் பக்கம் காணப்படவில்லை. மண்டபத்துப் படியேறிய சின்னத்துரை, ஆச்சரியம், அருவருப்பு, ஆத்திரம்முதலிய உணர்ச்சிகள் உள்ளத்தில் குமிழியிடச் சுவர்களைப் பார்த்தவாறே நின்றான்.




அந்தப் பாழ் மண்டபத்தில் அவர்கள் சந்திப்பு! மடிப்புக் கலையாத காக்கி உடுப்புக்கள் அணிந்து பெரியபெரிய உத்தியோகஸ்தர்களுடன் கடல் மடை திறந்தாற்போல் ஆங்கிலத்தில் பேசும் மார்க்கபந்து, அந்த மண்டபத்திலே பானுவைச் சந்திப்பதாவது? அதை நினைக்கவே அவனுக்குக் குமட்டியது. ஆனால் பொய்யென்றுஎப்படி நம்புவது? தெள்ளத் தெளிய விளக்க, அவனிடம் காகிதம் இருக்கிறதே? அது மட்டுமா? பானு அப்படி அவன் அநியாயமாகக் குற்றம் சாட்டியிருந்தால் ஒப்புக் கொள்வாளா? 'காகிதத்தை அவர் மூஞ்சியில் எறிந்து விட்டு வந்து விடுகிறேன்' என்று உள்ளம் கொந்தளிக்க அவன் சொன்னபோது, அந்தப் பாசாங்குக்காரி, விம்மி விம்மி அழுதாளே ஒழிய, 'அவர் மீது இப்படி அபாண்டம் சொல்லாதீர்கள்' என்று கூடக் கூறவில்லையே?

சில சமயங்களில் உண்மை கசக்கத்தான் கசக்கிறது! அந்தச் சுவர்களில் தான் எத்தனை விதமான கரி எழுத்துக்கள்! குறுக்கிலும் நெடுக்கிலும் கோணல் மாணலாய், குண்டு குண்டாய், எத்தனையோ வித வரி வடிவங்கள். 'ஒழிக' கோஷங்கள்; 'ஜே' வாழ்த்துக்கள்; படிக்க முடியாத பண்பற்ற



# காதலன்

பாஷையில் தனி மனிதர்களைப் பற்றிய வாழ்க்கை இரகசியங்களின் விளக்கங்கள், கண்டனங்கள், எச்சரிக்கைகள், எத்தனை எத்தனையோ! மண்டபம் இத்யாதி இலக்கியங்களுக்காகவே கட்டப்பெற்றதோ என்று கூட நினைக்கத் தோன்றியது. ஓரிரண்டு செய்திகளைப் படித்த சின்னத்துரைக்கு ஒரு விஷமம் செய்யத் தோன்றியது. பல் குச்சியை விட்டெறிந்து விட்டு ஆற்றில் இறங்கி வாயைக் கொப்புளித்துச் சுத்தம் செய்து கொண்டான். கரையில் தேடி ஒரு செங்கல் துண்டைப் பொறுக்கிக் கொண்டு மண்டபத்துக்குள் நுழைந்தான்.

அப்போது அந்தப் பரதேசி எழுந்து ஓர் ஓரமாக உட்கார்ந்திருந்தான். சின்னுவைக் கடைக் கண்ணால் பார்த்தபடியே தாடியைத் தடவிய வண்ணம், ''சிவோஹம், சச்சிதானந்தம்...'' என்று சொல்லிவிட்டுக் கொட்டாவி விட்டான் பரதேசி.

சின்னுவுக்கு ஒரு கணம் தயக்கம் உண்டாயிற்று. அவன் பார்த்துக்கொண்டிருக்கையில் எப்படி எழுதுவது? அவன் எவனோ பரதேசி. சம்பந்தமில்லாதவன்தான் என்றாலும் தெரியும்படி எழுதுவது உசிதமாகப் படவில்லை. திரும்பிப் பேசாமல் நடக்கலாமா என்று யோசிப்பதற்குள் பரதேசி காவி மூட்டையுடன் எழுந்து விட்டான். அவன் அப்பால் சென்றதும் கையிலிருந்த செங்கல் துண்டால் கரி எழுத்துக்களுக்கு மேல் பளிச்சென்று தெரியும்படி, சின்னு கொட்டை எழுத்தில் எழுதினான்.

''ஓய், மா—ப! உம்முடைய குட்டெல்லாம் அம்பலத்துக்கு வந்துவிடும். மரியாதையாக விலகிக் கொண்டால் பிழைப்பீர்கள். இந்த அற்பப் புத்தி ஏனையா உமக்கு? நல்லதனமாகச் சொல்லுகிறேன். யோக்கியமாகப் பிழையும். இல்லாவிட்டால் ஆபத்து.

சி. து.

இதற்கு மேல் மார்க்கபந்துவிடம் எப்படி வெறுப்பைக் காட்டி எச்சரிக்கை செய்ய முடியும்? மண்டபத்துக்கு அவன் தினம் வந்து போவதாக அல்லவோ சொல்லியிருக்கிறான்? பார்க்கட்டும், நன்றாய்ப் பார்த்துத் தெரிந்து கொள்ளட்டும். அந்த பானுக் கழுதைக்கும் புத்தி வரட்டும்....

செங்கல் துண்டை வீசி எறிந்து விட்டுச் சின்னு திரும்பி நடந்தான். சிலுசிலு வென்று குளிர்ந்த ஆற்றங்கரைக் காற்று வீசியது. கரையோரமாக அவன் படித்துறைக்குச் சமீபம் வரும்போது ஐயாசாமி எதிர்ப்பட்டார்.

ராஜம் கிருஷ்ணன்

''ஏண்டா? இன்ஸ்பெக்டர் வீட்டிலே வேலை பிடித்து விட்டாயாமே?'' என்று அவர் கேலிச் சிரிப்புடன் விசாரித்த போது, சின்னத்துரைக்கு உள்ளம் பொங்கி வந்தது.

''ஆமாம், ஆபீசிலே பின்னுடி வேலை போட்டுத் தருகிறேன் என்று சொல்லி யிருக்கிறார். அதற்கென்னவாம் இப் போது?'' என்று அவன் அலட்சியமாகப் பதில் கொடுத்தான்.

''பானுதான் நீ அங்கே வேலையி லிருப்பதாகக் கிட்டு சம்சாரத்தினிடம் சொன்னாளாம். ராத்திரி கிட்டுவின் மனைவி அங்கு போய்த் துணைக்குப் படுத் துக் கொண்டாளாம். அடே யப்பா, அந்த அம்மா பரம கினியாமே? 'நாலு நாட் கள் ஒரு மனிதர் அந்த வீட்டிலே வேலைக்கு இருக்க மாட்டார். உட்கார்ந்த படியே கண்களில் விரலை விட்டு ஆட்டிடுவாள். அவர் இருக்க மாட்டார் மாமி' என்றாளாமே பானு?...'' என்று செய்தி பரப்பினார்.



''ம், அவள் கிடக்கிறாள், பாசாங்குக்காரி. அந்தம்மா தங்கம். ஒரு மணி பழகினால் போதாதா ஒருவரிடம்? அவள் பேச்சை நம் பாதீர்கள், மாமா!'' என்றான் சின்னு.

''பின்னே ஏண்டா இத்தனை நாளாய் வேலையில் வைத்துக் கொண்டிருந்த பானுவை இப்போது திடீரென்று நிறுத்தி விட்டார்கள்? ஏண்டா சின்னு?'' என்று கேட்டார்.

ஐயாசாமி அவனிடமே இரகசியத்தை நெருங்கி வந்து அறிய முயன்றார். சின்னத்துரைக்கு நாக்கின் நுனி வரை ஆவல் வந்து நின்று துடித்தது. என்று லும் அடக்கிக் கொண்டான். சட் டென்று அந்தக் கசப்பான உண்மையை அப்படி வெளியிட்டு விட மனசு இடம் கொடுக்கவில்லை. உள் மனம் கடிவாளத் தைப் பிடித்து இழுத்து விட்டது.

''அதென்னமோ மாமா, எனக் கென்ன தெரியும்? நீங்கள் அவளிடமே கேட்டுப் பார்க்கிறதுதானே?''

''என்னமோ, நேற்றுக் குழம்பில் உப்பை அதிகமாகப் போட்டு விட்டா ளாம். அதற்கு அழஅழப் பேசி விட்டா ளாம். 'நீங்கள் வேறு ஆள் வைத்துக் கொள்ளுங்கள். நான் நின்று கொள் கிறேன் மாமி என்று வந்து விட்டேன்' என்று சொன்னாள். அதுதான் உன் னிடம் கேட்டேன். கையிலே கொஞ்சம் காசு சேர்த்து வைத்திருக்கிறாள். அவ ளிடம் மூந்நூறோ நானூறோ இருக் கிறது. ஒரு உத்தியோகத்தைத் தேடிக் கொண்டு கட்டிப் போட்டடா!'' என்று உற்சாகமாக முடித்தார் ஐயாசாமி.

சின்னு நெஞ்சில் மூண்ட எரிச்சலைச் சமனப்படுத்திக் கொள்வதற்காக நீரில் இறங்கி முழுகினான். வீடு திரும்பி அவன் அம்மா போட்டுத் தந்த காப்பி யைக் குடித்து விட்டு அவளிடம் வேலை யேற்ற விஷயத்தையும் தெரிவித்தான். அவளுக்குத் திருப்தி உண்டாயிற்று. ஆணியில் மாட்டி யிருந்த சட்டையைப் போட்டுக் கொண்டு, இன்ஸ்பெக்டர் வீட்டுக்கு விரைந்த போது, 'சீதாராம் கபே'யில் மணி ஆறரை ஆகி யிருந்தது.

முற்றத்துப் பின் வாயில் கதவே திறக்கப் பட்டிருந் தது. அவன் உள்ளே நுழைந்து, ஓசைப்படாமல் திறந்த கதவைச் சாத்தி னான். குழாயடியிலே கால் கழுவப் போகுமுன் தோப் புப் பக்கம் அவன் பார்வை யில் உறுத்தியவள், கறுப் புப் புடவை...பானுதான்!

அவன் விழிகள் விரிய நிற் கையிலேயே அவள் சரசர வென்று தோப்புக்குள் நுழைந்து, அவன் பார்வையினின்றும் மறைந்து விட்டாள். தன்னையறியாமலே சின்னத்துரை பற்களைக் கடித்தான்.

சாவகாசமாகத் தோப்புக்குள்ளிருந்து வீட்டின் முன் வாசலுக்கு வந்து, சந்து வழியாக, கையிலிருந்த பிரஷினால் பல்லைத் துலக்கிக் கொண்டே பின் புறம் முற்றத்துக்குள் நுழைந்தார் மார்க்கபந்து.

அவரைப் பாராதது போலவே அலட்சியமாக அவன் குழாயடியில் காலைத் தேய்த்துத் தேய்த்துக் கழுவிக் கொண்டிருந்தான்.

முற்றத்துக்கு வாய் கொப்புளிக்க வந்த மார்க்கபந்துவின் முகத்திலே அலட்சியச் சிரிப்பு மலர்ந்தது.

''என்னப்பா? மணி என்ன ஆகப் போகிறது தெரியுமோ? ஏண்டாப்பா?''

''என்னிடம் கைக்கடியாரம் கிடை யாது ஸார், சொன்னால் சொன்ன மணிப்பிரகாரம் வருவதற்கு!'' என்று சின்னத்துரை நறுக்குத் தெறித்தாற் போல் பதிலளித்தான்.

அவருக்கு அந்தப் பதில் கொஞ்சம் அதிர்ச்சியையே அளித்தது.

''என்னப்பா விஷயம்? நேற்று என்னமோ அடக்கமாக நடந்து கொண் டாய். இன்று முகத்திலே எள்ளும் கொள்ளும் வெடிக்கிறாப் போலிருக் கிறதே?'' என்றார் மார்க்கபந்து.

வாங்கக் கிடைப்பதில் உயர்ந்தது.

பல் விளக்க **டெக்**

சிறந்தது!






## லைப் இன்ஷ்யூரன்ஸ் லாபகரமானது என்பதை நான் அறிவேன்

"நான் முன் யோசனையுடன் வியாபாரம் செய்பவன். என் பணத்தை எங்கு முதலீடு செய்ய வேண்டுமென்பதில் எனக்கு மிகுந்த கருத்து உண்டு. இதுவே என் பெரும்பான்மை வெற்றிக்குக் காரணம். என் சிறிய வியாபாரம் வளர்ச்சியடைந்து வருவதுடன், எத்தகைய நஷ்டங்களிலிருந்தும் எனக்குப் போதிய பாதுகாப்பும் வகுத்துக்கொண்டிருக்கிறேன்.

"போட்டி, தேக அசௌக்கியம் மற்றும் இதர சூழ்நிலைகள் என் வியாபாரத்தைப் பாதிக்கலாம். ஆனால் என்னுடைய ஆயுள் இன்ஷ்யூரன்ஸிலிருந்து எனக்கு வரக்கூடிய பெரிய தொகையை யாதொன்றும் பாதிக்காது. மற்றும் ஆபத்தான சந்தர்ப்பத்தில் என் பாலிஸிகளின் அடமானத்தின் மீது உடனடியாக கடன் வாங்க முடியும் என்பதை அறிய எனக்கு மேன்மேலும் ஆறுதல் ஏற்படுகிறது.

" இன்றைய பெரும்பான்மை வியாபாரிகளைப்போல், என்னையும் இன்ஷ்யூர் செய்துகொள்ள வற்புறுத்த வேண்டியதில்லை என்பதில் ஆச்சரியப்படுவதற்கொன்றுமில்லை. என்னால் முடிந்தமட்டும் லைப் இன்ஷ்யூரன்ஸில் முதலீடு செய்கிறேன். ஏனெனில் இத்தகைய முதலீடு ஒன்றுதான் பூரண பாதுகாப்பு அளிக்கிறது.

"இன்ஷ்யூரன்ஸில் எனக்கு மிகுந்த நம்பிக்கை உண்டு."

**லைப் இன்ஷ்யூரன்ஸ் கார்ப்பொரேஷன் ஆப் இந்தியா**

சென்ட்ரல் ஆபீஸ்: ஓரியண்டல் பில்டிங்ஸ், போர்ட், பம்பாய் 1.



# Life Insurance Corporation of India

ஜோனல் ஆபீஸ்கள்: பம்பாய், புது டில்லி, கல்கத்தா, சென்னை, கான்பூர்

இந்தியா முழுவதும் டிவிஷனல் மற்றும் பிராஞ்சு ஆபீஸ்கள் உள்ளன

சின்னத்துரை நேற்று வரை அவரை எஜமானராக எண்ணியிருந்தான். இன்று அவனால் அப்படி எண்ண முடிந்திருந்தால்தானே வினயமாகப் பதில் சொல்லுவான்? அவர் 'வில்லன்?' அவனுக்கு எதிரி! அந்த நினைப்பிலேயே தோய்ந்து வந்தது அவன் மறுமொழி. ''தெரியும் ஸார். என்னால் இதற்குமுன் வருவதற்குச் சௌகரியப்படாது...''

அவருடைய பதிலை எதிர்பாராமலேயே அவன் சமையல் அறைக்குள் புகுந்தான்.

மார்க்கபந்து அழுத்தலாகச் சிரித்துக் கொண்டார்.

''ம், அம்மாள் சரி என்றால் சரி. எனக்கென்னப்பா ஆட்சேபம்? இந்த வீட்டில் இதற்கு முன்பெல்லாம் காலை ஐந்து மணிக்கே காப்பி தயாராவது வழக்கம்!'' என்றார் அவர்.

சின்னு அவருக்கு ஏதும் கூறாமலேயே கூடத்துப் பக்கம் சென்று திருமதியிடம் 'ஆஜர்' தெரிவித்துக் கொண்டான். அவள் தானே அவனுக்கு எஜமானி!

''ஏண்டாப்பா, உன் பேர் மறந்து போச்சு. அம்பி என்று கூப்பிடுகிறேன். நீ எனக்குப் பிள்ளை போலிருப்பாய். நேரமாய்ப் போச்சு, இன்றைக்குக் கொஞ்ச நேரம். பழனி பால் கறந்து வைத்திருக்கிறானே இல்லையோ? நெஞ்சு உலர்ந்து போகிறது. எனக்கு முதலிலே கொஞ்சம் 'ஓவல்' கலக்கிக் கொண்டு வா. இந்தக் கிளாஸை எடுத்துக் கொண்டு போ. முனியம்மாள் கழுவினால் நன்றாகக் கழுவ மாட்டாள். அவளிடம் கொடுக்காமல் சீயக்காய் போட்டுப் பிசுக்குக் கறை போகக் கழுவிக் கொண்டு வா!...'' என்று மூச்சு விடாமல் உத்தரவுகளைப் பிறப்பித்தாள்.

''ஆகட்டும், அம்மா. இதோ நொடியில்'' என்று சின்னு விரைந்தான்.

அன்று கூடத்துக்கும் சமையற்கட்டுக்குமாகக் காலைப் பொழுதுக்குள் எத்தனை தடவைகள் அவனை அலைய வைத்திருப்பாளோ? எத்தனை தடவைகள் தான் காப்பி, ஹார்லிக்ஸ், மருந்து, வெந்நீர் என்று அவனும் சளைக்காமல் கொண்டு போயிருப்பானோ? மார்க்கபந்து குளித்து விட்டு வந்ததும் தோசை காப்பியைக் கொண்டு போய் 'டக்' கென்று மேஜைமீது வைத்தான். அவர் விழித்துப் பார்த்ததை அவன் நிமிர்ந்து பார்த்தால் தானே?

''இவன் என்ன, படிந்து வேலை செய்பவனாகத் தோன்றவில்லையே? முகத்தில் அடிப்பது போலல்லவோ வைத்து விட்டுப் போகிறான்?'' என்று மார்க்கபந்து திருமதியிடம் அபிப்பிராயம் தெரிவித்தது சின்னுவின் செவிகளில்பட்டது.

''ஆண் பிள்ளை காரியம் அப்படித் தான் இருக்கும். எல்லாம் நன்றாகச் செய்வான் போலிருக்கிறது. இன்றைக்குத் தோசைக்குச் சட்னி அரைத்திருந்தானே? ரொம்ப ருசியாக இருந்தது. நேற்று ராத்திரிச் சமையல் மட்டும் என்ன? நன்றாக இல்லையா? அப்படியெல்லாம் துருவித் துருவிப் பார்த்தால் ஆள் எங்கே கிடைக்கப் போகிறான் நமக்கு? அம்மாளையும் கிம்மாளையும் வைத்தால் அடிமடியில் உப்பிலிருந்து கர்ப்பூரம் வரையில் கட்டிக் கொண்டு போவாள். நீங்கள் பொழுது விடிந்தால் நாலு பேரைக் காப்பிக்கும் சோற்றுக்கும் அழைத்து வருகிறீர்கள். அதற்கு இவன் தான் சரி'' என்று அவள் மூச்சு விடாமல் அவர் அபிப்பிராயத்துக்கு எதிராகச் சொன்ன போது சின்னத்துரையின் உள்ளத்திலே சுந்தரியம்மாளின் மீது நன்றி உணர்வு பெருகி வழிந்தது.



''ம், உனக்குப் பிடித்தால் சரி. எனக்குப் 'பத்தரையில்' சாப்பாடு அனுப்பச் சொல்லு'' என்று பணித்து விட்டுத் தொப்பியை எடுத்துக்கொண்டு மார்க்கபந்து அலுவலகத்துக்குச் சென்றார். அம்மாள் கட்டிலிலிருந்தபடியே அவனை அழைத்துச் சமையல் திட்டம் சொன்னாள். பட்டியல் மிக நீளமாகத் தானிருந்தது. வேறு இடமாக இருந்தால் சின்னு கண்டிப்பாகச் சலித்துக் கொண்டிருப்பான். திருமதி மார்க்கபந்து என்ற அநுதாபமே சலிப்பைத் துடைத்து விட்டது. அவன் சமையற்கட்டில் கட்டுக்காவலின்றி வேலை செய்து கொண்டிருக்கையில் அமிர்தம் தோளைப் போர்த்துக் கொண்டு முற்றத்து வழியாக வந்தாள். கட்டிலின் கீழ் உட்கார்ந்து அவள் சுந்தரியம்மாளுக்கு ஊர்ச் செய்தி, நாட்டுச் செய்தி அனைத்தையும் தெரிவித்த பின் சாங்கோபாங்கமாக இருவரும் செய்திகளை அலசித் தீர்த்தார்கள்.



மோட்டார் கற்றுத் தருபவர்:— திடீரென்று ஒரு தென்னை மரத்திலே கார் மோதிவிட்டால் என்ன செய்வாய்?
கற்றுக் கொள்பவர்:— 'அப்பாடா' என்று கீழே விழுகிற இளநீர்க் காய்களை எடுத்துக் குடிப்பேன்!

"காலையில் இந்தப் பக்கம் வந்திச்சாமே பானு? முருகையன் தோப்பண்டை பார்த்தேன்னு சொல்லுகிறானே? இங்கே வந்ததா?" என்று அமிர்தம் விசாரித்தாள்.

"அதன் பேச்சையே எடுக்காதே, அமிர்தம்! சனியன் எப்படியேனும் போகட்டும். சம்பளப் பணத்தைக் கணக்குப் பார்த்து நேற்றே ராமையன் மூலமாக அனுப்பச் சொல்லிவிட்டேன். எங்கேனும் தெருவில் போயிருக்கும்..." என்றாள் சுந்தரியம்மாள் அளவற்ற வெறுப்புடன்.

பதினோரு மணி வரை, சுந்தரியம்மாளின் நேரத்தை இவ்விதம் சுவாரஸ்யமாகப் போக்கி விட்டு அமிர்தம் எழுந்து போனாள். அதற்குப் பின் சுந்தரியம்மாள் ஸ்நானத்தை முடித்துக் கொண்டு சாப்பாட்டுக்கு வருவதற்குள் மணி பன்னிரண்டு அடித்து விட்டது. 'ஐயா'வுக்கு அடுக்கில் சாப்பாடு போட்டு, பத்து மணிக்கே ஆள் வசம் அனுப்பி விட்டுச் சின்னத்துரை காத்திருந்தான்.

அம்மாள் இலை முன் வந்து அமர்ந்தாள். அவன் பரிமாறினான்.

"கூட்டு நன்றாகப் பண்ணியிருக்கிறாயே? அம்மாடி, இப்படி வாய்க்கு ருசியாகச் சாப்பிட்டு வருஷக் கணக்காச்சுடா அம்பி. தினமும் இரண்டு தேங்காயை உடைக்கும். சமையல் வாயில் வைக்க வழங்காது. போகும் போதும் வரும் போதும் கண்ணாடியில் அழகு பார்த்துக் கொள்ளத்தானே போது இருந்தது அதற்கு?"

பானுவை அஃறிணையாகவே பாவித்துப் பேசினாள் சுந்தரியம்மாள். சின்னு ஓரமாகக் கையைக் கட்டியபடி நின்றான்.

"உனக்கு இந்த ஊரேதானா?"

சின்னு சிரித்துக் கொண்டு, "ஏன் மாமி?" என்று திருப்பிக் கேட்டான்.

"கூட்டின் ருசியைப் பார்த்தால் தஞ்சாவூர்க்காரன் என்று சொல்லுவார்கள்...."

சின்னுவுக்கு உச்சியில் 'ஐஸ்' வைத்தாற் போலிருந்தது.

"இல்லை மாமி..." என்று இளித்துக் கொண்டு சின்னு, "நான் எல்லாத் தினுசும் செய்வேன். அவியல் பண்ணினால் மலையாளம் கெட்டுப் போகும்..." என்று தன் சாமர்த்தியத்துக்கு வெளிச்சம் போட்டுக் கொண்டான்.

"என்னமோ, உன்னை எனக்குப் பார்த்ததுமே பிடித்துப் போயிற்று. அந்தத் தறுதலை இருந்த வரையிலும் நான் ஒரு நாள் இப்படிச் சாப்பிட்டதில்லை. அவர் எங்கே ருசித்துச் சாப்பிடுகிறார்?"

திருமதி மார்க்கபந்து இப்படிப் பரிவு காட்டியது சின்னத்துரையின் கொதிப்பை ஒரு விதமாகத் தூண்டி விட்டது. அவன் பின்பலன் என்னவாகும் என்று எண்ணிப் பார்க்கவில்லை.

"மாமி, ஒரு விஷயம் சொல்ல வேண்டாம் என்றாலும் முடியவில்லை. சொல்லவும் நாக்கூசுகிறது..."

அவன் மெதுவாகச் சுவரைப் பார்த்துக் கொண்டு இச் சொற்களை உதிர்த்த போது, அவள் முகத்தில் அவன் எதிர்பார்த்த ஆவல் பளிச்சிட்டது.

"ம்...என்ன?" என்று கேட்டாள்.

"ஆமாம் மாமி; இந்த அபத்தக் கடிதாசி நேற்று நான் முற்றத்துக் குழாயடியில் வேலையாக இருந்த போது கல்லுடன் வந்து விழுந்தது..."

"என்னது? காகிதமா? எங்கே? கொண்டா!" என்றாள். இருதயம் துள்ளி வெளியே வந்து விடும்படியான ஆவலும் பரபரப்பும் அந்தக் கேள்விகளிலே தெரிந்தன.

சின்னத்துரை கையைக் கழுவிவிட்டு ஆணியில் மாட்டியிருந்த சட்டைப் பையிலிருந்து காகிதத் துண்டை எடுத்து அம்மாளிடம் அப்படியே காட்டினான். அதை இடது கையால் வாங்கிப் பார்த்த சுந்தரியம்மாளின் முகம் ஒரேயடியாக வெளுத்துவிட்டது. (தொடரும்)

தோழியின் கடிதம்

# இங்கிதம் வேண்டும்

வசுமதி ராமசாமி

அன்புக்குரிய சகோதரி சுஜாதா,

உன் கடிதத்தில் இங்கிதம் என்றால் எதைக் குறிப்பிடுவதென்று கேட்டிருக்கிறாய். சங்கீதம் போன்ற ஒரு கலையென்றுதான் மதிப்போமே. இங்கிதமாய் நடந்து கொள்வது. இங்கிதமாய்ப் பேசுவது என அந்தக் கலையை இரு வகைகளாகப் பிரிக்கலாம்.

அன்றொரு நாள் நாங்கள் குடும்பத்துடன் புழலேரிக்குப் போய் வேடிக்கையாக இருந்து விட்டு வருவதெனத் தீர்மானித்தோம். மாலையில் சாப்பாட்டையும் அங்கேயே முடித்துக் கொள்வதெனத் திட்டம் செய்தோம். எல்லா ஏற்பாடுகளும் நடந்தன. கட்டுச் சாப்பாட்டை ருசியாகத் தயாரித்திருந்தோம்.

புறப்படுகிற சமயத்தில் என் சிநேகிதி குழந்தைகளுடன் வந்தாள். எங்கே, எந்த ஊருக்குப் புறப்படுகிறீர்களென்று கேட்டுக் கொண்டே வந்தாள். விஷயத்தை விளக்கினேன். என் சிநேகிதிக்கு இங்கிதம் தெரிந்திருந்தால் இன்றொருநாள் வருகிறேனென்று கிளம்பி விருப்பாள். அதற்கு முற்றிலும் மாறாக எவ்வளவோ நாளைய சங்கதிகளை விசாரித்துக் கொண்டு பதிவாக உட்கார்ந்து விட்டாள். அவள் மற்ற நாளில் வந்திருந்தால் எனக்கும் சந்தோஷமாகத்தான் இருந்திருக்கும். அன்று என் வீட்டில் ரொம்ப நேரம் இருப்பது என்று அவள் திட்டம் செய்திருக்கிறாள். எனவே என் நேரத்தைப் பற்றி அவள் அக்கறை கொள்ளவில்லை. நான் என்னுடைய அவசரத்தை எடுத்துக் காட்ட எழுந்து நின்றேன். அவள் கேள்விகளுக்கு அங்கொன்றும், இங்கொன்றுமாகச் சுருக்கமாகப் பதில் சொன்னேன்.

"குழந்தைகள் இன்று புழலேரிக்குப் போக ஆசைப்படுகிறார்கள். எவ்வளவோ நாட்களாக நினைத்தும் நடக்கவில்லை. மழை வரும் போலிருக்கிறது..." என்றெல்லாம் சொல்லிப் பார்த்தேன். கைக் கடிகாரத்தைத் திருப்பித் திருப்பிப் பார்த்தேன்.

என் கணவர் வேறு தொண்டையை அநாவசியமாக இரண்டு மூன்று தடவைகள் கனைத்துக் கொண்டார். கூண்டுக்குள் இருக்கும் புலியைப்போல் குறுக்கும் நெடுக்குமாக நடந்தார். ஆனால் அந்தச் சிநேகிதி எங்களை விடுவதாக இல்லை.

"இன்று சாப்பாடு பலம் போலிருக்கிறது. மணம் மூக்கைத் துளைக்கிறதே!" என்று வேறு சொல்லி வைத்தாள். கட்டின மூட்டையைப் பிரித்து அவளுக்கும் கொடுத்தேன். குழந்தைகள் ஏமாற்றத்துடன் மூலைக்கு மூலை உட்கார்ந்தார்கள். அவ்வளவுதான். அன்று புழலேரிக்கு நாங்கள் போகவில்லை. அவளைக் குறை சொல்வதற்கில்லை. கெட்டிக்காரி! என்னிடம் நிறைந்த அன்பு உடையவள்தான், ஆனால் கொஞ்சம் இங்கிதம் தெரியவில்லை. அவ்வளவுதான்.

வெகு நாட்கள் திட்டம் போட்டு ஒரு வீட்டுக்குப் போவோம். நாம் போன சமயத்தில் அவர்கள் வீட்டில் யாருக்காவது நோயாக இருந்து கவலைப்பட்டுக் கொண்டிருப்பார்கள். அவர்கள் மனத் தெம்புக்கு இரண்டொரு வார்த்தைகளைச் சொல்லி விட்டு மற்றொரு சமயம் வருவதாகச் சொல்லிப் புறப்படுவது தான் இங்கிதம்.

சில சமயம் நம்முடைய சிநேகிதி வழக்கம் போல் சிரித்த முகமாக இல்லாமல் இருப்பாள். வீட்டில் என்ன பூசலோ, தாம்பத்யக்கலகமோ? இவைகளை நாமாக ஊகித்து நாசூக்காக விடைபெற்றுக் கொள்வதுதான் இங்கிதம்.

ஒரு நாள் என் உறவினர் வீட்டுக்குப் போயிருந்தேன். வீட்டுக்கார அம்மாள் தூசிகளைத் தட்டி வீட்டைச் சுத்தம் செய்து கொண்டிருந்தாள். ஆனால் என்னைக் கண்டதும் மிகவும் வெட்கப்பட்டுக் கொண்டு குன்றிப் போனாள். "தினம் வேலைக்காரன் இந்த வேலைகளையெல்லாம் செய்வான். இன்று அவன் இல்லை. நான் செய்யும்படி ஆகிவிட்டது" என்று சமாதானம் சொன்னாள். அந்த அம்மாள் வீட்டில் வேலைக்காரன் இல்லை என்பதை அறிவேன். ஆனாலும் அதை நான் கண்டு கொள்வது அநாவசியம்தானே. 'நம் வீட்டு வேலைகளைச் செய்வதில் எவ்விதக் கௌரவக் குறைவும் இல்லையே?' என்றேன். பிறகு அந்த அம்மாள் சகஜபாவத்துடன் இருந்தாள். இவைபோன்ற சிறு செய்கைகளில்தான் அவசியம் இங்கிதம் தேவை.

இப்படிக்கு,
பூமாதேவி




"ஸார்! நம் தேர்தல் கூட்டத்துக்கு நிறையக் கூட்டம் இருக்கணும். எள் போட்டால் கீழே விழக் கூடாது!"

"கூட்டத்தைப் பற்றி நீங்கள் கவலைப் படாதீங்க.......ஆனால் நீங்கள் வரும்போது எள் கொண்டு வர மட்டும் மறந்துடாதீங்க!"



# கற்றுக்கொண்டு வா!



"கொடுப்பதிலே சந்தோஷமா? பொருளை அடைவதிலே சந்தோஷமா?" என்று கேட்டார் ரிஷி.

ஒரு ஏழை ஸ்திரீ எழுந்து பேசினாள். "சுவாமி! நான் குழந்தைக்குப் பால் கொடுக்கும்போதுதான் அதிக மகிழ்ச்சியடைந்தேன். பசிக்குச் சாப்பிட்டபோது அவ்வளவு மகிழ்ச்சியை நான் காணவில்லை; பிறகு குழந்தையை எடுத்துப் பால் கொடுத்தபோது ஆனந்தம் அடைந்தேன்' என்றாள்.

அடுத்தபடி இன்னொரு பெண்மணி எழுந்து பேசினாள். "நான் என் வீட்டில் சமைத்து விட்டு வீட்டிலுள்ளவர்களுக்கு உணவு பரிமாறினபோது அடைந்த சந்தோஷம் பிறகு நான் தனியாக உட்கார்ந்து சாப்பிட்டபோது அடையவில்லை" என்றாள்.

அதன்பிறகு ஒரு செட்டியார் எழுந்தார்.

"சுவாமி! இந்த அம்மைமார்களுடைய அனுபவத்தைப் போலவே நானும் உண்மையைக் கண்டேன். வாழ்நாளெல்லாம் நான் சம்பாதித்துத் திரட்டிய போது திருப்தியோ, சந்தோஷமோ, சுகமோ காணவில்லை. கடைசியாக ஊராருக்குத் தருமம் செய்ய ஆரம்பித்தேன். ஏழைகளுக்குக் கொடுக்க ஆரம்பித்தேன். அவர்கள் என்னைச் சுற்றிக் கொண்டு சந்தோஷப்பட்டார்களோ அப்போதுதான் நான் உண்மையாக மகிழ்ச்சியை அடைந்தேன், ஆனந்தத்தைக் கண்டேன்" என்றார்.

"இவர்களுடைய அனுபவத்தினால் இன்று ஞானம் அடைந்தோம்" என்றார் ரிஷி.

* * *



ஈச்சம்பாக்கத்தில் ஒரு பிராமணர் தினமும் அதிகாலையில் எழுந்து, நியமங்களை முடித்து விட்டு, பிக்ஷா பாத்திரத்தைத் தோளில் மாட்டிக்கொண்டு, வேத மந்திரங்கள் பாடிக்கொண்டு அக்கிரகாரத்தில் வீடுவீடாகச் செல்வார்.

வினு

எல்லாருக்கும் இந்த வைதீகரிடத்தில் மிகப் பிரியம். வீட்டுக்குள் அடிவைப்பதற்கு முன்னமே அரிசி கொண்டு வந்து போடு வார்கள். அவரும் ஆசீர்வதித்து விட்டுச் செல்லுவார். ஏழைகளும் பணக்காரர் களும் ஒரேவிதமாகப் பிக்ஷை போடு வார்கள். அவரும் ஒரேவிதமாக ஆசீர் வதிப்பார். நான்கு ஏழைக் குழந்தை களுக்கு அன்னம் போட்டுத் தானும் சாப் பிட்டு, அந்தக் குழந்தைகளுக்குப் படிப்பும் சொல்லிக் கொடுப்பார்.

பாட்ராச்சாரியார் மனைவி தன் செல்வக் குழந்தை கேசவனைக் கொண்டு பிக்ஷை போடச் சொல்வாள். தானே போட்டால் அந்தப் புண்ணியம் தன்னோடு போகும். குழந்தைக்கு அந்தப் புண்ணியம் சேர வேண்டும் என்று குழந்தையைக்கொண்டு போடச் சொல்லுவாள். போட்டபின் "போட்டாயா?" என்று கேட்டுக் கேச வனை முத்தமிடுவாள்.

"அம்மா! இன்று நான் உபாதானம் போடுகிறேன்" என்று கேசவனுடைய தங்கை சிறு குழந்தை லக்ஷ்மியும் கேட்டு ஒவ்வொரு நாள் அவளும் போடுவாள்.

பக்கத்தில் கேசவன் நின்று கொண்டு, "போடு, கீழே சிந்தாமல் போடு" என்று சொல்லிக் கொண்டு நிற்பான்.

இந்தக் குழந்தைகள் ஏதேனும் தின் பண்டம் சாப்பிடும்போது வேறு குழந் தைகள் யாரேனும் பக்கத்தில் நின்றால் முதலில் அவர்களுக்குக் கொஞ்சம் கொடுத்து விட்டுப் பிறகு சாப்பிடுவார்கள். எல்லாரும் ஒருமிக்க, சந்தோஷமாக அனு பவித்துக் கொண்டு சாப்பிடுவார்கள். இப்படியே குழந்தைகள் நல்லமுறையில் வளர்க்கப்பட்டு வந்தன.

அடுத்த வீட்டில் சாரதாம்பாள் ராக வய்யர் மனைவி—கொஞ்சம் பணக்காரர் கள்தான்—அந்த அம்மையும் தன் குழந்தை யைக் கொண்டே பிராமணருக்கு உபா தானம் போடுவாள். காரணம் தெரியுமா?

உபாதானம் போடும்போது இரு கைகளி லும் நிறையக் கொண்டு வந்து போட வேண்டும் என்பது சாஸ்திரம். சாரதாம் பாள் தன் கையால் உபாதானம் போட் டால் அதிகமாக அரிசி செலவழியும்; குழந்தை போட்டால் சாஸ்திரத்துக்கும் சரியாக இருக்கும், அரிசியும் அதிகமாகச் செலவழியாது என்று அந்த அம்மையார் அடுத்த வீட்டு வழக்கத்தைத் தானும் அனுசரித்தாள்.

* * *

யமன்: "சாரதாம்பாளே, நீ ஏன் குழந்தையைக் கொண்டு உபாதானம் போட வைத்தாய்?"

*சாரதாம்பாள்:* "பக்கத்து வீட்டுப் பாட்ராச்சாரியார் சம்சாரமும் அப்படித் தானே செய்து வந்தாள்? நானும் அப் படியே செய்தேன்."

*யமன் சிரித்தான்:* "போ, மறுபடியும் சரியாகப் பிச்சை போடக் கற்றுக்கொண்டு பிறகு இங்கே வா!" என்று பூலோகத்துக் குத் திருப்பி அனுப்பி விட்டான்.



ராஜாஜி





நூறு வருஷங்களுக்கு முன்னால் இந்த நீராவியில் செல்லக்கூடிய மோட்டார் வண்டி இங்கிலாந்தில் ஓடிக்கொண்டிருந்தது. எப்போதும் இந்த வண்டியின் பின்னால் ஒருவன் நின்று கொண்டு உலையில் கரி தள்ளிக் கொண்டிருப்பான்.

1875-ம் வருஷம் ஆஸ்திரியாவில் வசித்த ஸீக்பிரீட் மார்கஸ் என்னும் ஜெர்மன்காரர் முதல் முதலாகப் பெட்ரோலில் ஓடும் மோட்டாரைக் கண்டு பிடித்தார். ஆனால் அந்த மோட்டாரினால் போக்குவரத்துக்கு ஆபத்து என்று தடை செய்தனர்.

# மோட்டார் வளர்ந்த கதை





காட்லீப் டய்ம்லர் என்பவர் கண்டு பிடித்த முதல் மோட்டார் சைக்கிள். 1885-ல் ஓட ஆரம்பித்தது. இந்த மோட்டார் சைக்கிளில் பெட்ரோலில் ஓடும் இயந்திரமும் உண்டு.

பின்னால் லண்டன் பார்லிமெண்டின் "ஒவ்வொரு நீராவிமோட்டாருக்கு முன்னால் ஒரு ஆசாமி சிவப்புக் கொடி காட்டியபடி நடந்து செல்ல வேண்டும்" என்று ஒரு சட்டம் வந்ததால் தான் இது நிறுத்தப்பட்டது.



மோட்டார் தொழிலின் மன்னர் என்று பெயர் பெற்ற ஹென்ரிபோர்ட் 1894-ம் ஆண்டில் ஒரு மோட்டாரை உற்பத்தி செய்தார். இந்தக் குதிரையில்லா வண்டியை அப்போதைய மக்கள் அவ்வளவாக விரும்பவில்லை.





1912-ல் மோட்டாரில் 'பிரேக்' போடக் கூடிய சாதனம் அமைக்கப்பட்ட வண்டி கண்டுபிடிக்கப்பட்டது. திடீரென்று 'பிரேக்' போட்டால் பின்னால் வரும் வண்டிகள் இதன் மீது மோதிக் கொள்ளுமென்று இதர வண்டிக்காரர்கள் பீதியடைந்தனர்.





முதல் மகா யுத்தம் வரை பெரும் பணக்காரர்களே கார் வைத்துக் கொள்ள முடிந்தது. ஆனால் சீக்கிரமே பல பேர்கள் மோட்டார் வாங்கும் நிலைமை ஏற்பட்டது. இப்போது அழகழகான, விதம் விதமான, புதிய மாடல்களில் கார்கள் தோன்றி வருகின்றன!

# கிடைத்த பங்கு!

அந்த நகரத்தில் ஒரு பெரிய எண்ணெய்த் தொழிற்சாலை நடைபெற்று வந்தது. அதன் அதிபர் கந்தசாமிக்கு உற்றார் உறவினர் ஒருவரும் கிடையாது. எந்நேரமும் எண்ணெய்த் தொழிற்சாலையின் அபிவிருத்தியிலேயே அவர் தம் கவனத்தைச் செலுத்தினார்.

சில வருஷங்களுக்குப் பிறகு கந்தசாமி திடீரென்று நோய் வாய்ப் பட்டார். அவர் உடல் நிலை வரவரக் கவலைக்கிடமாயிற்று. அவர் தம்முடைய சொத்து அனைத்தையும் ஆலையிலுள்ள சிப்பந்திகளுக்குப் பகிர்ந்தளித்துவிட முடிவு செய்து விட்டதாகச் சிப்பந்திகள் அனைவரும் பேசிக் கொண்டார்கள். உடனே அவர்கள் ஒவ்வொருவரும் "கந்தசாமியின் சொத்தில் எனக்கும் பங்கு கிடைக்கும். அப்புறம் ஆலையில் கஷ்டப்பட்டு வேலை செய்ய வேண்டியதில்லை" என்று எண்ணி மகிழ்ந்தனர். இத்தகைய சிந்தனையிலேயே சிப்பந்திகள் இருந்ததால் அவர்களுக்கு வேலையில் சிரத்தை குறைய ஆரம்பித்தது.

இச் சமயத்தில் அவர் தம் படுக்கைக்கு அருகிலே ஒரு பெரிய பெட்டி வைத்திருப்பதாயும், தம் ஆஸ்தி அனைத்தையும் அந்தப் பெட்டிக்குள் வைத்திருப்பதாயும் தொழிற்சாலையில் வதந்தி பரவிற்று.

கந்தசாமிக்கு உடல் நிலை மோசமாகிக் கொண்டே போயிற்று. திடீரென்று ஒரு நாள் அவர் இவ்வுலகை விட்டு மறைந்து விட்டார்.

கந்தசாமி அவர்கள் எதிர் பார்த்தபடியே உயில் எழுதி வைத்திருந்தார்.

"என் வாழ்க்கையில் நான் கஷ்டப்பட்டு முன்னுக்கு வந்த விவரங்களை 'என் சுயசரிதம்' என்று ஒரு புத்தகம் எழுதி அச்சிட்டு வைத்திருக்கிறேன். அந்தப் புத்தகங்கள் அவ்வளவும் பெரிய பெட்டி ஒன்றில் பத்திரமாக வைத்திருக்கிறேன். என் ஆலையில் உள்ள ஒவ்வொரு சிப்பந்தியும் ஆளுக்கொரு புத்தகம் எடுத்துக் கொள்ளட்டும். என் சுயசரிதத்தைப் படித்து அவர்களும் முன்னுக்கு வரட்டும். இந்த எண்ணெய்ச் சாலையும், இதில் வரும் லாபமும் இந்த ஊர் கல்வி ஸ்தாபனத்தைச் சேரட்டும்."

# ஊமை ராஜா

## 17. அபூர்வ சந்திப்பு!

பெரியவர் விஜயனின் முதுகில் அன்போடு தட்டியவாறு, "இப்பொழுது நீ நன்றாகப் பேசும் சக்தியைப் பெற்று விட்டாய். செவிகளின் உணர்வுகளையும் பெற்று விட்டாய். ஆகவே நீ நாட்டுக்குச் சென்று உன் தந்தையின் சொற்களைக் கேட்க வேண்டும்" என்றார் விஜயனது முகத்தில் எல்லையற்ற சோகம் குடி கொண்டிருந்தது.

அவன் அவரைப் பணிவுடன் பார்த்தபடியே, "சுவாமி, இவ்வளவு தயாள குணங்களுடனுள்ள தங்களை விட்டு நான் எப்படிப் பிரிவேன்?" என்றான்.

பெரியவர் அன்புடன் அவன் முதுகைத் தடவியவாறு, "குழந்தாய்! நீ ராஜகுமாரன் அல்லவா? நீ உன் கடமையைத் தாய் தந்தையருக்கும், நாட்டுக்கும் செய்ய வேண்டாமா? ஆகவேதான் உன்னைப் போகுமாறு கூறுகிறேன். ஆனால் உன்னிடம் இப்



ஆர். ரோஜாவான்

பொழுது இன்னொரு புத்திமதியையும் கூற வேண்டியிருக்கிறது" என்றார். அவரது முகத்தில் அநேகம் வியப்புக் குறிகள் தோன்றிக் கொண்டிருந்தன.

விஜயன் பரபரப்புடன், "சுவாமி! தாங்கள் புத்திமதி மட்டுமென்ன, எத்தகைய கட்டளையிட்டாலும் அதை நிறைவேற்றச் சித்தமாயிருக்கிறேன்" என்றான்.

"குழந்தாய்! நான் கூறப் போவது கட்டளையெதுவுமில்லை. புத்திமதிதான். அதாவது நீ இதை விட்டுக் கிளம்பிச் செல்லும் வழியிலும் அரண்மனையிலும் எவருடனும் பேசவே கூடாது. பழைய ஊமைத்தனத்துடனேயே கொஞ்ச காலம் வரையில் இருக்க வேண்டும். இதுவும் உன் நன்மைக்காகவேதான்."

விஜயன் திகைப்பு நிறைந்த பார்வையுடன் பெரியவரை நோக்கினான். அவர் மீண்டும் கூறினார்: "நான் சொல்வதை நன்றாக நினைவில் வைத்துக் கொள். புதுமையாக உனக்குக் கிடைத்துள்ள இந்தச் செவிகளின் சக்தி வலிமையுடன் உன் நாவைப் பேசுமாறு தூண்டும். அப்பொழுதெல்லாம் நீ 'படபட' வென்று

பேசுவதற்கே துடிப்பாய். ஆனாலும் நீ மிகுந்த சாமர்த்தியத்துடன் அதைச் சமாளிக்க வேண்டும்.''

ராஜகுமாரன் தன் இரு கைகளையும் கூப்பியவாறு, ''அப்படியே உறுதியுடன் இருக்கிறேன், சுவாமி! எத்தனை காலம் அவ்வாறு இருக்க வேண்டுமெனத் தாங்கள் ஆணையிடுகிறீர்களோ, அது வரையில் இருக்கிறேன், சுவாமி!'' என்றான்.

பெரியவர் சற்று நேரம் வரையில் யோசித்தபடியே நின்றார். பின்னர் திரும்பிச் சென்று அங்குள்ள சுவடிக் கட்டுகளில் ஒன்றை எடுத்துக் கொண்டு அவனைச் சமீபித்தார். ''நீ எப்பொழுது பேச வேண்டிய சந்தர்ப்பம் வருமோ, அப்பொழுது நானே நேரில் வந்து உனக்குக் கூறுவேன். அதுவரையில் நீ ஊமை ராஜகுமாரனாகவே தான் இருந்து வர வேண்டும். இச்செயல் உனக்குச் கடினமானதுதான். ஆகவே நீ இந்தச் சுவடியை எடுத்துச் செல். இதில் மகாகவி வள்ளுவரின் குறள்கள் அடங்கியிருக்கின்றன. உன்னுடைய மௌனங்களுக்கு இது மிகவும் உதவி புரியும்!''




விஜயன் மிகுந்த பக்தியுடன் அச் சுவடிக் கட்டை வாங்கிக் கொண்டு அவரை வணங்கினான். அவர் அவனுக்கு நல்லாசிகள் கூறினார். பிறகு அவனைத் தெற்கு நோக்கிச் சென்று மீண்டும் கிழக்கே போகுமாறு வழிகளைக் கூறினார் பெரியவர்.

புதுமையடைந்த ராஜகுமாரன் உற்சாகத்துடன் பயணத்தைத் தொடங்கினான். பெரியவரிடம் பிரியா விடை பெற்றுச் சென்றான் விஜயன்.

ராஜகுமாரனுக்கு இப்பொழுது வழி யெல்லாம் கடினமாகவே தோன்றவில்லை. குயில்களின் இனிய குரல்களும் கிளிகளின் இனிய கொஞ்சல்களும் அவன்



''எங்கள் வீட்டு வேலிக் கம்பி மேலே தினமும் ஒரு பேய் வந்து உட்காருகிற மாதிரி கனவு காண்கிறேனுங்க. இதற்கு என்ன செய்யலாம்?''

''வேலிக்கம்பிகளை நல்லா கூர் பண்ணிவை!''

காதுகளுக்கு மிக நூதனமாக இருந்தன. வெகு தூரத்திலிருந்து கேட்டுக் கொண்டிருந்த ஆந்தையின் அலறலும் கூட அவனது செவிகளுக்கு இன்பமாக இருந்தது! அவன் தன் கால்களுக்கும்கூட ஒரு புதுமையான சக்தி ஏற்பட்டு விட்டது போன்று உணர்ந்தான்.

காலை வெயிலின் ஒளியில் ஒவ்வொரு காட்சியும் அவனுக்கு ரமணீயமாகத் தோன்றியது. மணற்பாங்கான பாதைகளைக் கடந்து பழைய கூழாங்கற் பூமியையடைந்தான். அப்பொழுதுதான் அவனுக்கு மேகலாவின் நினைவு எழுந்தது! ஏனென்றால், சற்றுத் தூரத்துக்கப்பால் அந்தப் பெரிய ஆலமரம் தெரிந்தது! 'இதற்குள்ளாகவா இவ்வளவுதூரம் வந்து விட்டோம்?' என்று அவனுக்கு ஆச்சரியமாக இருந்தது. அவனுடைய மனம் கீழ்க்கண்டவாறெல்லாம் யோசித்தது—

'ஆஹா! இப்பொழுது அவள் அங்கேயிருந்து, தனக்கு ஏற்பட்டுள்ள பேசும் சக்தியை யறிந்தால் எவ்வளவு சந்தோஷமடைவாள்? எவ்வளவு சந்தோஷமாக உரையாடுவாள்? அன்று — எவ்வளவோ பேச முடியாதவற்றை யெல்லாம் எழுதி எழுதிக் காட்டினளே? அவளுடைய இனிமையான குரலொலியையும் எவ்வளவு உற்சாகத்துடன் கேட்டுக் கொண்டிருக்கலாம்?'

'ஹும்! அந்த நன்றி கெட்டவளுடன் எதற்காகப் பேச வேண்டும்? மானைப் பிடித்துக் கொண்டு வரும்படி அனுப்பி விட்டுத் தந்திரமாக ஓடியவள்தானே? அவள் மனத்தில் உண்மையான அன்பு இருந்திருந்தால் எவ்வளவு யுகமானாலும் அங்கேயே எனக்காகக் காத்திருக்க மாட்டாளா? பசப்புக்காரி!'

'ஏன்? ??? அவளுடன் எப்படிப் பேச முடியும்? பெரியவர் கூறிய புத்திமதிகளைப் புறக்கணித்தது போலல்லவா ஆகும்? அதை மீறிப் பேசினால் எத்தகைய ஆபத்துக்கள் நேரிடுமோ?'

'ஆஹா! இவ்வாறான சந்தர்ப்பங்கள் நேரிடுமென்று தெரிந்துதானே அந்தத் தீர்க்கதரிசி — இப்படியொரு தடையை விதித்துள்ளார்! வேண்டாம், அவள் அங்கு இருக்கவும் வேண்டாம்; அவளுடன் பேசவும் வேண்டாம்!'

ராஜகுமாரன் இப்படி யெல்லாம் யோசித்தபடியே நடந்து கொண்டிருந்தான். ஒருகால் — அவள் அங்கே இருந்தாலும் இருக்கலாம் — என்ற எண்ணம் தோன்றவும் அவன் சற்று நேரம் கீழே உட்கார்ந்தான். பின்னர், சுவடிக் கட்டைப் பிரித்துப் பார்த்தான். அதிலிருந்த 'அகர முதல எழுத்தெல்லாம் ஆதி பகவன் முதற்றேயுலகு' என்ற செய்யுள் அவனது கண்களில் பட்டது.

'ஆஹா! எத்தகைய உன்னதமான பொருளைக் கொண்ட காவியம்!' என்று எண்ணமிட்டபடியே அவன் நாலாபுறங்களையும் பார்த்தான். பின்னர், அச் செய்யுளைப் பல தடவைகள் இரைந்து படிக்கத் தொடங்கினான். தலைக்கு நேர் மரத்திலிருந்த சில அணில்கள் !மட்டிலும் அவன் படித்ததை ஆமோதிப்பது போன்று 'ஊ'ங்காரமிட்டன!

சிறிது நேரத்துக்கெல்லாம் ராஜகுமாரன் மீண்டும் கிளம்பினான். வழியிலிருந்த அநேகம் பள்ளங்களையும், புதர்களையும் அவன் கடக்க வேண்டியிருந்தது. ஏறக்குறைய அவன் ஆலமரத்தை நெருங்குகையில், குதிரைகளின் கனைப்புச் சத்தம் அவன் செவிகளுக்குக் கேட்டது. அவன் சட்டென நின்றபடியே ஆலமரத்தின் கீழ்ப்புறங்களை உன்னிப்புடன் பார்த்தான்.

''ஆ! என்ன அதிசயம்! பத்து தினங்களுக்கு முன் அவன் பார்த்திருந்த அதே காட்சிகளைத்தான் இப்பொழுதும் அந்த ஆலமரம் கொண்டிருந்தது! தொங்கிக் கொண் டிருந்த விழுதுகளில் நான்கு குதிரைகள் கட்டப் பட்டிருந்தன. மரத்தின் அடியிலிருந்த பெட்டியின் மீது— அவள்—அப்பெண் மேகலாவேதான் உட்கார்ந்திருந்தாள். பாவம்! அவளது தோற்றம் மிகப் பரிதாபமாக இருந்தது. அவள் அப் பெட்டியின் மீது உட்கார்ந்து ஏதோ ஆழ்ந்த சிந்தனையிலோ, துயரத்திலோ மூழ்கியிருந்தாள்.

(தொடரும்)



பார்க்கத் தேவையில்லை

ருசியிலிருந்து வித்தியாசம் தெரியலாம்!

முற்றிலும் புதியது!

கோலினஸ் ஸூப்பர் வொய்ட்




பேப்பர்மின்டின் குளுமையும்,
இனிய வேற்றுமையுமுள்ள
முற்றிலும் புதிய ருசி

ஸூப்பர்-வொய்ட்
புன்னகையில் ஒளி வீசுகிறது!

பிடிக்க
சௌகரியமான
புதுவித மூடி

GK. 3263



# கடல் கண்ட கனவு

சோமு

## இருபத்துமூன்றும் அத்தியாயம்

## துறவியும் நங்கையும்

ஆனந்தமயமான நிலவும், தெளிந்த நீல வானமும், எல்லையற்ற பெருங்கடலும் கண்ணையும் மனத்தையும் கவரும் போது, மரக்கலத்திலே யாத்திரை செல்வது எத்தனை இன்பமான அநுபவம்! இதற்கு முன்பு இந்த அநுபவத்தைப் பற்றிப் பலவிதமாகக் கற்பனை செய்து பார்த்திருக்கிறாள் யாழ்நங்கை. இப்பொழுது அந்தக் கனவு நனவாகி விட்டது. ஆனால் ?......

பூரண சந்திரனும் அவனுடைய அமுத முகத்தைத்தொட்டு விளையாடத் துடித்து எழும் நீல அலைகளும், பரிசுத்தமான தெளிந்த ஆகாயமும் இதற்கு முன்பு யாழ்நங்கையின் கற்பனையிலே தோன்றியதுண்டு. அலைகள் தவழும் கருங்கடலின் பரப்பிலே அன்னப் பறவை போன்று எழிலாக மிதக்கும் ஒரு மரக்கலத்திலே இன்பமான இதயமும் தானுமாகச் செல்வது போலவும், அந்த சாந்த மயமான வேளையின் மோகனத்தில் தனது இயத்தின் தந்திகளையே கொண்டு கருதி சேர்த்து அந்தப் பேரானந்த லயத்திலே யாழை மீட்டி வானையும் கடலையும் இசைத் தந்திகளினால் அளந்து நிற்பது போலவும், அப்பொழுது தனது அருகிலே அந்த இசையின் நாதத்துக்கு மனித உருவம் கொடுப்பது போல் தன் இன்னுயிர்க் காதலன் வீற்றிருந்து மெய்யும் மனமும் ஒலி வண்ணத்திலே இணைவது போலவும் எல்லாம் கனவு கண்டிருக்கிறாள் யாழ் நங்கை! ஆனால் இன்று அவளுடைய அநுபவம் என்ன?

எந்தப் பேரியாழைக் கடலின் பரப்பிலே மீட்ட வேண்டும் என்று கனவு கண்டாளோ, அதே பேரியாழ் அவளுடன் இப்பொழுதும் இருக்கவே இருந்தது. ஆனால் உறைக்குள்ளே வைக்கப் பட்டு அந்த மரக்கலத்தின் அந்தரங்க அறையிலே மனிதர்களின் கண் பட்டு விடாதபடி மறைத்து வைக்கப்பட்டிருந்தது! யாழ் நங்கையின் அருகில் இருந்தது யார்? இசையும் காதலும் இணைந்து நிற்க வேண்டிய காதலன் இல்லை! இந்த அகில உலகத்தையும் துறந்து நின்ற ஒரு பெருந் துறவி இருந்தார். மாதர்களின் எழில் எல்லாம் ஒன்று கூடி எத்தனையோ பல ஆண்டுகளாகத் தவம் இருந்து அற்புதமான ஒரு பெண்ணரசியாக அவதரித்தது போல், அழகுத் திருமேனியோடு விளங்கிய ஒரு பெண்ணரசி அந்தத் துறவி! பெண்மையின் அழகையும் மீறித் தவத்தின் கனல் அந்த முகத்திலே தீப்போலக் காந்தி வீசிக் கொண்டிருந்தது. இளமையும், யாக்கையும், மனித வாழ்வும் நிலையற்றன என்ற பேருண்மையை நன்றாக உணர்ந்து நின்ற அந்தப் பெண் துறவியார், யாழ் நங்கையின் அருகிலே அமர்ந்து நிலாவையும் கடலையும் நோக்கியவாறு மோனமாக இருந்தார். கொந்தளிக்கிற கடலின் அலைகளுக்கு மத்தியில் அந்தத் துறவியின் உள்ளம் மட்டும் சலனமின்றி நிம்மதியாக மிதந்தது! யாழ் நங்கைக்கு இது மிகப் பெரும் வியப்பைத் தந்தது. கேட்டாள்:

"அம்மணி! உணர்ச்சிகளை வென்று நிற்கக் கூடிய பக்குவம் என்ன என்பது பற்றி இது வரை நான் கற்பனைகூடச் செய்ததில்லை. தங்களைப் பார்க்கப் பார்க்க அந்தப் பக்குவம் எனக்குப் பெரிய ஆச்சரியத்தைத் தருகிறது. இந்தக் கருநீலக் கடலிலே யாத்திரை செய்ய வேண்டும் என்று நான் ஆசைப் பட்டதுண்டு. ஆனால் அந்த ஆசை வேறு விதம்! எந்த நேரத்தில் நம்மையும் இந்தப் பேரியாழையும் அபகரித்துப் போகப் பகைவர்கள் வந்து பாய்வார்களோ, சொல்வதற்கில்லை. இப்படிப்பட்ட சூழ்நிலையிலும் தங்களுடைய இதயத்தின் அந்த எல்லையற்ற நிம்மதி

எனக்குப் புரியவே யில்லை! இந்த மரக் கலத்தில் நாம் ஏறிக் கொண்ட கணத்திலிருந்து தாங்கள் என்னிடம் காட்டி வருகிற அன்பு இந்தக் கடலைப் போல அத்தனை பெரிதாக இருக்கிறது. ஆனால் அதே சமயம், அத்தனை அன்பான தங்களுடைய உள்ளத்தில், அத்தனை குளுமையான தங்கள் மெல்லிய இதயத்தில், சலனமோ, அச்சமோ இல்லாதபடி இத்தனை வைராக்கியமும் எப்படிக் குடி கொண்டிருக்கிறது என்பதை எண்ண எண்ண எனக்கு வியப்புத் தாங்க முடியவில்லை!''

இவ்வாறு கூறினாள் யாழ் நங்கை. இந்த வார்த்தைகளைக் கேட்டுக் கொண்டிருந்த அந்தப் பெண்மணி, சமணத் துறவி, புன்முறுவல் செய்தார். பிறகு சொன்னார்:

''அம்மா நங்கை! புத்த பெருமானைப் பற்றி நமது செந்தமிழ் நாட்டுக் கவிஞர் ஒருவர் ஓர் அற்புதமான பாடல் பாடியிருக்கிறார். அதன் கருத்தை உனக்குச் சொல்கிறேன், கேள்.''

இவ்வாறு கூறி விட்டு யாழ் நங்கையிடம் புத்த பெருமானைப் பற்றிப் பேச ஆரம்பித்தார் அந்தத் துறவியம்மையார்.

''நங்கை! புத்த பெருமானுடைய உள்ளம் ஒரு கருணைக் கடல். இந்த உலகத்தில் ஒரு சிறு உயிரும் கூட வேதனைப்படுவதைப் பார்த்து அவரால் அதைத் தாங்க முடியாது. அருள் என்ற தேன் கசிந்து சொட்டிக் கொண்டேயிருக்கக் கூடிய ஒரு மெல்லிய மலர் போன்றது புத்தருடைய இதயம்! மலரை விட மென்மையானது அந்த இதயம்! ஆனால் அப்படிப்பட்ட புத்த பெருமானுடைய மெல்லிய இதயத்தில் எழில் நிரம்பிய பெண்களின் பார்வையாகிய கூரிய வாள் இருக்கிறதே, அந்த வாள் ஊடுருவிச் செல்ல முடியாதபடி அத்தனை வன்மையும் இருந்தது! மலரை விட மெல்லிய இதயம் என்று சொல்லப் படுகிற அந்த இதயத்தை, மன்மதனுடைய புதல்விகள் தங்களுடைய பார்வையாகிய கூரிய வாட்களால் ஊடுருவ முயன்று பார்த்துத் தோல்வியே அடைந்தார்கள்! அப்படியானால் அந்த இதயத்தை மலரை விட மெல்லிய இதயம் என்று எப்படிச் சொல்ல முடியும்?''

இப்படிச் சொல்லி விட்டு அந்தத் துறவி யாழ் நங்கையின் திகைப்பைக் கவனித்துச் சொல்லுவார்:

''நங்கை! அப்படிப்பட்ட குருதேவனின் அடியார்களுக்கு அந்தப்பெருமானுடைய இதயமே இலட்சியம்! என்னிடத்தில் நீ வியக்கக்கூடிய தன்மை ஏதாவது இருக்குமேயானல், அது புத்ததேவனின் ஆசிர்வாத பலந்தான். மற்றப்படி நானும் பூர்வத்தில் உன்னைப் போல ஆசாபாசக் கடலிலே சிக்குண்டு தவித்த ஒரு பெண்தான், அம்மா!'' என்று கூறினார் அந்தத் துறவி.

''அம்மா! என்ன சொல்கிறீர்கள் நீங்கள்? பூர்வத்தில் நீங்களும் ஆசைகளிலே சிக்கியவர்தானா? அவற்றையெல்லாம் கடந்துதானா நீங்களும் சலனமற்ற பக்குவத்தை அடைந்தீர்கள்? ஆச்சரியமாக இருக்கிறதே!'' என்று கேட்டாள் யாழ் நங்கை.

துறவி சொன்னார்: ''நங்கையே! ஆசையிலும் பாசத்திலும் சுழன்றது மட்டுமில்லை. என் வாழ்விலும் இந்தப் பேரியாழ் புகுந்து பெருத்த விபரீதங்களை விளைத்ததுண்டு. என் வாழ்விலும் இந்தப் பேரியாழினால் எத்தனையோ பேர் மாண்டு மடிந்ததுண்டு. என் வாழ்விலும் இந்தப் பேரியாழினால் இரண்டு பெரும் நாடுகளுக்குள்ளே மிகப் பெரும் போர் நடந்ததுண்டு. இன்னும் சொல்லப் போனால் என்னுடைய வாழ்விலே நடந்த அந்த விபரீதங்கள் தான் உன்னையும் சித்திராங்க பூபதியையும் பின் தொடருகின்றன!''

இப்படிச் சொல்லும்போது அந்த அம்மையார் வார்த்தைகளை ஒவ்வொன்றாக மெதுவாகப் பேசினார். பிறகு சற்று நேரம் மௌனமாக இருந்து விட்டுச் சொல்லுவார்:

''நங்கை! உனக்கு உன்னுடைய பேரியாழின் வரலாற்றைப் பற்றி ஏதாவது தெரியுமா? இதற்கு முன்பு நீ கேள்விப்பட்டிருக்கிறாயா? உண்மையை என்னிடம் சொல்லு. ஏனென்றால் நீ கேட்கும் விதத்தைப் பார்த்தால் உனக்கு எந்த இரகசியமும் இதுவரை தெரியாமல்தான் இருக்கிறது என்றல்லவா தோன்றுகிறது!''

துறவி இப்படிச் சொன்னதும் யாழ் நங்கைக்குக் கண்கள் கலங்கின.

''அம்மா! இதுவரை என் வாழ்வில் நான் பொய் பேசியதில்லை. அதிலும் உங்களைப் போன்ற ஒரு புனித ஆன்மாவின் முன்பு எதையும் ஒளித்துப் பேச யாராலும் முடியாது. இந்த நிலையில் என்னை நம்புங்கள். இதுவரை எந்த





வரலாறும் எனக்குத் தெரிய முடியாத முறையிலேதான் நான் வளர்க்கப்பட்டேன். சித்திராங்க பூபதி எங்களுடைய குங்கும மாளிகையிலிருந்து வெளியேறி விட வேண்டும் என்ற ஏற்பாட்டை வகுத்து, அதற்கான காரியங்களை யெல்லாம் தீர்க்கதரிசனத்தோடு என்னிடம் இரகசியமாகச் சொன்னவர் மதிப்பு மிக்க அமைச்சர் திலகமாகிய உதயசந்திரர்தான். பூபதி எங்கள் மாளிகையிலேயிருந்து மறைந்த அதே இரவில் நானும் பேரியாழோடு அங்கிருந்து தப்பிவிட வேண்டும் என்று சொல்லி, அதற்கான ஏற்பாடுகளைச் செய்தவரும் அவரே தான். குங்கும மாளிகையும் அங்கே என்னுடைய வாழ்வும் எனக்குப் பிடிக்காத விஷயங்கள். அவற்றிலிருந்து எனக்கு விடுதலை தருவதற்காகத் தோன்றிய மனித தெய்வம் என்றே நான் உதயசந்திரரைப் பாவித்து வணங்குகிறேன். என்னுடைய பிறப்பையும் எனது பூர்வ வரலாற்றையும் பற்றி ஏதோ இரகசியம் உண்டு என்பதை நான் அறிவேன். தருணம் வரும்போது அவற்றை யெல்லாம் தெரிந்து கொள்வேன் என்று மட்டும் உதயசந்திரர் என்னிடம் கூறினார். மற்றப்படி என்னைப் பற்றியோ அல்லது இந்தப் பேரியாழைப் பற்றியோ எனக்கு வேறு எந்தச் செய்தியும் தெரியாதம்மா!''

யாழ் நங்கை பேசிய இந்த வார்த்தைகளில் பரிசுத்தம் தொனித்தது. இதயம் திறந்து பேசுகிற பேச்சு என்பது துறவிக்கு நன்றாகத் தெரிந்தது.

**உ**ண்மை: யாழ் நங்கைக்கு அதற்கு மேல் ஒன்றும் தெரியாது. அன்றிரவு சித்திராங்க பூபதி குங்கும மாளிகையிலிருந்து தப்பிச் செல்வதற்கு வேண்டிய எல்லா வசதிகளையும் செய்து கொடுத்த உதயசந்திரன், யாழ் நங்கையும் பேரியாழும் குங்கும மாளிகையிலிருந்து வெளியேறுவதற்கான ஏற்பாடுகளையும் மிகவும் சாமர்த்தியமாகச் செய்து முடித்திருந்தார். சித்திராங்க பூபதி சிவிகையிலே ஏறிச் சித்தண்ண வாசல் மலைக்குச் சென்றான். யாழ்நங்கையோ இன்னொரு சிவிகையிலே பேரியாழோடு மாமல்லபுரத்துக்கு அழைத்துச் செல்லப்பட்டாள். மாமல்லபுரத்துக் கடற்கரையிலே, மலைகளும் குன்றுகளுமாக இருந்த சமணக் கோயில்களுக்கு மத்தியிலே நிம்மதியாக நின்ற மாபெரும் சமணப் பள்ளிகளுக்குள்ளே, சில பெண் துறவிகள் யாழ் நங்கையின் வரவுக்காகக் காத்திருந்தார்கள்!

சிவிகை வந்து சேர்ந்ததும் மேற்கொண்டு காரியங்கள் மிகவும் வேகமாக நடைபெற்றன. மாமல்லபுரம் துறைமுகத்தில் மரக்கலங்கள் ஆயத்தமாக நின்றன. படைக்கலங்கள் தாங்கிய போர் வீரர்கள் எந்த எதிர்ப்பையும் சமாளித்து விடக்கூடிய உறுதியோடு நின்றார்கள். யாழ் நங்கையும் பேரியாழும் மரக்கலத்திலே வலம்புரித் தீவு நோக்கிப் புறப்பட வேண்டும் என்று அறிவிக்கப்பட்டது. அதன் பேரில் சமணப் பள்ளியிலே இருந்த அம்மையார்களில் முதுமை நிரம்பியவரும், தவமும், அநுபவ அறிவும் நிறைந்தவருமாகிய பெரிய துறவி யாழ் நங்கையோடு புறப்பட முனைந்தார். அவரோடு துணை புரிவதற்கான சில துறவிகளும் புறப்பட்டார்கள்.



''உமக்கு ஞாபகமறதி அதிகமாய்ப் போன நிலைல், இனி வேலைக்கு வர வேண்டாம்னு நேற்று சொல்லி அனுப்பினேனே. இன்றைக்கு மறுபடியும் ஏன் வந்து நிற்கிறீர்?''

''அடடா! ஞாபகமறதியா வந்துட்டேன்!''

---

மாமல்லபுரத்திலிருந்து புறப்பட்ட துறவிகளின் மரக்கலத்துக்கு முன்னும் பின்னும் படைவீரர்களின் மரக்கலங்கள் சென்றன. யாழும் யாழ் நங்கையும் எவ்வித இடையூறும் இன்றி வலம்புரித் தீவை அடைய வேண்டும் என்பது அமைச்சரின் கட்டளை.

அப்படிப் புறப்பட்டுச் சென்றுகொண்டிருந்த மரக்கலத்திலேதான் யாழ் நங்கையும், சமணத் துறவியும் பழைய வரலாறுகளைப் பேச ஆரம்பித்தார்கள். பகல் முழுதும் யாத்திரை செய்த களைப்பு நீங்குவதற்காக, நிலவிலே காற்று வாங்குவதற்காக, மரக்கலத்தின் மேல் தளத்துக்கு வந்த இருவரும் இப்பொழுது பேரியாழின் வரலாற்றிலே இறங்கினார்கள். துறவி யம்மையார் சொன்னார்:

''யாழோடு பழகித் தேர்ந்த பெண்ணே! நான் சொல்லப் போகும் கதைகளைக் கேட்டு விட்டு இந்த யாழிடம் உனக்கு அச்சம் ஏற்பட்டு விடக் கூடாது! எய்தவன் இருக்க அம்பைக் கோபிப்பதில் அர்த்தம் இல்லை என்று சொல்லுவார்கள். அதுபோல இந்தப் பேரியாழின் மூலமாக எத்தனையோ விபரீதங்கள் நேர்ந்து விட்டன என்பதற்காகப் பேரியாழிடம் வருத்தப்பட்டுக் கொள்ளக் கூடாது! கல்லைக் கொண்டு மனிதனுடைய மண்டையைப் பிளக்கலாம். ஆனால் அதே கல்லைக்கொண்டு அகிம்சா மூர்த்தியான புத்த பெருமானுடைய திருவுருவத்தையும் செதுக்கலாம். நல்லதோ கெட்டதோ அது கல்லில் இல்லை. மனிதனுடைய மனத்திலேதான் இருக்கிறது!''

இவ்வாறு ஆரம்பித்த துறவியம்மை யாழ் நங்கைக்குப் பேரியாழின் பூர்வ கதையைச் சொன்னாள். சித்தண்ணவாசல் மலையிலே அமர்ந்து சமணத் துறவி பூபதிக்கு எவ்வாறு பழைய வரலாறுகளையெல்லாம் சொன்னாரோ, அவ்வாறே துறவி யம்மையாரும் யாழ் நங்கைக்குச் சந்திர சூடனுடைய கதையைக் கூறினார்.

ராஜசிம்மனுடைய மந்திரி குமாரனை சந்திரசூடன் வலம்புரித் தீவுக்குச் சென்று நீலமேக யாழ்ப்பாணரிடம் சங்கீதம் கற்ற கதையைச் சொன்னார். பிறகு சங்கீதம் கற்றுக் கொண்டிருந்த வாலிபன் காதலிலே சிக்கிய வினோதத்தை வர்ணித்தார். பின்னர் சாருகேசி என்ற பாணரின் குலக் கொடி சந்திரசூடன் என்ற கொழு கொம்பிலே சுற்றிய வரலாற்றையும் கூறினார் அந்த அம்மையார். அப்படி அவர் அந்த வரலாற்றை விரிவாகச் சொல்லிக் கொண்டு வரும்போதெல்லாம் தரங்கவல்லியைப் பற்றியும் பாண்டிய குமாரனைப் பற்றியும் சொல்ல வேண்டிய இடங்களில் துறவி யம்மையார் அளவுக்கு மீறிய நிதானத்தையும் உறுதியையும் குரலிலே வரவழைத்துக் கொண்டு பேசினார். இந்த நுட்பத்தை யாழ் நங்கையும் கவனித்தாள். கடைசியில் சாருகேசி தன்னுடைய தாய்நாட்டுக்காக உயிரையே தியாகம் செய்தாள் என்ற சம்பவத்தைச் சொல்லும்போது அந்தத் துறவி ஒரு துறவியாக இல்லை. ஒரு பெண்ணாக மாறி விட்டாள்! பாசங்களைக் கடந்து நின்ற எல்லையிலே கால் பாவாமல் இதயம் வழுக்கியது! உருகியது! விம்மல் கூட வந்தது! யாழ் நங்கை இதைக் கவனித்தாள். ஆனால் இடைமறித்து எதுவும் கேட்கவில்லை. உண்மையில் யாழ் நங்கைக்குமே கண்கள் இரண்டும் உருகி ஓடின.

''பெண்ணே! சாருகேசி கடலிலே மிதக்கவிட்ட பெண் குழந்தையை நினைத்து நினைத்துத் தரங்கவல்லி இரவும் பகலும் கண்ணீர் விட்டாள். கடலிலே மிதந்த அந்தக் குழந்தையை, கருங் கடலிலே தவழ்ந்த அந்தச் சாருகேசியின் அழகுக் கனவை நினைத்து நினைத்துத் தரங்கவல்லியின் இதயக் கடல் எப்படியெல்லாம் குமுறிற்று. தெரியுமா? எந்தப் பேரியாழுக்காக இத்தனை விபரீதம் நேர்ந்ததோ, அந்தப் பேரியாழ் சந்திரசூடனோடு செந்தமிழ் நாட்டிலே சேர்ந்து விட்டது! எந்த வீராங்கனை அந்தத் தீவின் வாழ்வுக்காகத் தனது வாழ்வை மாய்த்துக் கொண்டாளோ, அவளுடைய குழந்தையும் அதே கருநீலக் கடலிலே மிதந்து விட்டது! இதற்குப் பிறகு தரங்கவல்லிக்கு அந்தத் தீவிலே எப்படி இருப்புக் கொள்ளும்? நீதான் சொல்லேன்!''




# கேவர்ட்

# எல்லா 35 mm சிறிய காமிராக்களுக்கும் விசேஷ பிலிம்களை அளிக்கின்றன

பொதுவான அம்சங்கள்:—

## கேவாபான் 27

அதிநேர்த்தியான க்ரைன்களுடன்கூடிய நடுத்தர வேகமுள்ள ஒரு பாங்ரோமாடிக் பிலிம். பெரிய அளவில் போட்டோவை என்லார்ஜ் செய்ய மிகத் தகுதியானது. எல்லாக் கலர்களையும் தத்ரூபமாக எடுத்துக் காட்டும். தூரத்திலிருந்தே படங்களை நன்கு எடுக்கலாம்.







## கேவாபான் 33

வீட்டினுள் செயற்கை வெளிச்சத்திலும் சூரிய வெளிச்சத்திலும் மிக வேகமாகப் படமெடுக்கக் கூடிய ஒரு சிறந்த ரக பாங்ரோமாடிக் பிலிம். அதன் வெகு வேகமாகப் படமெடுக்கும் தன்மை வெகு பாதகமான போதிய வெளிச்சமில்லாத சூழ்நிலையிலும் கூட எல்லா படங்களையும் சிறப்பாக எடுத்துக் காட்டுகிறது. பத்திரிகைகளுக்காக படம் எடுப்போர் மிகவும் விரும்பி வாங்கும் பிலிம் இதுவே.

சுலபமாகப் பகல் வெளிச்சத்தில் பிலிமைப் பொருத்தி, 20 மற்றும் 36 படங்களை எடுக்கக் கூடியதாக கேவாபான் 36 mm பிலிம்கள் உள்ளன. எல்லா கேவர்ட் வியாபாரிகளிடமிருந்தும் கிடைக்கும் பகல் வெளிச்சத்தில் பொருத்தக் கூடிய கேவர்ட் ரீபில்களை வாங்கிப் பணத்தை மிச்சப்படுத்துங்கள்.

"இந்தியர்களின் வாழ்க்கையும் விதங்களும்" என்ற புதிய கேவர்ட் போட்டோக் கலைப் போட்டியில் ஒரு பெரும் தொகையைப் பரிசாக அடையுங்கள்

**பரிசுகள் ரூ. 4,000க்கு மேல்**

முழு விவரங்களை உங்கள் கேவர்ட் டீலரிடமிருந்து பெறலாம். பிரதி வியாழன் இரவு 8 மணிக்கு இலங்கை வானொலியில் (41 மீட்டர் பாண்டில்) "போட்டோ மேலா" என்ற நிகழ்ச்சியைக் கேளுங்கள்

**ALLIED PHOTOGRAPHICS PRIVATE LIMITED**

**அலைட் போட்டோகிராபிக்ஸ் பிரைவேட் லிமிடெட்**

கஸ்தூர் பில்டிங்க், ஜாம்ஷெட்ஜி டாடா ரோடு, பம்பாய்-1



மாடல் '75'

• எங்கும் கிடைக்கும்

**Prestige**

ஒவ்வொரு குடும்பத்திற்கும் உகந்தது

பிரஸ்டீஜ்
பிரஷர் குக்கர்கள்

---

## உங்கள் குடும்பத்தைக் காப்பாற்றுங்கள்




எங்கெங்கு ருட்டுவா ரொட்டி
அபாயம் இருக்கிறதோ
அங்கெல்லாம்
பென்ஸிடாலே
தாராளமாகக்
கையாளுங்கள்



# பென்ஸிடால்

விஷமில்லே • ரணமாக்காது • கறைபடாதது

தயாரிப்பவர்

தி கல்கத்தா கெமிகல் கம்பெனி லிட்.

கல்கத்தா—29

தென் இந்திய ஆபீஸ் : 5/149, பிராட்வே, சென்னை-1

என்று கேட்டார் துறவி. யாழ் நங்கை அப்படியே உடம்பெல்லாம் சோகத்தில் மூடப்பட்டுப் பதுமையாக இருந்தாள். வார்த்தை வரவில்லை அவளுக்கு.

"அப்படிப்பட்ட தரங்கவல்லிக்கு இப்பொழுது உள்ளம் எப்படியிருக்கும்! எந்தப் பேரியாழுக்காக அவள் வலம்புரித் தீவை மறந்து செந்தமிழ் நாட்டுக்கு வந்தாளோ, அந்தப் பேரியாழ் இப்பொழுது வலம்புரித் தீவுக்குச் செல்கிறது என்றால் அவள் உள்ளத்தில் எத்தனை நிம்மதி இருக்கும்!"

இப்படிச் சொல்லும்போது துறவியின் முகம் பூரண சந்திரனைப் போல் நன்றாகப் பிரகாசித்தது. இதுவரை அந்த முகத்தை மறைத்துக் கொண்டிருந்த துன்ப மேகங்கள் இப்பொழுது விலகிவிட்டன. இதைக் கண்டதும் நிலவிலே மலர்கிற அல்லி மலரைப் போல, யாழ் நங்கையின் முகமும் மலர்ச்சி அடைந்தது. பேச ஆரம்பித்தாள்:

"அம்மணி! இந்த மரக்கலத்தின் இரகசிய அறையிலே பிறருடைய பார்வை விழுந்து விடாதபடி உறையிலே மூடி வைக்கப் பட்டுள்ள அந்தப் பேரியாழுக்குள்ளே இத்தனை சோகம் பொதிந்து கிடக்கிறதா? நினைக்கவே உடம்பு சிலிர்க்கிறதே!" என்றாள் நங்கை.

"பார்த்தாயா! அதனால்தான் ஆரம்பத்திலேயே சொன்னேன், எய்தவன் இருக்க அம்பை நோகாதே என்று!"

"அப்படியானால் எய்தவன் இப்பொழுது இருக்கிற இடம் எது என்று தெரியுமா, அம்மா? சந்திரசூடன் இப்பொழுது இருக்குமிடம் மட்டும் உதய சந்திரருக்குத் தெரியுமானால், அப்படியே அவர்..." —நங்கை இப்படிச் சொல்ல ஆரம்பிக்கும் போதே அந்த வார்த்தைகளை இடைமறித்தார் துறவி.

"அப்படியெல்லாம் சொல்லாதே! உண்மையில் இந்த விபரீத விளைவுகளுக்காக நம் எல்லாரையும் விட அதிகமாகத் துக்கப்படுகிற மனிதர் ஒருவர் உண்டு என்றால் அவர் சந்திரசூடன் தான். தம்முடைய பாபங்களுக்கு அவர் செய்த பிராயச்சித்தந்தான் இன்று நாம் மீண்டும் வலம்புரித் தீவுக்குச் செல்லும்படி துணை செய்தது!"

துறவி இப்படிச் சொன்னதும் யாழ் நங்கை திகைப்போடு கேட்டாள்:

"அம்மணி! அப்படிப்பட்ட சந்திரசூடர் இப்பொழுது எங்கே இருக்கிறார்? தரங்கவல்லியும் பாண்டிய குமாரனும் என்ன ஆனார்கள்?"

யாழ் நங்கையின் கேள்விகளில் தொனித்த ஆவலை நன்றாகப் புரிந்து கொண்ட துறவி விடை சொல்வதற்கு




அறிவிப்பாளர் :— **இதுவரை நடைபெற்ற கிராமத்தார் நிகழ்ச்சியில் பங்கெடுத்துக் கொண்டவர்கள் .........**

முன்பு செந்தமிழ் நாட்டின் திசை நோக்கிக் கரங்கூப்பினார். பிறகு சொன்னார்:

"நங்கையே! பேரியாழோடு தமிழ் நாட்டுக்குத் திரும்பிய சந்திரசூடனுக்கு ராஜசிம்ம மகாராஜனின் மரணம் பெரிய அதிர்ச்சியைத் தந்தது. தமிழ் நாட்டில் அப்பொழுதிருந்த போர்க் குழப்பங்களில் பேரியாழைப் பற்றிய நாட்டம் யாருக்கும் இல்லை. தான் செய்துவிட்ட பாபத்தின் வியாபகத்தை உணர ஆரம்பித்த சந்திரசூடன், சாருகேசியை நினைத்து உள்ளம் துடித்தார். பரம்பரை பரம்பரையாக யாழ் வாசிப்பிலே கைதேர்ந்து விளங்கிய கொடும்பாளூர்த் தேவ மாதர்களிடம் பேரியாழைச் சேர்ப்பித்து விட்டுச் சாருகேசியின் குழந்தையைத் தேடி அலைய ஆரம்பித்தார். மதுரைப் பாண்டியர்கள் மூலம் சந்திரசூடருக்கு எல்லாச் செய்திகளும் தெரிய வந்தன! இதன் விளைவாக இந்தக் கருநீலக் கடலிலே மரக்கலமும் தானுமாகத் திசைகள் எல்லாம் சுற்றித் தேடிச் சாருகேசி மிதக்க விட்ட குழந்தையைக் கண்டு பிடித்தார் சந்திரசூடன். அது ஒரு பெரிய கதை! அதே சமயம் வலம்புரித் தீவிலோ என்றால், தரங்கவல்லியும் பாண்டிய குமாரனும் பேரியாழையும் சந்திரசூடனையும் நாடி உள்ளம் துடித்துக் கடைசியில் தமிழ் நாட்டுக்கே வந்து சேர்ந்தார்கள்! அந்தச் சோகம் எல்லாம் இப்பொழுது எதற்கு? பேரியாழும் நீயும் வலம்புரித் தீவுக்குப் போய்ச் சேருகிறீர்கள் என்று



ஜாம்ஷெட்பூர் டாடா கம்பெனியைச் சேர்ந்த திரு நடராஜனுக்கும் மத்திய அரசாங்கம் நிதி இலாகாவைச் சேர்ந்தவரும், டில்லி தமிழ்ச் சங்க நிர்வாகியுமான சீனிவாச அய்யர் குமாரி திருமதி லக்ஷ்மிக்கும் சமீபத்தில் சென்னையில் விமரிசையாகத் திருமணம் நடந்தேறியது.

ஆனந்தப்பட வேண்டிய இந்தத் தருணத்தில் நாம் இருவரும் ஏன் இப்படித் துன்ப நினைவுகளிலே சுழல வேண்டும்?'' என்று கேட்டார் துறவி. பிறகு யாழ் நங்கையின் முகத்திலே துடித்த கவலையின் குறிகளைக் கவனித்து விட்டு மேற்கொண்டு சொல்லுவார் :

''பெண்ணே! கவலைப்படாதே. சந்திரசூடனும் பாண்டியகுமாரனும் சமண சங்கத்திலே சேர்ந்து சித்தண்ண வாசலிலே வாழ முனைந்தார்கள். தமிழ் நாட்டின் அரசியலிலே ஏற்பட்டு வந்த மாறுதலைக் கவனமாகப் பார்த்துக் கொண்டே உரிய தருணத்துக்காகச் சித்தண்ண வாசலிலே காத்து நின்றார்கள். என்றைக்கு உதயசந்திரன் என்ற மகா ஞானி அரசியல் அரங்கிலே தோன்றிப் பல்லவ அமைச்சராக நின்று சம்பவங்களை இயக்க ஆரம்பித்தாரோ அன்றைக்கே வலம்புரித் தீவுக்கு வாழ்வு வந்தது என்று கருதினார்கள். இன்று அதன் பயனாகத்தான் நீயும் நானும் பேரியாழோடு வலம்புரித் தீவுக்குச் செல்கிறோம்'' என்று முடித்தார் துறவி.

நங்கை கேட்டாள் : ''சித்தண்ண வாசலிலே இருக்கும் துறவிகளின் எதிர்கால ஆலோசனை என்ன என்று நான் அறிந்து கொள்ளலாமா?''

''நங்கையே! சித்தண்ண வாசலிலேயிருக்கும் இசைத் துறவியும், பெரிய துறவியும் இப்பொழுது அவர்களோடு சேர்ந்துள்ள சித்திராங்க பூபதியும்—மூவரும்-வெகு விரைவில் வலம்புரித் தீவுக்கு வந்து சேர்வார்கள். உன்னுடைய சந்தேகம் தீர்ந்ததா?''

நங்கையின் முகத்தில் பூபதி என்ற சொல் வந்ததும் நிம்மதி உண்டாயிற்று என்பதைத் துறவி கவனித்தார்.

''அம்மணி! நீங்கள் சொன்ன செய்திகள் எனக்கு எத்தனையோ நிம்மதி தருகின்றன. ஆனால் ஒன்று மட்டும் நீங்கள் சொல்லவில்லையே. பாண்டிய குமாரனோடு தமிழ் நாட்டுக்கு வந்து சேர்ந்த தரங்கவல்லிக்கு என்ன மாறுதல் எப்பொழுது நேர்ந்தது?''

''தரங்கவல்லிக்கு மாமல்லபுரம் சமணப் பள்ளியிலே சரீரம் இருந்த போதிலும், அவளுடைய ஆன்மா பேரியாழிலேதான் சுற்றி வந்து கொண்டிருந்தது. என்றைக்கு அவள் குங்கும மாளிகையைப் பற்றியும் உன்னைப் பற்றியும் அறிந்துகொண்டாளோ, அன்றைக்குத்தான் வலம்புரித்தீவின் எதிர்காலத்திலே அவளுக்கு நம்பிக்கை பிறந்தது. நாளாக நாளாக அந்த நம்பிக்கை வளர்ந்தது. உதயசந்திரனுடைய அற்புதமான சேவையினால் இப்பொழுது தான் அந்த நம்பிக்கை நிம்மதியாக உருவாகிற்று. அதனால்தான் சொன்னேன், இந்தக் கொந்தளிக்கிற கடலுக்கு மத்தியிலே தரங்கவல்லியின் உள்ளம் மட்டும் சலனமின்றி நிம்மதியாக இருக்கிறது என்று! என்னைப் பற்றியே நான் பெருமைப்பட்டுக் கொள்கிறேன் என்று எண்ணாதே! நீயும் பேரியாழும்தான் என்னுடைய இதயத்தின் நிம்மதிக்குக் காரணம்!''

இப்படிச் சொல்லியவண்ணம் தளத்திலிருந்து எழுந்து தனது இரண்டு கைகளாலும் யாழ் நங்கையைப் பேரன்போடு அணைத்துக் கொண்டார் தரங்கவல்லியான துறவியம்மையார்.

யாழ் நங்கையின் உள்ளத்தில் உணர்ச்சிகள் அலைகளாகப் பொங்கின. ஆசாபாசங்களைத் துறந்து நிற்கும் ஒரு துறவியின் உள்ளத்திலே பரிசுத்தமான பேரன்பு எப்படி ஏற்படுகிறது. அந்தப் பேரன்பு எப்படி அரவணைக்கிறது என்பதை மெய்யோடு மெய்யாக உணர்ந்து கொண்ட யாழ் நங்கை ஆனந்தக் கண்ணீர் வடித்தாள்.

நிலவின் பூரண ஒளியில் மரக்கலம் வேகமாகச் சென்று கொண்டிருந்தது. துறவியும் யாழ் நங்கையும் அன்பின் ஒருமைப்பாட்டிலே இதயம் கரைந்து நின்ற அந்த வேளையில், அவர்களுடைய மரக்கலத்துக்குப் பின்னால் காவலாக வந்து கொண்டிருந்த படை வீரர்களின் மரக்கல அணியிலிருந்து திடீரென்று சங்கொலி கேட்டது. அதைத் தொடர்ந்தாற்போல் படைக்கலக் கொம்புகள் ஒலித்தன!

(தொடரும்)

# நீரிழிவு

## குணமாகும்

சிறு நீரில் சர்க்கரை காண்பது நீரிழிவு (DIABETES) நோயின் முக்கிய அறிகுறி. உங்களுக்குப் பசியும் தாகமும் அதிகமாயிருந்தாலும், உடல் உருகிக் கொண்டு வந்தாலும் அடிக்கடி நீர் இறங்கினாலும் உங்களுக்கு நீரிழிவு நோய் இருக்கிறது என்பதில் சந்தேகமில்லை. இக் கொடிய உடல் உருக்கி நோய், தான் பற்றினவர்களைக் கடைசி மூச்சு உள்ள வரையில் விடுவதில்லை; கொஞ்சம் கொஞ்சமாக அவர்களை மரண வாயிலுக்கு இழுத்துச் செல்லும். நீரிழிவு வியாதியைக் குணப்படுத்த இஞ்செக்ஷன்கள் போடப்படுகின்றன; ஆனால் அவற்றினால் வியாதி கொஞ்சமும் குணமாவதில்லை. இஞ்செக்ஷன்கள் நீரில்சர்க்கரையைக் குறைக்கின்றன—அதுவும் மருந்துச் சக்தி உள்ள வரையில்தான். ஆகவே, உபாதைகளைத் தடுக்க வாழ்நாள் முழுவதும் ஊசிகள் போட வேண்டியதுதான். இதனால் அதிகச் செலவு ஏற்படுவதோடு கஷ்டமும் உண்டாகிறது. நோய் குணப்படுத்தாது போனால் நீங்கள் புண்களினாலும், கண் நோய், பல் நோய், வயிற்றுக் கோளாறு முதலிய பலவித வேதனைகளால் சிரமப்பட நேருகிறது.

நீரிழிவு வியாதியை, வீனஸ் சார்ம் மாத்திரைகளை உபயோகித்து, சிக்கனமாகவும், சுலபமாகவும், நிச்சயமாகவும், பத்திரமாகவும் சிகிச்சை பெறுங்கள்.

பண்டைக்கால யுனானி வைத்திய முறைகளைக் கொண்டு, அரிய மூலிகைகளின் சேர்க்கையுடன் தயார் செய்யப்படும் வீனஸ் சார்ம் மாத்திரைகள், நோயை அடியோடு அகற்றுவதுடன், எத்தனையோ பேர்களை இன்செக்ஷன் அல்லது ஒருவிதமான பட்டினி இல்லாமல் குணமாக்கியிருக்கிறது. இதை உபயோகித்துப் பல ஆயிரக் கணக்கானவர்கள், இந்நோயின் மரணப் பிடியிலிருந்து தப்பி யிருக்கிறார்கள். இம் மருந்தை உபயோகிக்கத் தொடங்கிய இரண்டு மூன்று நாட்களுக்கெல்லாம், நீரில் சர்க்கரை குறைகிறது; அத்துடன் அதிக நீர் இறங்குவதும் நிற்கிறது. சில நாட்கள் உபயோகித்தாலே நோய் தணிந்து திருப்தி ஏற்படுகிறது. வீட்டிலிருந்தபடி வீனஸ் சார்ம் சிகிச்சையைத் துவங்குங்கள். விசேஷ பத்தியம் எதுவும் இல்லை. நீங்களே அதன் குணத்தை அறிவீர்கள். இதுபற்றிய விரிவான இலவச ஆங்கிலப் பிரசுரத்தை வரவழைத்துப் பாருங்கள்.

**50 மாத்திரைகள் கொண்ட புட்டி ஒன்றின் விலை 6-12-0**

*(பாக்கிங் தபால் செலவு இனாம்)*

**வீனஸ் ரிஸர்ச் லாபரேட்டரி (K. M.)**

**தபால் பெட்டி நெ. 587. கலகத்தா**

# சுலேகா

## பவுண்டன் பேனா மை

இப்பொழுது 8 வித கலர்களில் கிடைக்கும்

ராயல்-புளூ, புளூ-பிளாக், கறுப்பு சிவப்பு, நல்ல சிவப்பு, வயலட் பழுப்பு மற்றும் பச்சை




Contains SOLVENT "S.50"

**சுலேகா ஒர்க்ஸ் லிட்.**

**கல்கத்தா - டெல்லி - பம்பாய் - சென்னை**




அபரிதமான
புஷ்பங்கள்!
பிராஞ்சுக் கூட்டுடன்
உங்களுக்காக ஸ்பெஷ
லாகத் தயாரிக்கப்பட்ட
சம்மிய மணத்துடன்
கூடிய டால்கம் பவுடர்.
லக்மி
டால்கம்
பவுடர்
மூன்றுவித வாசனைகளில்
டாடா ஸ்தாபனம்
லக்மி பிரைவேட் லிமிடெட்., பாம்பே ஹவுஸ், போர்ட், பம்பாய்-1
LKM. 31.TAM.

# பணமா பாசமா?

சரஸன்



வீரராகவனுக்கு ஒன்றுமே புரியவில்லை. தன் தமையன்மார்களுக்குக் கடிதம் எழுதுவதா, வேண்டாமா என்று தோன்றாமல் தவித்தது அவன் மனம். பாட்டியின் நிலைமை கடந்த இரண்டு மாதங்களாகவே மோசமாகத்தான் இருக்கிறது. விஷயம் எப்படி ஆகுமோ என்று தன் தமையன்மார்கள் இருவருக்கும் எழுதிவிட்டான். பம்பாயில் உள்ள தமையன் பசுபதி தனக்கு லீவு கிடைக்கவில்லையென்று எழுதிவிட்டான். மதுரையிலிருக்கும் தமையன் சுந்தரம் மனைவியின் பிரசவகாலம் என்ற காரணம் காட்டிக் கடிதம் எழுதியிருந்தான்.

நினைத்துப் பார்த்த வீரராகவனுக்குச் சிரிப்புத்தான் வந்தது. 'ஆ! இத்தனை நன்றி கெட்ட பிரகிருதிகளும் உலகத்திலே வாழ்கிறார்களா?' என்ற வியப்புக்கு மத்தியில் ஆத்திரமும் உண்டாகாமலில்லை. பாட்டி திக்கற்ற அந்த மூவருக்கும் அவன் பாட்டியாக மட்டுமா இருந்தாள்? வீரராகவனின் பெற்றோர் முன்கூட்டியே பேசிக்கொண்டது போல, அடுத்தடுத்து மாண்டு போனார்கள். அப்போது சுந்தரம், பசுபதி, வீரராகவன் மூவருக்கும் வயது முறையே எட்டு, ஐந்து, இரண்டுதான்.

நாதியற்ற இந்த மூன்று குழந்தைகளுக்கும் ஆதரவாக இருந்து காப்பாற்றி வந்தவள் அவர்களுடைய தாயைப் பெற்ற சிவகாமி அம்மாள்தான். பால்யத்திலேயே ஒரே பெண்ணைப் பெற்றுவிட்டு, வைதவ்யக் கோலம் பூண்ட சிவகாமி அம்மாளுக்கு அவளுடைய கணவரால் விடப்பட்டுச் சென்ற சொத்து ஏராளமாயிருந்தது.

தன் ஒரே பெண் காலமான பின், அந்தத் துயரத்தைப் போக்கிக் கொள்வதற்கு அவள் பெண்ணெடுத்த இந்த மூன்று குழந்தைகளும் ஓரளவு உதவி செய்தன. குழந்தைகளைக் கண்ணும் கருத்துமாக இருந்து காத்து வளர்த்தாள் சிவகாமியம்மாள்.



எல்லாக் குழந்தைகளையும் பள்ளிப் படிப்புக்கு அனுப்பினாள். அது முடிந்ததும், கல்லூரியிலும் சேர்த்தாள். பேரப் பிள்ளைகளும் நன்றாகவே படித்துப் பரீட்சையில் தேறினார்கள்.

மூத்தவன் சுந்தரத்துக்கு ஒரு நல்ல பெண்ணைப் பார்த்துக் கல்யாணமும் செய்து வைத்தாள் பாட்டி. மருமகள் கல்யாணி குடித்தனம் செய்ய வந்தாள். அவளுக்கும் சிவகாமியம்மாளுக்கும் ஒத்துக்கொள்ளவில்லை. பாட்டியைப் பற்றி ஏதாவது தன் கணவனிடம் புகார் சொல்லிக் கொண்டே இருந்தாள் கல்யாணி. அவளுடைய போக்கை உணர்ந்துகொண்ட சிவகாமியம்மாள் ஒரு நாள், ''சுந்தரம்! உங்களுக்கு இங்கிருக்க விருப்பமில்லாவிட்டால், தனிக்குடித்தனம் போவதில் எனக்கு வருத்தமில்லை'' என்றாள். தன் மனைவியின் மோகவலை வீசலில் சிக்குண்ட சுந்தரத்துக்கு, பிரிந்துபோகத்தான் தோன்றியது. சில மாதங்களுக்கெல்லாம் மதுரைக்கு மாற்றலாகி விடவே சுந்தரம் மதுரைக்கே போய் விட்டான்.

அடுத்த வருஷம் இரண்டாவது பேரன் பசுபதிக்கு விவாகம் நடந்தது. பசுபதியும் தன் தமையனின் அடிச்சுவட்டைப் பின்பற்றினான் என்ற பழிக்கு ஆளாகாமல் அதுவரை வேலையில்லாமல் இருந்தவனுக்கு, பம்பாயில் ஒரு வேலைக்கு ஏற்பாடு செய்துவிட்டார் அவனுடைய மாமனார். எனவே கல்யாணமானதும் மனைவியுடன் பம்பாய்க்குப் புறப்பட்டுச் சென்றுவிட்டான் பசுபதி. பசுபதியின் மனைவி கல்பகமும், கல்யாணிக்

கல்கி நவம்பர் மாதச் சிறுகதைப் போட்டியில் நூறு ரூபாய் பரிசு பெற்ற கதை

குக் குறைந்தவள் இல்லை என்பதைக் கல்யாணத்தின் போதே சிவகாமியம்மாள் கண்டாள்.

பாட்டியின் மனம் எப்படித்தான் வேதனைப்பட்டது! ''இந்தக் குழந்தைகளை விவரமறியாப் பருவத்திலிருந்து எடுத்து, வளர்த்து, ஆளாக்கினோம். அன்பைச் சொரிந்தோம். ஆனால் கண்ட பலன் என்ன? நன்றியற்ற செய்கையுடன் நம்மிடம் கொஞ்சமாவது அன்பும் வாத்சல்யமும் இருந்ததா? 'பாட்டி இல்லாதிருந்தால் நம் நிலை என்ன ஆகியிருக்கும்?' என்ற எண்ணம் சுந்தரத்துக்கோ அல்லது பசுபதிக்கோ இருந்ததா? ஹூம்! வீரராகவன் எப்படி நடந்து கொள்ளப் போகிறானோ? தன் தமையன்மார்களுடைய காற்று இவன் மீதும் அடித்தால் அதில் ஆச்சரியப்பட ஒன்றுமில்லை. எல்லாம் ஒரே மண்ணில் செய்த பாண்டம்தானே!'' என்று தாபப்பட்டாள்.

தன் பாட்டியின் உள்ளக் கிடக்கையை உணர்ந்து கொண்ட வீரராகவன் சொன்னான்: ''பாட்டி! என் தமையன்மார்களைப் போன்ற நன்றி கெட்டவனாக என்னை மதிக்கிறாயா? இன்று சொல்கிறேன். அவர்கள் உன் மீது சொரிய வேண்டிய அன்பையும் நன்றியுணர்ச்சியையும் சேர்த்து நான் காட்டி நடந்து கொள்கிறேன். எனக்குக் கல்யாணம் ஆனால், என் மனைவியின் மூலம் என் மனம் மாறிவிடக் கூடும் என்று நீ எண்ணும் பட்சத்தில், நான் பிரம்மச்சாரியாகவே இருக்கவும் தயார். என் தமையன்மார்களிடம் ஏற்பட்ட தாபத்தை மறந்துவிடு.''

சிவகாமியம்மாளுக்கு உள்ளம் குளிர்ந்து விட்டது. தாபம் தணிந்தது. ''கண்ணே! உனக்காவது ஆண்டவன் இந்தப் புத்தியைக் கொடுத்தானே! உன்னுடைய இந்தக் குணம் மாறாமலிருக்க வேண்டும். உங்களை நான் ஆளாக்கினேன். அதற்குப் பிரதிப் பிரயோஜனத்தை எதிர்பார்க்கவில்லை. உங்களுடைய நன்றியுணர்ச்சியுடன் கூடிய அன்பைத்தான் நான் எதிர்பார்க்கிறேன். இதை எதிர்பார்க்க எனக்கு உரிமையில்லையா? அந்த உரிமையை நீயாவது காப்பாற்று!'' என்று கண்ணீரைச் சொரிந்தபடியே கூறினாள்.

வீரராகவனுக்குக் கல்யாணம் நடந்தது. அவன் மனைவி மங்களத்துக்குப் புக்ககம் வந்த சில தினங்களிலேயே பாட்டியைப் பிடித்துவிட்டது. சிவகாமியம்மாளுக்குப் பெருமை தாளவில்லை. ''குழந்தை! நீயாவது என்னிடம் பிரியமாக இருக்கிறாயே! என் துயரைத் தீர்க்க அது ஒன்றே போதும்!'' என்று தன் கடைசிப் பேரனை வீரராகவனின் மனைவியைப் பார்த்து மன நெகிழ்வுடன் கூறினாள்.



வீரராகவன் தன் பாட்டியைக் கேளாமல் ஒன்றும் செய்ய மாட்டான். மங்களமும்; அப்படித்தான். தன் மற்ற இரு பேரன்மார்களின் போக்கினால் ஏற்பட்ட தாபத்தை வீரராகவனின் பொன்னான குண விசேஷத்தால் மறந்தாள் சிவகாமியம்மாள். அதுமட்டும் அல்ல; அவர்களது மனைவிமார்களின்மீது ஏற்பட்ட தாபமும் மங்களத்தின் மூலம் குறைந்தது.

வீரராகவனின் கல்யாணத்துக்காக இரு தமையன்மார்களும் வந்திருந்தார்கள். அப்போது அவர்கள் பட்ட குறையும், கோபமும் அளவிட முடியாது. வயதில் மூத்தவர்களான தங்களுக்கு ஒரு கௌரவமும் அளிக்காமல், வீரராகவன் எடுத்ததற்கெல்லாம் பாட்டியின் யோசனையைக் கேட்டு நடந்து கொண்டது அவர்கள் தன்மானத்தைப் போக்குவது போலிருந்தது.

''வீரராகவா! இதற்காகவா எங்களை வரவழைத்தாய்? இதைவிட எங்களுக்குத் தெரியப் படுத்தாமலேயே உன் கல்யாணத்தை முடித்துக் கொண்டிருக்கலாமே! எங்களுக்கு நல்ல மரியாதையும் கௌரவமும் வாங்கித் தந்து விட்டாய்!'' என்றார்கள் அவர்கள் ஆத்திரத்துடன். அதற்குப் பின்பு அவர்கள் இருவரும் தன் பாட்டியையும் தம்பியையும் ஏன் என்று கூடக் கேட்கவில்லை.

பாட்டிக்கு என்னதான் தாபம் இருந்த போதிலும், ரத்தபாசம் காரணமாக, அவ்வப்போது சுந்தரத்

துக்கும், பசுபதிக்கும் கடிதங்கள் எழுதினாள், க்ஷேமலாபங்களைக் கோரி. ஒன்றுக்காவது அவர்களிடமிருந்து பதில் வர வேண்டுமே! அது தான் கிடையாது.

ஒருசமயம் மதுரையில் உள்ள சுந்தரத்தின் குழந்தைக்குத் திடீரென்று கடுமையான ஜுரம் கண்டு தவிப்பதாக யார் மூலமோ செய்தி வரவே, சிவகாமியம்மாள் துடியாய்த் துடித்து விட்டாள். உடனே வீரராகவனை அழைத்துக் கொண்டு ஓடினாள்.

அந்தச் சமயம் பம்பாயிலிருந்து பசுபதியும் அங்கு வந்திருந்தான். பசுபதியைக் கண்ட சிவகாமியம்மாள், ''ஏண்டாப்பா! பம்பாயிலிருந்து மதுரை வந்தவனுக்கு, வழியில் பட்டணத்தில் நாங்கள் இருப்பது மறந்து போச்சா?'' என்று கேட்டாள்.

''மறந்து போக வேண்டியதுதானே! யார் யாருக்கு யார் யாரிடம் பற்று இருக்கிறதோ, அங்குதானே வருவார்கள்!'' என்றான் சுந்தரம் பசுபதிக்காகப் பரிந்துகொண்டு.



ஆத்திரம் தாளவில்லை சிவகாமியம்மாளுக்கு. ஆனால் வாய்விட்டு ஒன்றும் பேசாமல் மௌனமாயிருந்து விட்டாள்.

வீரராகவனுக்கு அங்கு இருப்பே கொள்ளவில்லை. எனினும், தன் பாட்டியின் பொருட்டு, குழந்தைக்கு உடம்பு குணமாகும் வரையில் தங்கியிருந்தான் பிறகு இருவரும் புறப்பட்டு ஊர்வந்து சேர்ந்தனர்.

திடீரென்று சிவகாமியம்மாள் ஒரு நாள் கிணற்றடியில் வழுக்கி விழுந்து விட்டாள். வீரராகவன் அரண்டு விட்டான். பாட்டிக்குத் தானே அருகில் இருந்து கொண்டு பணிவிடைகள் செய்தான். விழுந்த அதிர்ச்சியின் காரணமாக, பாட்டிக்கு ஜுரமும் வந்து விட்டது. டாக்டர் பேசிய தோரணை அவனுக்கு நம்பிக்கையை அளிக்கவில்லை; பயத்தையே ஊட்டியது. தன் உயிருக்குயிராய் மதித்து வந்தபாட்டியின் உயிருக்கு ஆபத்து ஏற்படாமலிருக்க வேண்டுமே என்று வேண்டிக் கொண்டான். மங்களமும் துடித்து விட்டாள்.

சுய நினைவு வந்த சமயம் பாட்டி, பேரனை அழைத்து, ''வீரராகவா! உன் அண்ணன் இருவருக்கும் தெரிவித்துவிடு. இன்னும் ஒரு நாளோ அல்லது இரண்டு நாளோ அதற்கு மேல் நான் இருக்கமாட்டேன்'' என்றாள்.

''பாட்டி! என் பழியை நான் கழித்து விட்டேன். எனக்கு விருப்பமில்லை. எனினும் ஊருக்குப் பயந்து முன்பே எழுதினேன். ஆனால் இருவருக்கும் இப்போது வர முடியவில்லையாம்'' என்றான் வீரராகவன்.

அன்று டாக்டர் வந்து பார்த்தபோது, பாட்டியின் நிலைமை மிகவும் மோசமாகி விட்டது. அவள் நினைவு இழந்து விட்டாள்.

''ஸார்! இனி நம்புவதில் புண்ணியமில்லை. யாருக்காவது தந்தி கொடுக்க வேண்டுமானால் கொடுத்து வரவழைக்கலாம். அதிகமாக இன்னும் பன்னிரண்டு மணி நேரம் தான் தாங்கும்'' என்று டாக்டர் கூறி விட்டுப் போய் விட்டார்.

மங்களமும் வீரராகவனும் 'ஓ'வென்று கதறி விட்டார்கள். தந்திகள் பம்பாய்க்கும் மதுரைக்கும் பறந்தன. ''பாட்டியின் நிலைமை மோசம். உடனே புறப்பட்டு வரவும் —வீரராகவன்.''

பம்பாயிலிருந்து விமான மூலம் வந்து சேர்ந்தான் பசுபதி. மதுரையிலிருந்து சுந்தரமும் வந்து விட்டான். வந்ததும் வராததுமாக, இருவரும் நேராக, பாட்டியிடம் பறந்தடித்துக் கொண்டு ஓடினார்கள்.

''பாட்டி! இதோ வந்துவிட்டேன், நான் தான் பசுபதி!'' என்றான் பசுபதி.

''பாட்டி! இதோ பார்! நானும் வந்து விட்டேன்'' என்றான் சுந்தரம்.

கண் விழித்துப் பார்த்தாள் சிவகாமியம்மாள். நினைவு கொஞ்சம் திரும்பியது போலிருந்தது. ''குழந்தைகளா! இப்போதாவது வந்தீர்களே! சந்தோஷம்!'' என்றாள் ஈனமான குரலில்.

''பாட்டி! ஒரு விஷயம். உன் சொத்து விஷயமாய் உயில் எழுதியாகிவிட்டதா? எங்கள் மூவருக்கும் சமமாகத் தானே எழுதியிருக்கிறாய்?'' என்றான் சுந்தரம் பரபரப்புடன்.

தமையன்மார்கள் இருவரையும் அருவருப்புடன் நோக்கினான் வீரராகவன். அவர்களுடைய மனோபாவத்தைக் காண அவனுக்கு ரத்தம் கொதித்தது.

பாட்டி நிதானமாய்ப் பதில் அளித்தாள். ''குழந்தைகளே! நான் நினைத்தது உண்மையாய்ப் போயிற்று. என் உடல் நிலைமை மோசமாகிவிட்டது என்ற செய்தியறிந்தால் நீங்கள் கட்டாயம் வருவீர்கள் என்று எண்ணினேன். ஏன்? என் சொத்து விஷயமாக விவரம் அறியத்தான். அப்படியே நடந்து விட்டது. என்மீது உங்கள் இருவருக்கும் பாசமோ பிரியமோ காணோம். என் சொத்தின் மீதுதான் கண். இதோ உங்களுடன் கூடப் பிறந்த உங்கள் தம்பியைப் பாருங்கள். என் சொத்து விஷயமாக இன்றுவரை ஒரு வார்த்தைகூட என்னைக் கேட்டதில்லை இவன். நான் கண்ணை மூடிவிடப் போகிறேனே என்று கதறுகிறான். அவனும் சரி, அவன் மனைவி மங்களமும் சரி, எனக்காக எவ்வளவு பாடுபட்டிருக்கிறார்கள், தெரியுமா? என்மீது எத்தனை அன்பு வைத்திருக்கிறார்கள் என்பதை நீங்கள் அறிந்து கொண்டிருப்பீர்கள். என்

WINGS THAT SERVE INDIA

நாள்தோறும் நடுப் பகலில்

## 50 ஐ. ஏ. ஸி. விமானங்கள் பறக்கின்றன!

அவை இந்திய வானில் பறந்து செல்கின்றன. வர்த்தகர்களையும், யாத்திரிகர்களையும், குடும்பங்களையும் இன்னும் பல பண்டங்களையும் எடுத்துச் செல்லுகின்றன. ஓர் இடத்திலிருந்து மற்றோரிடத்துக்கு மிக துரிதமாகவும், மிக சுகமாகவும் பிரயாணம் செய்ய உதவுகின்றன. நாளுக்கு நாள் இந்திய மக்கள் ஒருவருக்கொருவர் மிகவும் நெருங்கிப் பழக அவை அதிக வசதியை அளிக்கின்றன.

இந்தியன் ஏர்லைன்ஸ் கார்ப்பொரேஷன் விமானங்கள் தினந்தோறும் 132 இடங்களுக்குப் பறந்து செல்லுகின்றன. வருஷந்தோறும் 2 கோடி மைல்கள் பிரயாணம் செய்கின்றன. அவசரமாகவும் விரிவான தூரத்துக்கும் சென்று வரவேண்டிய அவசியம் இந்தியாவில் நாளுக்கு நாள் அதிகமாகி வருவதால் அதைச் சமாளிக்க ஒவ்வொரு ஆண்டிலும் மேற்கொண்டு அதிக விமானங்களை உபயோகிக்கின்றனர்.



# இந்தியன் ஏர்லைன்ஸ்

கார்ப்பொரேஷன்

5 & 6, மவுண்ட் ரோடு, சென்னை - போன்: 86433 (4 லைன்கள்)



# கெமிகல் டெஸ்டிங் அண்டு அனலிடிகல் லேபரடரி

(இரசாயன பரிசோதனை நிலையம்)

(சென்னை அரசாங்க, கைத்தொழில் & வர்த்தக இலாகா)

**கவர்ன்மெண்டு டெக்ஸ்டைல் இன்ஸ்டிடியூட் கட்டிடம் வண்ணாரப்பேட்டை, சென்னை**

டெலிபோன் நெ. 3062, எக்ஸ்டென்ஷன்

இந் நிலையத்தில் உலோகங்கள், தாதுப் பொருள்கள், மற்றும் இரசாயனப் பொருள்கள் முதலியவைகளைப் பரிசோதனை செய்து அரசாங்க இலாகாக்களுக்கும் மற்றவர்களுக்கும் பத்திரங்களும் அபிப்பிராயங்களும் வழங்கப்படுகின்றன.

மேற்கூறிய பொருள்களை, அவைகள் கிடைக்கும் இடங்களிலும், துறைமுகங்களிலும், மற்றும் எவ்விடங்களிலும் சாம்பிள் செய்து அதற்குகந்த பத்திரங்களும் வழங்கப்படுகின்றன.

விவரங்களுக்கு:

**லேபாரடரி சீப் கெமிஸ்டு**

அவர்களுக்கு எழுதவும்




**GUJARAT INDUSTRIES**

LALJI MANSING

LOHAR CHAWL BOMBAY-2.

"விலை ரூ. 2-8-0 முதல் ரூ. 15 வரையுள்ள பல ரக சாம்பியன் பேனாக்களைக் காண்பிக்குமாறு உங்களது பேனா டீலர்களைக் கேளுங்கள்."



சேதுநாராயணபுரத்தில் நவம்பர் ஆறும் தேதி அகில இந்தியக் கூட்டுறவு வார விழா வெகு விமரிசையாக நடந்தேறியது. இவ் வைபவத்தில் கூட்டுறவுச் சங்கத் தலைவர் திரு கோவிந்தக் கோனாரும், பஞ்சாயத்துச் சபை அங்கத்தினர்களும், கிராம நல ஊழியரும், கூட்டுறவு அதிகாரியும், கிராம மக்களும் கலந்து கொண்டு சிறப்பித்தனர்.

---

மீது உங்களுக்குப் பாசம் வேண்டாம். உங்களை ஆளாக்கிவிட்டதற்காக நன்றியுணர்ச்சியாவது காட்டலாம் அல்லவா? போனது போகட்டும்! டாக்டர் ஏதோ அவருக்குத் தோன்றியதைச் சொல்லிவிட்டுப் போனார். ஆனால் இந்தத் தடவை நான் பிழைத்துக் கொண்டு விடுவேன் என்று நினைக்கிறேன். பிறகு என் சொத்தை எப்படிப் பாகம் செய்வது என்பதைப்பற்றி வீரராகவன் கவனித்துக் கொள்வான். அந்த அதிகாரத்தை அவனுக்கு அளித்து விட்டேன்'' என்றாள் பாட்டி.

சுந்தரமும் பசுபதியும் ஏமாற்றமடைந்த உள்ளங்களுடன் உடனே திரும்பிவிட்டார்கள். ''இதை நாம் ஒப்புக்கொள்ளக் கூடாது. பாட்டியின் சொத்து நம் எல்லாருக்கும் சமமாய்க் கிடைக்கும்படி செய்ய வேண்டும். நான் ஒரு வக்கீலைக் கலந்து எழுதுகிறேன் உனக்கு'' என்றான் பசுபதி சுந்தரத்தினிடம்.

பம்பாய் சென்ற பசுபதி ஒரு வக்கீலைக் கலந்து தன் தம்பி வீரராகவனுக்கு ஒரு நோட்டீஸ் தயார் செய்து, மதுரையில் உள்ள தன் தமையன் சுந்தரத்தின் பார்வைக்கு அனுப்பினான். நோட்டீஸில் கண்ட கடுமையான வாசகத்தைப் பார்த்துச் சுந்தரம் மகிழ்ந்தான். அந்த நோட்டீஸைக் கண்ட மறுகணமே வீரராகவன் அரண்டு மிரண்டு வழிக்கு வந்து விடுவான் என்று நம்பினார்கள் இருவரும். பாட்டியும் ஒன்றும் செய்ய முடியாது என்று அவர்கள் எதிர்பார்த்தார்கள். நோட்டீஸை அங்கீகரித்துப் பசுபதிக்குத் திருப்பியனுப்பினான்.

மறுதினம் சுந்தரத்துக்கு ஒரு கடிதம் வந்தது, வீரராகவனிடமிருந்து.

'' அண்ணாவுக்கு,

பாட்டியின் உடல் நிலை இப்போது பூரண குணம். தன் சொத்து விஷயமாய் அவள் ஏற்கனவே செய்ததை மாற்றிக் கொண்டு விட்டாள். தன் சொத்தை நாம் மூவரும் சமமாக அடையும்படி உயில் எழுதிவிட்டாள். எனக்கு அதில் சற்றுத் தாபம் இருந்தது உண்மைதான். ஆனால் பாட்டி கூறிய சமாதானம் ஒப்புக்கொள்ளத் தக்கதாக இருக்கவே நான் என் தாபத்தைப் போக்கிக் கொண்டேன். அவள் தன் பழைய தீர்மானத்தை மாற்றிக் கொண்டபோது என்ன சொன்னாள், தெரியுமா? 'வீரராகவா! என் சொத்தை எப்படிப் பிரிக்க வேண்டும் என்ற அதிகாரத்தை உனக்கு அளிப்பதில் எனக்குப் பரம சந்தோஷமே. ஆனால் உலகம் என்ன சொல்லும், தெரியுமா? கடைசிப் பேரன் பாட்டியை வஞ்சித்துத் தன் தமையன்மார்களுடைய பங்கையும் தனக்கே கிடைக்குமாறு சூழ்ச்சி செய்து பெற்றுக் கொண்டான்' என்று கூறும். எனக்கு இத்தனை காலம் உழைத்து அன்பைச் சொரிந்த நீ இம்மாதிரி உலக அபவாதத்தைப் பெறுவதை நான் விரும்ப மாட்டேன். இந்த மாறுதலில் உனக்கு மனத்தாங்கல் இருந்தாலும் அதை மாற்றிக் கொண்டு விடவேண்டும். என் சொத்துக்காக நீ என்னிடம் அன்பைச் சொரியவில்லை என்பதை நான் அறிவேன். ஆகையால், இந்தச் சொத்தில் உன் தமையன் இருவருக்கும் சம பங்கு கிடைக்கட்டும். அவர்கள் என்மீது அன்பு காட்டாவிட்டால் என்ன? நான் அவர்களிடம் அன்புகொண்டு நடந்து கொண்டேன் என்ற பெயர் எனக்குக் கிடைத்தால் போதுமானது. என் செய்கையின் மூலமாவது அவர்களுடைய மனம் மாறித் தங்கள் செயலுக்காக வருந்தலாம் அல்லவா?' என்று கூறினாள் பாட்டி. இந்தத் தகவலைப் பம்பாயில் உள்ள சின்ன அண்ணாவுக்கும் தெரிவித்திருக்கிறேன். சௌகர்யப் பட்ட போது வரவும்—வீரராகவன்.''

கடிதத்தைப் படித்த சுந்தரம் கண்ணீர் விட்டான். பாட்டியின் மனமாற்றம் அவன் உள்ளத்தை வாள் கொண்டு அறுத்தது. தன் செயலுக்காக வருந்தாமல் என்ன செய்வான்?

அவன் மட்டுமா? பம்பாயில் உள்ள பசுபதியும் அதேபோல் மனம் மாறினான். இருவரும் ஏககாலத்தில் புறப்பட்டுச் சென்னை வந்து சேர்ந்தார்கள்.

''பாட்டி! நாங்கள் இருவரும் பாவிகள். உன்னிடம் ரொம்பவும் மனம் புண்படும்படி நடந்து கொண்டு விட்டோம். சொத்தில் சமபங்கு பெறுவதற்கு நாங்கள் அருகதை யற்றவர்கள். முழுவதும் வீரராகவன் தான் அடைய வேண்டும்'' என்று பாட்டியின் காலைப் பற்றிக்கொண்டு கதறினார்கள்.

பாட்டியின் உள்ளம் குளிர்ந்தது. தன் முடிவு தன் இரண்டு பேரப் பிள்ளைகளின் மனமாற்றத்துக்குக் காரணமாயிருந்ததில் பரம மகிழ்ச்சி யடைந்தாள்.



# முள்!

கார்த்திகை பாலன்

அலுவலகத்துக்குப் புறப்பட என்னைத் தயார்ப்படுத்திக் கொண்டிருந்தேன். அம்பிப்பயலைக் கூப்பிட்டு, ''மணி என்னவென்று பார்த்து வா'' என்றேன். ''மணி பார்க்கத் தெரியாது'' என்றான் அவன்.

''சரி, சின்ன முள் எதிலே இருக்கிறது, பெரிய முள் எதிலே இருக்கிறது என்று பார்த்து வா'' என்று ஆலோசனை சொல்லி அனுப்பினேன். அவன் திரும்பி வந்து,'' சின்ன முள்ளும் பெரிய முள்ளும் கடிகாரத்துக்குள்ளே தான் இருக்கிறது!'' என்ற பெரிய ரகசியத்தை என்னிடம் சொன்னான்.

இந்தக் கடிகார முள் என் சிந்தனையில் சுற்றியது. நல்லவேளை, அது என் மூளையைக் குத்தவில்லை. ஆனால், அலுவலகத்துக்குப் புறப்பட்ட என்னைத் தடுத்து நிறுத்தியது ஒரு பொருள். பாதத்தில் ரத்தம் கசிந்தது. குனிந்து பார்த்தேன். அது ஒரு முள்! அந்த முள்ளை மற்றொரு முள்ளினால் எடுத்துப் போட்டு விட்டு மேலே நடந்தேன். முள்ளை முள்ளினால்தான் எடுக்கவேண்டுமென்ற 'சாணக்கிய தந்திரம்' எல்லோருக்குமே சிக்கிரம் பிடிபடாது.

முள் மூர்த்தியில் சிறிசுதான். ஆனால் அதன் கீர்த்தி மிக மிகப் பெரிது. அது மட்டுமல்ல. அன்றாட வாழ்க்கையில் தான் இந்த முள் எத்தகைய முக்கியத்துவம் பெற்றிருக்கிறது? 'வாழ்க்கை ராஜ பாட்டையல்ல; அது முள் நிறைந்த பாதை' என்கிறார்கள் சிலர். 'வாழ்க்கை முட் பாதை என்றாலும் கூட, அதையே ராஜ பாட்டையாக ஆக்கிக் கொள்ள முயல வேண்டும்' என்று உபதேசிக்கிறார்கள் வேறு சிலர்.

நம் சமூகம் முள் வேலியாக அமைந்து விட்டது என்று எழுத்தாளர்கள் வர்ணிக்கிறார்கள். இவர்கள் உபயோகிப்பது வேறு முள்! காதலன் பிரிவால் அல்லற்படும் காதலிகளுக்குப் படுக்கை முள்ளாகக் குத்தும்! இதுவும் வேறு மன்னர்கள் அளக்கும் கதை தான்!

'தூண்டிற் புழுவினைப் போல்..' என்ற பாட்டை நீங்கள் மறந்திருக்க மாட்டீர்கள். இங்கே தூண்டில் என்பது, தூண்டில் முள்ளையேதான் குறிக்கும்.

நம் வாழ்க்கையில் மட்டுமல்லாது, புராண காலத்திலும்கூட இந்த முட்கள் மிகுந்த பெருமை பெற்றிருக்கின்றன.

அஞ்சன வண்ணனை ஸ்ரீ ராமபிரான் கானகம் செல்ல ஆயத்தமானபோது தானும் உடன் வருவதாகச் சீதாதேவி கூறுகிறாள். அது கண்டு தசரதராஜ குமாரன் மனைவியை நோக்கி, ''நான் செல்லும் இடம் கல்லும் முள்ளும் மண்டிய ஆரண்யம்!'' என்கிறான். அதுகேட்ட ஜனககுமாரி, ''நீங்கள் செல்லும் இடம் எதுவானாலும் அதுவே எனக்கு சொர்க்கம்; அது தான் எனக்கு அயோத்தி!'' என்கிறாள். கடைசியில், மனையாட்டியையும் அழைத்து ஏகுகிறான் தெய்வ மனிதன்.

இலக்கியத்திலே காதற் சுவையிலும் 'முள்' அங்கம் வகிக்கிறது. சகுந்தலைக்குக் காலில் முள் தைத்து விடுகிறது: அப்பொழுது எதிர்ப்படுகிறான் துஷ்யந்தன். ''முள் எடுக்கும் பாவனையில் முறுவல் நகை பூக்கின்றாள் சகுந்தலை!'' முள் இல்லையேல், இங்கே காதல் பிறந்திருக்க முடியாது.

ஊசி முனையில் உமையவள் தவம் செய்ததாகச் சொல்வதுண்டு. முள் முனையில் அப்படித் தவம் செய்ய ஏனோ முனையவில்லை, பார்வதி தேவி. முள் முனையில் ஒரு பிரகஸ்பதி மூன்று குளம் வெட்டியதாக ஒரு நாடோடிக் கவிதை உண்டு!

முள்ளை ஒதுக்க முள் வாங்கி தாற்காலிகச் சாதனமாக அமையலாம். ஆனால், இந்த முள் வாழ்க்கை என்ற சொல்லடுக்கைச் சுற்றி ஒரு இரும்பு முள் வேலியை அமைத்துக் கொண்டுள்ளது. முள்ளில் வாழ்க்கைத் தத்துவம் ஒடுங்கி விடுகிறது. முள் நிறைந்த ரோஜாவிலிருந்து தானே உள்ளம் கொள்ளை கொள்ளும் நறுமணம் புறப்படுகிறது! அதுதான், கஷ்டங்களுக்குப் பிறகே வாழ்வில் ஆனந்தம் என்பதைக் காட்டுகிறது.



'அவரவர்களின் கனிகளைக் கொண்டே அவரவர்களை அறியலாம். முட்செடிகளிலே திராட்சைகளையும் முட்பூண்டுகளிலே அத்திப் பழங்களையும் பறிக்க முடியாது!'

இயேசுவின் உள்ளம் பேசுகிறது இப்படி. ஆனாலும் இத்தனை பிரக்யாதி பெற்ற முள் நம் காலில் தைக்கும்போது 'முள்ளே, நீ அடியோடு வீழ்க!' என்று சபிக்கத் தோன்றுகிறது.



# கனவா? நினைவா?

வேதியன்

இரவு மணி பத்து இருக்கும். நண்பன் மனோகரைச் சந்தித்து விட்டு வேகமாக வந்து கொண்டிருந்தேன். தூர இருந்தவாறே கடையைக் கவனித்த நான் திடுக்கிட்டேன். விளக்கை அணைத்துவிட்டு, கதவை நன்ருகப் பூட்டி, பூட்டைப் பலமுறை இழுத்துப் பார்த்து விட்டுத்தான் வெளியே போனேன். ஆனால் இப்பொழுது விளக்கு எரிகிறது. கதவு திறந்து கிடக்கிறது. பயம் என் நெஞ்சைப் பிடித்துக் கொண்டது. 'ஒருவேளை யாராவது திருடன் வந்திருப்பானே? சேச்சே! அதெல்லாம் இருக்காது. திருடன் வருவதற்கு வழி எதுவுமில்லையே?' என்று எண்ணினேன். கால்கள் பின்னின. கண்ணை மூடிக்கொண்டு வேகமாக ஓடினேன். அடிமேல் அடிவைத்துக் கடைக்குள் நுழைந்தேன்.

உள்ளே இரும்புப் பெட்டிக்கு அருகில் என் எஜமானர் மாணிக்கம் செட்டியார் உட்கார்ந்திருந்தார்.

"இந்நேரத்துக்கு மேலே கடையைப் பூட்டிகிட்டு எங்கேடா போயிட்டு வர்றே?"

இயற்கையிலே தடித்த அவர் குரல் இன்று அளவுக்கு மீறிய கோபத்தினால் ஆவேசமாக எதிரொலித்து நாராசம்போல் என்னுடைய காதில் பாய்ந்தது.

எதையும் சொல்லிச் சமாளிக்க முடியாத அந்நேரத்தில் என் வாய் குழறியது.

"மனோகரைப் பார்த்துட்டு வர்றேன்."

"ஏண்டா! உனக்குக் கொஞ்சமாவது அறிவிருக்கா? அவனோடு பேசாதே பேசாதேன்னு எத்தனை தடவை சொல்லறது? ராத்திரி பத்து மணிக்கு மேலே அந்தப் பயலோடே சேர்ந்து சுற்றினயானால் பார்க்கிறவன் என்ன நினைப்பான்! எருமை மாடாட்டமா இருந்து கொண்டு நான் சொல்கிறதை உன்னாலே புரிந்துகொள்ள முடியவில்லையே!"

அவருடைய வார்த்தைகள் எனக்குக் கோபத்தை மூட்டின. நண்பனைச் சந்திக்கக் கூடாது, பேசக்கூடாதென்று எனக்குத் தடை போடுவதற்கு இவர் யார்? நான் செய்தது தவருக இருந்தபோதிலும் என் மனம் அதை ஏற்க மறுத்தது.

என்னையே நான் மறந்து விட்டேன். "சிநேகிதனைச் சந்திக்கக் கூடாது, பேசக்கூடாதென்று சொல்கிறதற்கு நீங்க யாரு? இஷ்டமிருந்தால் என்னைக் கடையிலே வைச்சுக்கங்க; இல்லேன்னு இப்பொழுதே என் கணக்கைப் பார்த்து விலக்கி விட்டுடுங்க."

"ஏண்டா! உனக்கு அவ்வளவு நெஞ்சழுத்தமா? காலையிலே உன் மானத்தை வாங்கி விட்டுத்தான் உன்னைக் கடையிலேயிருந்து விலக்குவேன். போ..போய்ப் படு."

ஏதோ மனத்துக்குள் அவர் கறுவிக் கொண்டே கூறினர்.

அதற்குமேல் எதுவுமே பேசவில்லை. எனக்கு அவர்மேல் இருந்த கோபம் தணியவில்லை.

'காலையிலே என் மானத்தை வாங்கிவிடுவாரா...? அப்படியானல்...ஏதாவது என்னைப்பற்றி அவதூருகப் பேசி, என்மேல் அபாண்டமான பழியைச் சுமத்தி என் மானத்தை வாங்கிவிடுவாரோ?'

* * *

படுக்கையில் புரண்டு புரண்டு படுத்தும் எனக்குத் தூக்கம் வரவில்லை. நானும் என் நண்பன் மனோகரும் முதலில் சந்தித்தது, பிறகு நண்பர்களானது, எங்கள் நட்பு வளர்ந்தது, எங்கள் நட்புக்கு என் முதலாளி தடை விதித்தது—எல்லாம் என் மனத்திரையில் மாறி மாறி வந்து மறைந்தன.

அறந்தாங்கி ரயில்வே ஸ்டேஷனுக்கு அருகில் இருக்கும் உப்பு மண்டியில் வேலை பார்ப்பவன் நான். ஆனல் என் நண்பன் ஒரு பெரிய கடைக்கே சொந்தக்காரன். ஐந்தாவது வகுப்புகூடச் சரியாகப் படிக்காத நான் பல ஊர்கள் சுற்றிய அனுபவத்தால் அழகாகப் பேசப் பழகியிருந்தேன். எவரிடமும் கூச்சம் இன்றிக் கலகலவென்று பேசுவேன். ஒருநாள் மனோகரை எதிர்பாராத விதமாகச் சூரியமூர்த்தி குளக்கரையிலுள்ள விநாயகர் கோவிலில் சந்தித்தேன்.

அந்த நாளிலிருந்து இருவருடைய இதயங்களும் ஒன்றுபட்டன. அவனுடைய நெஞ்சில் என்னுடைய உருவமும், என் நெஞ்சில் அவன் உருவமும் பதிந்தன. கார்காலப் பயிர்போலத் தடை ஏதுமின்றி எங்கள் நட்பு வளர்ந்தது. அவனை என்னல் ஒருநாள்கூடப் பார்க்காமல் இருக்க முடியாத நிலைமை மாறி, ஒரு மணி நேரம்கூட என்னல் பார்க்காமல் இருக்க முடியவில்லை.

அவன் யாரோ ? நான் யாரோ ? எங்கள் இருவருக்கும் ஏற்பட்ட நட்பு ஆச்சரியமானது தான். கோப்பெருஞ் சோழனும், பிசிராந்தையாரும் காணாமலே நட்புக் கொண்டதாக இலக்கியக் கட்டுரை ஒன்றில் படித்திருக்கிறேன். ஆனால்...எங்கள் நட்பு இதையெல்லாம் மேம்பட்டு விட்டது.

எங்கு பார்த்தாலும் எங்கள் இருவரையும் ஒன்றாகத்தான் பார்க்கலாம். நானில்லாமல் அவனையும், அவனில்லாமல் என்னையும் தனித்துப் பார்ப்பது அரிதாகி விட்டது. பல பேர்களின் மூலம் என் எஜமானருக்கு இந்தச் செய்தி எட்டியது. என்னைப் பலவாறு கண்டித்தார். 'அவனோடு சேராதே. அவனுக்கும் உனக்கும் சரிப்பட்டுவராது. அவன் முதலாளி, நீ வேலைக்காரன். அவனுடன் சேர்ந்தால் அவன் மாதிரி நடக்க ஆசைப்படுவாய். கெட்ட பழக்கமெல்லாம் ஏற்பட்டு விடும்' என்று எவ்வளவோ புத்திமதி சொன்னார். அச் சமயத்தில் எனக்கு எல்லாம் சரியென்று படும். இனிமேல் மனோகரைக் கண்டால் பேசக் கூடாது என்று அப்பொழுது சங்கல்பம் செய்து கொள்வேன். ஆனால், மறுகணம் எல்லாம் மறந்துவிடும். என் நிலைமையை மாற்றிக் கொள்ள என்னால் முடியவே இல்லை. கள்ளமில்லாத என் நண்பன் என்னைக் காணும் போதெல்லாம் அன்பு குழையப் பேசுவான்.

என் உற்றார் உறவினர் எல்லோரும் மனோகருடன் சேரக்கூடாது என்று என்னைக் கண்டித்தனர். என் நண்பனால் என் அறிவு வளர்ந்ததே தவிர நான் எந்த விதத்திலும் கெட்டுப் போகவில்லை. பின் ஏன், ஊராரும் உற்றாரும் எங்கள் இருவருடைய நட்புக்கும் தடை விதிக்கின்றனர் ?

என் மனத்துக்கு எந்தக் காரணமும் தோன்றவில்லை.

தூக்கமே வரவில்லை. மூட்டைப் பூச்சியின் தொந்தரவு வேறு என் உடலை வருத்தியது. மனத்தைக் கவலைப் புழு அரித்துக் கொண்டிருக்கும் பொழுது தூக்கம் எனக்கு எப்படி வரும் ?

'' நாளைக்கு உன் மானத்தை வாங்கிவிட்டுத் தான் கடையை விட்டு விலக்குவேன்.''

முதலாளி சொன்ன அந்த வார்த்தை மனத்தைக் குத்திக் குத்திப் புண்ணாக்கியது. 'முதலாளி என்னைக் கொல்ல வந்த எமன். எதையும் செய்யத் தயங்க மாட்டார். அதைத் தடுக்க வழியே இல்லையா ? இல்லை... ஏன் இல்லை ?'

வாரிச் சுருட்டிக் கொண்டு எழுந்தேன். என்னுடைய மனம் ஏதோ ஒரு முடிவுக்கு வந்து விட்டது.

அதைச் செயலாற்றக் கைகள் துடித்துக் கொண்டிருந்தன. உடனே அவர் இல்லத்துக்கு விரைந்தேன்.

'நண்பனைப் பிரிய வேண்டும் என்று எனக்குக் கட்டளையிடும் இந்த நயவஞ்சகன் முதலாளியாம் முதலாளி ! இவன் ஒழிய வேண்டும். ஆம், அப்பொழுதுதான் எனக்கும் என் நண்பனுக்கும் நிம்மதி.'

ஆத்திரத்தில் நான் எதையும் அப்பொழுது சிந்திக்கவில்லை.

ஆப்பிள் பழத் தோலும் அதைச் சீவிய பேனாக் கத்தியும் மேஜை மீது கிடந்தன.

அவர் அயர்ந்த நித்திரையில் இருந்தார். தமக்கு இன்னும் ஒரு நிமிட நேரத்துக்குள் ஏற்படப் போகும் பரிதாப முடிவை அவர் எப்படி அறிவார் ?

அடிமேல் அடி வைத்துப் பூனைபோல் நடந்து அவர் அருகில் சென்றேன். கண்ணை மூடிக் கொண்டு கத்தியை அவர் நெஞ்சில் பாய்ச்சினேன். சதக்....ஐயோ....!

வீறிட்டுக் கத்தியவாறு கண்ணைத் திறந்தார். எதிரே தலைவிரி கோலமாக ரத்தச் சிவப்பேறிய கண்களுடன் நிற்கும் என்னைப் பார்த்தார்.

'' சுந்தர்..சுந்தர்..! என்ன காரியம் செய்தாய் ! நீ நல்லா இருக்கணுங்கிற ஒரே எண்ணத்திலேதாண்டா நான் உனக்கு இவ்வளவு புத்திமதியும் சொன்னேன். சிநேகிதனோடு நீ எப்பொழுதும் உட்கார்ந்து பேசிக்கிட்டே இருந்தால் நம்ம வேலையும் கெட்டுப் போகும்; யாராவது உன்னைப் பார்க்கிறவர்களும் ஏதாவது தப்பாக நினைச்சுடுவாங்களென்னுதாண்டா நான் உனக்கு இவ்வளவும் சொன்னேன். நீ மனோகருடன் சேரக் கூடாது, பழகக்கூடாது என்பதல்ல என் எண்ணம். நீ நல்ல பிள்ளையாகணும், கெட்டிக்காரனாகணும், நீ கெட்டுப் போயிடக்கூடாது என்பதுதாண்டா என் எண்ணம். இவ்வளவு பெரிய ஆளாயிருந்தும் என் மனசை உன்னாலே புரிந்துகொள்ள முடியவில்லையே.''

''ஐயோ.....எஜமான்......என்னை மன்னிச்சுடுங்க.'' அதிர்ச்சி அடைந்து கீழே விழுந்து விட்டேன்.

''என்ன சுந்தர், ஏதாவது கனவு கண்டாயா ? விடிஞ்சு போச்சு. எழுந்திரு.''

எதிரே என்னுடைய முதலாளி நின்று கொண்டிருந்தார்.

அவரா இவ்வளவு அன்பொழுக என்னிடம் பேசுகிறார் ?

என்னால் என்னுடைய காதுகளையே நம்ப முடியவில்லையே!

காலைக் கடன்களை முடித்துக் கொண்டு கடைக்கு வந்து சேர்ந்தேன். அப்பொழுது கட்டிலில் அமர்ந்திருந்த என் முதலாளி என்னைக் கூப்பிட்டார்.

நடுக்கத்துடன் அவர் அருகில் சென்றேன்.

''இதோ பாரு சுந்தரம், இந்த வாரத்திலிருந்து உனக்கு ஞாயிற்றுக்கிழமை தோறும் லீவு தருகிறேன். அன்றைக்கு முழுவதும் நீ கடைக்கு வரவேண்டாம். எங்கே வேணும்னாலும் போகலாம்; யாரோடு வேணும்னாலும் பேசலாம். அதைப்பற்றி எனக்குக் கவலை இல்லை. ஆனால் மற்ற நாளிலே நீ எங்கேயும் போகப்படாது. உன் வேலையுண்டு நீயுண்டுன்னு கடையிலேயே இருக்கணும். என்ன, சரிதானா ?'' என்றார் முதலாளி.

நான் காண்பது ''கனவா ?'' என்ற சந்தேகம் எனக்கு ஏற்பட்டு விட்டது. என்னையறியாமலே வாய் சம்மதம் தெரிவித்தது.

என் இதயத்தில் மகிழ்ச்சி பொங்கி வழிந்தது. தங்கு தடையின்றி என் ஆருயிர் நண்பனுடன் கலந்து உரையாட அந்த ஒரு நாளே எனக்குப் போதுமல்லவா ?

# இலட்சிய மனைவி

தெருவில் ஜன நடமாட்டம் நெருக்குறைந்தது. விளக்கு வைத்து விட்டது. சிறு தூறல் விழுந்து கொண்டேயிருந்தது. விளக்கொளியில் காணும் போது பூமியையும், ஆகாயத்தையும் மெல்லிய தங்கக் கம்பிகளால் பிணைத்து யாரோ நெய்து கொண்டிருப்பது போலத் தோன்றியது. பானுமதி தன் பெண் சரளாவுடன் வீட்டை நோக்கி மெதுவாக நடந்து சென்று கொண்டிருந்தாள்.

தாயும் பேசவில்லை, மகளும் பேசவில்லை. தத்தம் சிந்தனைக் கூட்டுக்குள்ளேயே சஞ்சரித்த வண்ணம் அவர்கள் இருவரும் சென்றனர். அவர்கள் வீடு கடைத் தெருவிலேயே இருந்தது.

வீட்டில் நுழைந்தவுடன் பானுமதி முன் பக்கத் தாழ்வாரத்தில் வந்து அமர்ந்தாள். ஆனால் அவள் கண் திருஷ்டியோ இதற்கெல்லாம் அப்பாற்பட்ட ஒரு காட்சியைக் காண்பது போல எங்கோ லயித்திருந்தது. ஸரளா தன்னுடைய அருமை அன்னையின் அருகில் வந்து அமர்ந்து கொண்டாள். தன் கையைத் தாயின் கைக்குள் விட்டுக் கோத்துக் கொண்டாள்.

''அம்மா!'' என்று அழைத்தாள் சரளா.

''என்னம்மா?''

''உன் மாப்பிள்ளையின் கடிதத்தை நீ பார்க்கவில்லையே?'' என்று பேச்சைத் துவக்கினாள் பெண்.

பானுமதி இலேசாகச் சிரித்தாள். பிறகு வாஞ்சையுடன் தன் அருமை மகளின் முகத்தை ஊடுருவிப் பார்த்தாள்.

''நல்ல பெண்! நான் எப்படி உன் கடிதத்தைப் பார்ப்பேன்?'' என்று கேட்டாள் பானுமதி சிரித்தபடியே.

''இல்லை, அம்மா! காட்டுகிறேன் என்று சொல்லத்தான் அப்படிச் சொன்னேன்.''

''என்ன விஷயம் சொல்லேன்?''

''வந்து, ஒரு வாரம் இங்கே இருக்கப் போகிறாராம். பிறகு நாங்கள் போகும் போது உன்னையும், சந்துவையும் எங்களுடனேயே அழைத்துப் போக வேண்டுமாம்.''

''எதற்கு?'' என்று ஆச்சரியப்படுபவள் போல் கேட்டாள் தாயார்.

''என்ன, அம்மா அப்படிக் கேட்கிறாய்? தாத்தாவும் பாட்டியும் இனி மாமாவிடமே போய் விடப் போகிறார்கள். நானும் போய் விட்டால் நீயும் சந்துவும் தனியாகத்தானே இருக்க வேண்டும்?'' என்று வருத்தத்துடன் கேட்டாள் சரளா.

''அதற்காக உங்கள் வீட்டில் வந்து இருந்து விடுவதா? என் வேலை என்ன ஆவது?''

''பிரமாத வேலை, அம்மா! ஏதோ புண்பட்ட உன் மனசுக்கு ஒரு மருந்தாக வேலை தேடிக் கொண்டாய். இனியும் எதற்கு? தன்னை ஒரு மகனாகப் பாவிக்க வேண்டும் என்கிறார் இவர்.''

அநுத்தமா

''வேலையை விட்டால் தான் மகளைப் பாவிக்க முடியுமா, ஸரளா? இந்த இடத்தை விட்டு நான் எங்கும் வரமாட்டேன்.''

''நீ இங்கே தனியாக இருந்தால் நான் எப்படி அம்மா, நிம்மதியாக இருப்பேன்!''

''இனி நீ அனாவசியமாக என்னைப் பற்றி நினைக்கக் கூடாது. உன் முழு மனத்தையும் உன் கணவனுக்கே கொடுக்க வேண்டும்.''

''நான் உன்னை ஒன்றுகேட்கலாமா அம்மா!'' என்று கேட்டு விட்டுத் தன் அன்னையின் முகத்தைப்பார்க்க அஞ்சினவள் போல எங்கேயோ பார்த்தாள் மகள்.




''கேளேன்!'' என்றாள் அவள்.

''ஒரு பெண்ணுக்குத் தன் கணவன் வருகிறான் என்றால் இப்படி மனசு துள்ளுகிறதே? அது ஏன், அம்மா!''

''இயற்கை நியதி. நாம் வளர்ந்த பண்பாடு'' என்றாள் அவள் தாயார்.

''ஏன், அந்தப் புருஷர்களுக்கும் அதே போல இருக்கக் கூடாது?''

''ஏன் இருக்காது? அவர்களுக்கும்தான் தங்கள் ஆசை மனைவிமாரைப் பார்க்க ஆவல் துடிக்கும். பரஸ்பர அன்புக்கவர்ச்சி தான் இல்வாழ்க்கையின் அஸ்திவாரம், ஸரளா!'' என்றாள் பானுமதி.

''ஆண் வர்க்கத்தினிடமே எனக்கு நம்பிக்கையில்லை, அம்மா! ஏதோ உலகத்துக்கு ஒப்பாக மணந்து கொண்டிருக்கிறேன். உண்மையில் எனக்கு விருப்பமேயில்லை.''

அவள் குரலிலுள்ள கைப்பு பானுமதியை ஓர் உலுக்கு உலுக்கியது. மேலும் பெண்ணின் மனநிலையின் காரணம் தன்னுடைய சீர்குலைந்த இல்வாழ்க்கை தான் என்பதை அறிவாள் அவள். ஆயினும் அதெல்லாம் புரிந்தது போலக் காட்டிக் கொள்ளாமல் பானுமதி சிரித்துப் பேசினாள்.



*சென்னை எழும்பூரிலுள்ள வேதசபையினர் சென்னையில் நடந்த அத்வைத சபையில் பங்கெடுத்துக் கொண்ட வித்வான்களுக்கு நவம்பர் 24ந் தேதி யன்று விருந்துபசாரம் செய்து கௌரவித்தனர்.*

''ஸரளா! இந்த மாதிரி வியாதிப் பூண்டுகளை உன் மண்டையிலிருந்து பிடுங்கி எறி. நீ கன்னிகையாக இருந்து வாடினால் நான் பார்த்துக் களித்துக் கொண்டிருக்க முடியுமா? குழந்தைகள் இன்ப இல்லறம் நடத்திப் பார்க்க மனம் ஆசைப்படாதா?''

''இன்ப இல்லறம்! போதுமே, அம்மா!''

''அப்படிப் பேசாதே, ஸரளா. எனக்குப் பிடிக்காது.''

''பின்னே என்ன, அம்மா? எனக்கு நம் பழைய வாழ்க்கை மறந்து விட்டது என்று நினைக்கிறாயா? அப்பொழுது அப்பாவும், நீயும் நானும், சந்துவும் எவ்வளவு சந்தோஷமாக இருந்தோம்? நிமிஷத்தில் அந்தச் சந்தோஷ வாழ்க்கையை மாய்த்து விட்டாரே அப்பா? நான் எப்படி ஆண் பிள்ளைகளை நம்ப முடியும்?''

''இத்தனை நாட்களாக நீயும் என்வாழ்க்கையைப் பற்றிக் கேட்டதில்லை. நானும் சொன்னதில்லை. இப்பொழுது கேள். அவசரப்பட்டு மனசைக் கசக்கி விஷமாக்கிக் கொள்ளாதே. ஒரு மனிதன் தவறு செய்வது சகஜம். அதைப் பெரிதுபடுத்தி எல்லோருடைய வாழ்வையும் வீணாக்கிக் கொள்வதில் பயன் என்னசொல்?''

''இப்படியும் ஒரு தவறா? கட்டின மனைவியைத் தவிக்க விட்டுப் போவது சகஜமான சிறு தவறா, அம்மா?''

''அவர் வெகு தூரத்தில் ஒரு காட்டுப் பிரதேசத்தில் வேலைக்குப் போக வேண்டி வந்தது. அங்கே ஓர் அணை கட்ட ஆரம்பித்தனர். எல்லோரும் கூடாரங்களில் இருக்கும்படி இருந்தது. அப்பொழுது சந்துவை உண்டாகி இருந்தேன். அதனால் நான் போகவில்லை. அந்த அணைக்கட்டுக்குப் பத்து மைல் தூரத்தில் ஒரு ஊர் இருந்தது. அங்கே இவர்கள் அடிக்கடி போவார்களாம். ஒரு சமயம் இவருக்குக் கடும் மலேரியா வந்துவிட்டது. எப்படியோ அந்த ஊர் ஆஸ்பத்திரியில் இருந்த ஒரு பெண்ணுக்கும் இவருக்கும் தொடர்பு உண்டாகி விட்டது. யோசித்துப் பார்! தனிமை; அதிலும் நோய் வாய்ப்பட்டு விட்டால் யார் அநுசரணையாக இருக்கிறார்களோ, அவர்களிடம் ஒரு விதப் பிணைப்பு ஏற்படுவது சகஜமில்லையா? அதிலும் உன் அப்பா பார்க்க வசீகரமான அழகு பொருந்தியவர். விளையாட்டிலும், தமாஷிலும், அதிகப் பிரியம் கொண்டவர். அவர்கள் நட்பு நன்றாக வளர்ந்து விட்டது. பதிவு மணம் செய்து கொண்டு விட்டனர்.''

''பத்துப் பன்னிரண்டு வருடங்களாகவா இது நடந்து வருகிறது? எப்படி அம்மா பொறுத்துக் கொண்டு சிரித்த முகத்துடன் அவருடன் வாழ்க்கை நடத்தினாய்?''

''எனக்குக் குழந்தைகள் இருந்தன. அவைகளின் பிற்கால வாழ்க்கை நலனை உத்தேசித்துப் பொறுமையாக இருந்தேன்.''

''எப்படித்தான் மனம் வந்ததோ?''

''நின்று ஆராய்ந்து யோசித்துப் பார்த்தால் எதுவும் கஷ்டமில்லை. ஒரே பிழையைக் கணவன் செய்தால் விபரீதமாகப் படும். அதையே நம் உடன் பிறந்தவனோ, பெற்ற பிள்ளையோ செய்தால் அநுதாபம்தான் நம் மனத்தில் எழும். அந்தப் பெண் இவரை மிகவும் நேசித்தாள்.''

''நீ நேசிக்க வில்லையாக்கும்?''

''நேசித்தேன். அவளுடைய பாக்கியம் அப்படி?'' என்று கூறிச் சிரித்தாள் பானுமதி.

''சிரிக்காதே, அம்மா. எனக்குப் பற்றிக் கொண்டு வருகிறது.''

''ஸரளா! ஒன்று மட்டும் நினைவில் வைத்துக் கொள். அம்மாவுக்காக ஏதாவது செய்ய வேண்டும் என்று நினைத்தால், இந்தக் கசப்பை உன் மனசிலிருந்து நீக்கிவிடு. உன் அப்பா என்ன செய்தாரோ, அது தப்போ, சரியோ அது என்னைப் பொறுத்தது. நீங்கள் யாரும் அவரைச் சீர்தூக்கிப் பார்க்கத் தேவையில்லை. அவர் இப்பொழுதும் நம்மீது அன்பாகத்தான் இருக்கிறார். உன்னையும் சந்துவையும் பார்க்கும் போதெல்லாம் அன்பாக இருக்கவில்லையா? அவரை நிந்தித்துப் பேச உனக்கு உரிமை கிடையாது.''

ஸரளா தன் தாயின் முகத்தைப் பார்த்தாள். அந்த முகத்திலே சலனமற்ற சாந்த பாவமே குடி கொண்டிருந்தது.

**பா**னுமதி நாராயணனை மணந்து மிகவும் சந்தோஷமாக எட்டு வருடங்கள் வாழ்க்கை நடத்தினாள். பரஸ்பர அன்பிலே திளைத்து ஆதர்ச இல்லறம் நடத்தினார்கள் அவர்கள். ஸரளா அவர்கள் செல்லக் குழந்தையாக வளர்ந்தாள். சந்து பிறப்பதற்கு முன்புதான் அவர்கள் இல்லறம் நிறம்மாறத் தொடங்கியது. ஊதியம் அதிகமாக வரும் என்றும், தனக்கும் தொழில் ஞானம் பெருகும் என்றும் கூறித் தூர தேசம் புறப்பட்டான் நாராயணன்.

''பானு, எப்படியும் இங்கே யிருந்தாலும் குழந்தை பெறும்வரையில் நீ உன் பிறந்தகத்தில்தானே இருப்பாய்? நம் பயலை நீ எடுத்து வரும்போது நானே வந்து அழைத்துச் செல்வேன்'' என்று அவளைச் சமாதானம் செய்தான் நாராயணன். அவன் சொல் உண்மையாகச் சந்து பிறந்தான். 'பயலை' அழைத்துச் செல்லத் தகப்பன்தான் வரவில்லை. பல கடிதங்கள் எழுதிய பிறகு பானுமதியை அழைத்துச் சென்றான் நாராயணன். தன் கணவன் இருப்பிடம் சென்ற பிறகுதான் பானுமதி தன் கணவனின் போக்கில் சிறிது வித்தியாசம் இருப்பதை உணர்ந்தாள்.

## எங்கப்பா எவ்வளவு நல்லவர்!

எவ்வளவு பாக்யசாலி குழந்தை! அவன் தகப்பனார் எப்பொழுதும் ஜான்ஸன்ஸ் பேபி பவுடர் வாங்கி வருகிறார். என்ன மென்மை! என்ன குளுமை! அந்தக் குழந்தையின் சருமத்திற்கு எவ்வளவு இனிமையானது!

Johnson's
TRADE MARK

ஜான்ஸன்ஸ் பேபி பௌடர்




**இலவசம்:** குழந்தை பராமரிப்பு புத்தகத்தின் இலவச பிரதிக்கு எழுதுங்கள். பெற்றோர்களுக்கு வேண்டிய அநேக விஷயங்கள் இதில் அடங்கியுள்ளன. சுலபமாகப்படித்து பசித்து கொள்ளும்படியான இங்கிலீஷ் பாஷையில் எழுதப்பட்டுள்ளது.

ஜான்ஸன் அண்ட் ஜான்ஸன்
பி.ஓ. பாக்ஸ் 1976, டிபார்ட்மெண்ட் 20X
பம்பாய்

JB. 3024

ஒருநாள் சிறு தூறல் விழுந்து கொண்டிருந்தது. என்றும் போலவே குழந்தைகளை வீட்டிலேயே விட்டுவிட்டு, பானுமதி மட்டும் கடைப்பக்கம் சென்றிருந்தாள். அப்பொழுது ஒரு துணிக் கடையில் அவள் கணவன் ஒரு பெண்ணின் அருகில் மிகவும் சலுகையோடு நின்று ஒரு புடவை வாங்கித் தருவதைப் பற்றி வாதாடிக் கொண்டிருந்தான். பானுமதியின் தலை சுற்றியது. ஆயினும் தன்னை அடக்கிக்கொண்டு சட்டென்று வெளியேறி விட்டாள். அவள் மனம் மிகவும் குழம்பி விட்டது. ஆயினும் கணவனைக் கேட்க மனமின்றித் தினம் தினமும் தள்ளிக் கொண்டே வந்தாள். தன்னுடைய வீட்டின் ஆனந்தச் சூழ்நிலை குலைய அவள் மனம் இடம் கொடுக்கவில்லை. குழந்தைகள் இருவரையும் எப்படிக் காப்பாற்றுவது என்று கவலை வேறு அரித்தது. 'கணவன் தன்னிடம் அன்பாக இருக்கும்வரை தானாகக் கிளப்புவானேன்?' என்று அவள் பொறுமையாக இருந்து வந்தாள்.

ஒருநாள் இரவில் ஏதோ ஓசை கேட்டது என்று அவள் எழுந்து பார்த்தாள். அப்பொழுதுதான் வீட்டை விட்டு வெளியேறிக் கொண்டிருந்தான் நாராயணன். பானுமதியைக் கண்டதுமே திடுக்கிட்டு, குழம்பிக் குழறினான். "பானு, ஏதோ ஓசை கேட்டதே என்று எழுந்து பார்த்தேன்" என்றான்.

பானுமதி சிரித்தாள். "ஆமாம், யாராவது திருடனாக இருந்தால் அவனை ராஜோபசாரத்துடன் வரவேற்க வேண்டுமாக்கும். மல் ஜிப்பாவும், சரிகைத் துப்பட்டாவும், வாசனைத் தைலமும் தரித்துக் கொள்ளாமல் திருடனைக் கண்டுபிடிக்கமுடியுமா?" என்றாள்.

அந்தக் கணத்தில் நாராயணனின் கவாதினம் குறைந்து விட்டது. அவன் பானுமதியை நெருங்கி, அவள் இரு கைகளையும் பற்றிக் கொண்டு நீர் மல்க நின்றான். "பானு! நான் துரோகி. உன்னை நான் ஏமாற்றி வருகிறேன்" என்று கதறி விட்டான்.

"எனக்குத் தெரியும். அன்றுகூடக் கடைத் தெருவில் உங்களுடன் இருந்தாளே, அவள் தானே?" என்று மெதுவாகக் கேட்டாள் பானுமதி. அவள் நெஞ்சமும் துடித்தது.

"ஆமாம், எத்தனை நாட்களாக உனக்குத் தெரியும்? அவளை நான் பதிவு மணம் செய்து கொண்டு விட்டேன், பானு" என்றான் நாராயணன்.

பானுமதி ஒன்றுமே பதில் சொல்லவில்லை. அதன் பிறகு முன்போலக் களங்கமற்ற இன்பம் இருக்கவில்லை வீட்டில். எவ்வளவு தான் தன்னைச் சமாளித்துக் கொண்டாலும் பானுமதிக்கு நிம்மதி குலைய ஆரம்பித்தது. நாராயணனும் அவள் மௌனமாக அனுபவிக்கும் துயரத்தைக் கண்டு உள்ளம் புழுங்கினான். பிறகுதான் நாராயணன் பானுமதியின் துயரத்தைப் போக்க ஒரு வழி தேடினான்.

"பானு, அவளையும் இங்கேயே அழைத்து வந்து விடுகிறேன். அவள் உனக்குக் கீழ்ப்படிந்தே நடப்பாள்."

"வேண்டாம். எந்தப் பெண்ணும் கண் எதிரேயே வேறு ஒரு பெண்ணுடன் தன் கணவனைப் பகிர்ந்து கொள்ளப் பிரியப்பட மாட்டாள். எனக்காவது குழந்தைகள் இருக்கிறார்கள். பெற்றோர், உடன் பிறந்த



மனைவி:— டாக்டர் எதற்கு அடிக்கடி வந்து இஞ்செக்ஷன் போடுகிறார்?
கணவர்:— போன மாதம் டாக்டருக்குச் சேர வேண்டிய பீஸ் பணத்தை நான் இன்னும் கொடுக்க வில்லையாம். அதற்காகத் தான் அதைக் குத்திக் காட்ட வந்திருக்கிறார்.

வர்கள் எல்லாம் இருக்கிறார்கள். அவளோ தன் வேலையையும் போக்கிக் கொண்டு விட்டாள். உற்றார் உறவினர்களையும் உங்களுக்காக விட்டு விட்டாள். அவள் செய்த குற்றம் மணமான ஒரு மனிதனைக் காதலிக்கத் துணிந்ததுதான்! நீங்கள் அவளுடனே இருங்கள். நான் குழந்தைகளுடன் ஊருக்குப் போய் விடுகிறேன்!"

"பானு, நீ என்னைச் சுலபத்தில் மறந்து விட்டாய். நான் உன்னை மறக்க முடியாது. உனக்கு மாதா மாதம் பணம் அனுப்புகிறேன்...." என்றான் நாராயணன்.

"உங்கள் பணம் எனக்கு இனி என்ன செய்து கொடுக்கும்?" என்று கூறி விட்டு வறண்ட சிரிப்புச் சிரித்தாள் பானுமதி.

"என் அன்புக் காணிக்கையாக...." என்று ஆரம்பித்தான் நாராயணன். அவன் என்ன சொல்லி விருப்பானோ? பானுமதி செவி சாய்க்க இஷ்டப்படவில்லை.

"நீங்கள் செய்யக்கூடியது ஒன்றுதான். நான் குழந்தைகளை எப்பொழுதும் உங்களிடம் அன்பு கொள்ளும் அளவிலேயே வளர்ப்பேன். நீங்கள் அவ்வப்போது வந்து அவர்களைப் பார்த்துவிட்டுப் போனால் போதும். நாளைக்கு நம் லரளா பெரியவளானாலும் கல்யாணத்தின் போது அப்பா இல்லாமல்...." பானுமதியின் திண்மை குலைந்து விட்டது. விக்கி விக்கி அழுது விட்டாள். நாராயணன் அவளை ஆசுவாசப்படுத்தத் தெரியாமல் தவித்தான்.

பானுமதி தனது இரு குழந்தைகளுடனும் பிறந்தகம் வந்து விட்டாள். ஆசிரியப் பயிற்சிக் கல்லூரியில் சேர்ந்து படிக்க ஆரம்பித்தாள். அப்பொழுது நாராயணன் அவள் இருந்த ஊருக்கே வேலையாக வந்தான். ஊருக்கு ஒப்பாக இரண்டு மூன்று வருடங்கள் குடித்தனம் நடந்தது. அதன் பிறகு பழைய கவாதீனமற்ற வாழ்க்கை இருவரையும் மிகவும் பாதிக்கவும் நாராயணன் வேறு ஊருக்கு மாற்றிக் கொண்டு போய்விட்டான். அங்கு அவன் தன்னுடைய இரண்டாவது மனைவியுடன் இருந்தான்.

பானுமதியின் மனத்தில் எண்ணங்கள் என்ன எழுந்தனவோ யாருக்கும் தெரியாது. அவள் எப்பொழுதும் சிரித்த முகமும் ஊக்கத்துடன் கூடிய முயற்சியுமாகத் தனக்கு ஒரு வாழ்வுத் திட்டம் வகுத்துக் கொண்டாள். அவள் பெற்றோரும் அவளுக்குத் துணையாக இருந்து வந்தனர். பானுமதியின் தங்கை, தம்பிக்குக் கல்யாணம் நடந்தது. அச்சமயம் பானுமதியின் கணவன் நாராயணன் வந்து இரண்டு நாட்கள் இருந்து விட்டுப் போனான். அவன் மனம்மட்டும் பானுமதிபோலக் கடினமாகி விடவில்லை போலும். அவளை மீண்டும் ஏற்றுக் கொள்ள எண்ணி நெருங்கினான். ''வேண்டாம். நான் உங்கள் குழந்தையின் தாய். அவ்வளவுதான். மனைவி நான் அல்ல, அவள்தான்'' என்று கண்டிப்பாக இருந்து விட்டாள் பானுமதி.

இப்படியே இன்று ஏழு எட்டு வருடங்கள் சென்று விட்டன. பானுமதி நல்ல மதிப்பு வாய்ந்த தலைமை உபாத்தியாயினியாக இருக்கிறாள். அவள் பெண் ஸரளாவுக்கும் மணமாகி விட்டது. ஒரே ஒரு குழந்தை ஈந்து இருந்தாள். அவளைக் காப்பாற்றி ஆளாக்கத் தைரியம் இருந்தது பானுமதிக்கு. பானுமதியின் தம்பி தொலை தூரத்தில் நல்ல அந்தஸ்தில் இருந்தான். தன் பெற்றோரைக் கூடவே வைத்துக்கொள்ள எண்ணினான். தனக்காக அவர்கள் போகாமல் இருப்பதைப் பானுமதி விரும்பவில்லை.

தன் தாய் தந்தையரைக் கூட்டிச் செல்வதற்காகப் பானுமதியின் தம்பி வந்திருந்தான். எழுதியிருந்த கடிதப்படி மாப்பிள்ளையும் வந்திருந்தான். வீடு 'ஜே, ஜே' என்றிருந்தது. இந்தச் சந்தர்ப்பத்தில் அவளது கணவன் நாராயணனும் வந்து சேர்ந்தான்.

அவளாகத் தன்னுடைய நிலைமையை யாரிடமும் கூறிக் கொண்டதில்லை. அன்று என்னமோ அவள் மனம் போனதை நினைத்துப் புழுங்கியது.

'இத்தனை வருஷம் இல்லாத, ஒரு தளர்ச்சி இன்றைக்கு ஏன்?' என்று தனக்குத்தானே அவள் வியந்துகொண்டாள்.

''பானு!'' என்ற அந்தக் குரல் கேட்டு நிமிர்ந்தாள் பானுமதி. அவள் கணவன் நாராயணன் எதிரே நின்று கொண்டிருந்தான்.

''பானு, உன்னிடம் ஒரு வேண்டுகோளுடன் வந்திருக்கிறேன். இந்தச் சமயம்....'' என்று ஆரம்பித்தான் நாராயணன்.

''....என்ன?''

''நான் அவளைத் துறந்து விட்டேன். உன்னை விட்டு என்னால் இருக்க முடியவில்லை. நீ என்னை மன்னித்து....''

பானுமதி பதில் சொல்லாமல் தன் கணவனையே பார்த்தாள்.

''என்மீது துளிக்கூட உனக்கு அன்பு மிச்சமில்லையா?''

''உங்களுக்கு வயது நாற்பத்தைந்து ஆகப் போகிறது. இப்பொழுது கூட ஒரு நிர்ணய புத்தி வரவில்லையா? இந்தச் சலன புத்தி ஏன்? அவள் என்ன தவறு செய்தாள்?''

''உன்னை என்னிடமிருந்து பிரித்து விட்டாளே, சண்டாளி!''

''வையாதீர்கள். நான் அதை ஒப்பமாட்டேன். என்னை அவளுக்குத் தெரியாது. நீங்களாகச் செய்த ஒரு காரியத்துக்குப் பிறர்மீது பழி சுமத்த வேண்டாம். இப்பொழுது அவளைக் கைவிட்டால் அவள் எப்படி வாழ்வாள்? நான் இனி உங்களுடன் வந்து என்ன அடையப் போகிறேன்? அல்லது நீங்கள்தான் என்ன புதிய இன்பத்தைப் பெறப் போகிறீர்கள்? ஒரு நினைவாக நான் அமைதியாக வாழ்கிறேன்.''

''அப்படியானால் பானு....''

''ஆமாம். என் முடிவேதான் முடிவு. என் மீது உங்களுக்கு எள்ளளவு பிரியம் மிச்சமிருந்தால், என் பேச்சுக்கு நீங்கள் மதிப்புக் கொடுப்பீர்களானால், அவளைக் கைவிடக் கூடாது!'' என்றாள் பானுமதி.

நாராயணன் தன் மனைவியையே ஒரு நிமிஷம் பார்த்துக் கொண்டிருந்தான். பிறகு, ''பானு! உனக்கு அளித்த வாக்கை நான் என்றும் பொய்யாக்க மாட்டேன்'' என்றான் உணர்ச்சி பூர்வமாக.

மாப்பிள்ளை திரும்பும்போது சரளாவை அழைத்துச் செல்ல விரும்பினான். பானுமதி எல்லா ஏற்பாடுகளையும் செய்து வந்தாள். அவள் தன் அறையில் ஸரளாவின் துணிமணிகளைப் பெட்டியில் அடுக்கிக்கொண்டிருந்தாள். அப்பொழுது சரளா தன் கணவனுடன் பக்கத்துத் தாழ்வாரத்தில் பேசிக் கொண்டிருந்தது காதில் விழுந்தது.

''ஸரளா, உங்கள் அம்மாவைக் கூப்பிடக் கூட எனக்குத் தைரியமில்லை. உன் அப்பாவுக்குக் கொடுத்த பதிலைக் கேட்டோமே, பார்த்தாயா? உன் அம்மா ஒரு தெய்வம். என்ன நிர்ணயமான உள்ளம்! எங்கேயாவது சாதாரண மனிதப் பெண்ணுக்கு அவ்வளவு திடச் சித்தம் இருக்குமா? நீங்கள் மெத்த பாக்கிய சாலிகள். இத்தகைய தாயார் கிடைப்பது அரிது, ஸரளா!'' என்று கூறிக் கொண்டிருந்தான் மாப்பிள்ளை.

''எங்களுக்காகத்தானே அம்மா இப்படி ஒரே வைராக்கியமாக இருக்கிறாள்? அவளைப் போல ஒரு மனத் திடம் எனக்கு அளிக்க வேண்டுமே, ஆண்டவன்!'' என்றாள் சரளா.

''உன் அம்மாவைக் கண்டதே ஒரு பாக்கியமாகக் கருதுகிறேன் நான்'' என்றான் சரளாவின் கணவன்.

''அவள் உங்களைத் தன் மூத்த மகனாகவே பாவிக்கிறாள்'' என்றாள் சரளா.

பானுமதி சட்டென்று அந்த இடத்தை விட்டு அகன்றாள். அவள் கன்னங்களில் நீர் வழிந்தது.

'நான் தெய்வமா? இந்தத் தெய்வ வெளிப்பூச்சுக்கு அடியில் மனிதக் குறைபாடுகள் எவ்வளவுதான் இல்லை? இன்று கூட அவரை மறுக்க நான் பட்ட பாட்டை யாரே அறிவர்? எனக்கா மனோ தைரியம்? ஒவ்வொரு நிமிஷமும் அவர் மார்பில் முகத்தைப் புதைக்கத் துடித்ததை யார் அறிவர்?' என்று தனக்குள் சொல்லிக் கொண்டாள் பானுமதி.

ஆனால் சரளாவும் மாப்பிள்ளையும் அவள் இருந்த இடத்துக்கு வந்தபோது எப்பொழுதும் போல நிர்மலமான முகமும், சுறுசுறுப்பான நடவடிக்கையுமாக இருந்தாள் பானுமதி.

# உங்கள் கேசத்தை அதிக கருமையுடனும் பகட்டுடனும் வைக்க குளிர்ச்சியான வெண்ணிற ப்ரில்க்ரீம் உபயோகியுங்கள்






* ப்ரில்க்ரீமின் சுத்தமான க்ரீமாக்கப்பட்ட எண்ணெய்கள் உங்கள் கேசத்தின் இயற்கை கருமை நிறத்தை சோபிக்கச் செய்கின்றன. சுத்தமான வெண்ணிற ப்ரில்க்ரீமை உங்கள் தலையில் தினந்தோறும் அழுத்தித் தேயுங்கள். பொடுகுகள் ஏற்படுவதை இது தடுத்து உங்கள் கேசத்தை சுத்தமாயும் ஆரோக்கியத்துடனும் வைக்கிறது.

* சிறிதளவு ப்ரில்க்ரீம் நீடித்த உபயோகத்திற்கு வருகிறது! இன்றே ஒரு ப்ரில்க்ரீம் ஜாடியை வாங்கி எவ்வளவு காலம் அது நீடித்த உபயோகத்திற்கு வருகிறதென்று பாருங்கள்.

வாழ்க்கையில் வெற்றிபெற்றவர்கள்

# ப்ரில்க்ரீம் BRYLCREEM

உபயோகிக்கிறார்கள்

# அபலை அஞ்சுகம்

கி. ரா. கோபாலன்

## 25. சிரிப்பொலி கேட்டது!

விஜயரங்கன் சொக்கனிடம் தகப்பனாரைப் பற்றி விசாரித்ததும், "என் தகப்பனாரா? எனக்குத் தெரியாது. என் தாயார் என்னைக் குழந்தையிலே அங்காடிப் பேட்டையில் பெருங் கண்ணன் என்கிறவரிடம் ஒப்படைத்து விட்டு மறைந்து விட்டாள்.." என்றான் சொக்கன் அலுப்போடு.

"சரி. உன் தாயார் பெயர் என்ன?"

"விசாலாட்சின்னு சொல்லுவாங்க."

விஜயரங்கன் ஒரு பெருமூச்சு விட்டுக்கொண்டே சொக்கனைப் பச்சாத்தாபத்தோடு பார்த்தான். அப்பொழுது அவன் குரல் தழுதழுத்தது. "நீ இப்பொழுதே எங்கேயாவது போய்விடுவது தான் உசிதம். நீ எங்கேயாவது நல்லபடியாக ஏதாவது தொழில் செய்து வாழ்கிறாய் என்று கேட்டால்தான் எனக்கும் மனத்துக்கு ஆறுதலாக இருக்கும். நீ என் சொத்துக்களை அடைந்து அனுபவிக்க ஆசைப்பட்டதை நான் குற்றம் என்று சொல்லத் தயாராக இல்லை... இந்தச் சொத்தில் உனக்கும் பாத்தியதை இருந்திருக்கலாம். நான் சொல்வதைக் கேள். நீ எப்படியாவது பர்மாவுக்குப் போய் விடு. அங்கு போய் எனக்குக் கடிதம் எழுது. அங்குள்ள என்னுடைய சிநேகிதர் மூலம் உனக்கு நல்ல ஏற்பாடுகள் செய்யச் சொல்கிறேன். கவலைப்படாதே. ஒழுங்கான வழியில் ஜீவனம் நடத்த வழி செய்து கொள். போ. இங்கே அதிக நேரம் தாமதிக்காதே" என்றான் விஜயன்.

விஜயரங்கனின் பேச்சு அஞ்சுகத்துக்கு ஆச்சர்யத்தை அளித்தது. இப்படிப்பட்ட உத்தமனும் உலகில் இருக்கிறானே என்ற ஆச்சரியம்தான் அவளுக்கு.

"நான் இனிமேல் எந்தத் தவறும் செய்ய மாட்டேன். உங்களை என்றும் மறக்க மாட்டேன்... நீங்கள் சொல்லிய படியே நடக்கிறேன். நான் போய் வருகிறேன்......" என்று கூறியவண்ணமே அஞ்சுகத்தையும் விஜயரங்கனையும் நன்றியறிதலோடு பார்த்து விட்டுச் சொக்கன் மெதுவாக நடந்தான்.

அஞ்சுகத்தின் கண்களில் இரு துளிக் கண்ணீர் துளித்தது. அப்பொழுது விஜயரங்கனின் கண்களும் கலங்கி இருந்ததை அவள் கவனிக்கவில்லை.

சொக்கன் சென்ற சில நிமிட நேரத்துக்கெல்லாம் அஞ்சுகமும் விஜயரங்க



னும் அந்த வீட்டை நோக்கி நடந்தனர். அவர்கள் அந்த வீட்டு வாசற்படியை அடைந்த பொழுது போலீஸ் 'வான்' ஒன்று வந்து நின்றது. அந்த வண்டியிலிருந்து ஐந்தாறு போலீஸ்காரர்கள் இறங்கி அந்த வீட்டை நோக்கி வந்தனர். விஜயரங்கன் அவர்களை வரவேற்றான். போலீஸ் இன்ஸ்பெக்டர் விஜயரங்கனைப்பார்த்து, ''அந்தக் குறத்தியையும் குறவர்களையும் பிடித்துவிட்டோம். உண்மை வெளியாகி விட்டது...இங்கே யாரோ நிர்மலாதேவின்னு இருக்காங்களாமே. அவர்கள்தான் இதற்கெல்லாம் காரணம்னு தெரிகிறது. அதோடு சொக்கன் என்று யாரோ ஒருவன் இங்கே இருக்கிறதாகத் தெரிகிறது. அவர்களைக் கைது செய்ய வாரண்டு பிறந்திருக்கிறது..'' என்றார்.

''தாராளமாக அவர்களை அழைத்துக் கொண்டு போங்கள். அது உங்களுடைய கடமை...'' என்றான் விஜயரங்கன்.

வீட்டு வாசலில் ஏதோ பேச்சுக் குரல் கேட்பது அறிந்து நிர்மலா பரபரப்போடு வெளியே வந்தாள். பரபரப்போடு வந்த அவளைச் சட்டென்று மண்டையிலடித்து நிறுத்துவது போலத் திகைப்படைந்து நிற்க வைத்துவிட்டது. அங்கிருந்த காட்சி. போலீஸ்காரர்கள், விஜயரங்கன், அவனுக்குப் பக்கத்தில் அஞ்சுகம் எல்லாம் அவள் மூளையையே சிதற அடித்துவிடும் போலிருந்தன. அந்த நிமிஷமே அவள் ஜீவன் இழந்தவள் போலாகி விட்டாள்: அப்பொழுதுதான் மலர்ந்த தாமரை போல் இருந்த அவளுடைய முகம் கறுத்துச் சுண்டியது. அவள் விஜயரங்கனையும், அஞ்சுகத்தையும், போலீஸ்காரர்களையும் மாறி மாறிப் பார்த்து மிரள மிரள விழித்தாள்.

''நீங்கள்தானே நிர்மலாதேவி...?'' என்றார் போலீஸ் இன்ஸ்பெக்டர், அவளைப் பார்த்து. அவள் ''ஆமாம்'' என்றாள் மங்கிய குரலில்.

''சில மாதங்களுக்கு முன் இந்த வீட்டில் நகைகள் களவு போனது சம்பந்தமாகவும், விஜயரங்கன் என்பவரைக் கொலை செய்யச் சதி செய்ததற்காகவும் உங்களைக் கைது செய்யப் போகிறோம்'' என்று கூறினார் போலீஸ் இன்ஸ்பெக்டர்.

நிர்மலா எதுவும் பதில் சொல்லாமல் தலைகுனிந்தவண்ணம் அசையாது நின்று கொண்டிருந்தாள்.

''சொக்கன் என்பவரும் உங்களோடு இங்கு இருக்கிறாராமே....?'' என்றார்.

''ஆமாம்! இருக்கிறார். அவர் இந்தத் தோட்டத்துக்குள் போனார்'' என்றாள் நிர்மலா மெதுவான குரலில்.



இன்ஸ்பெக்டர் போலீஸ்காரர்களைக் கொண்டு சொக்கனைத் தோட்டத்திலும் தேடச் சொன்னார்.

விஜயரங்கன் அஞ்சுகத்தை அழைத்துக் கொண்டு வீட்டுக்குள் சென்றான். அஞ்சுகம் அவனைப் பார்வதியம்மாளின் படுக்கை அறைக்கு அழைத்துச் சென்றாள். அறையில் பார்வதியம்மாள் ஏதோ முனகிய வண்ணமே படுத்துக்கொண்டிருந்தாள். விஜயரங்கன் அவளுடைய படுக்கைக்குச் சமீபமாகப் போய், ''பெரியம்மா....'' என்றான்.

பார்வதி பரபரப்போடு எழுந்துஉட்கார்ந்து எதிரே நிற்கும் உருவத்தை உற்று நோக்கினாள். அவளுக்கு விஜயரங்கனைக் கண்டதும் ஏதோ திகைப்பு ஏற்பட்டதே தவிர முன்போல் மயக்கம் ஏற்பட வில்லை. ''விஜயா! நீ என் விஜயன் தானே?'' என்றாள்.

''ஆமாம், உங்கள்!. விஜயன்தான், பெரியம்மா!'' என்றான் விஜயரங்கன்.

''அன்று எலிக்கோட்டையில் — ஆற்றங்கரையில் — பார்த்தேனே அந்தவிஜயன் தானே...?'' என்றாள் நடுங்கும் குரலில்.

''ஆமாம்! பெரியம்மா என்ன நீங்கள் கூட எலிக்கோட்டை என்கிறீர்கள்? விஜயகோட்டை என்று சொல்லுங்கள், பெரியம்மா!'' என்றான் விஜயன்.

அந்த வார்த்தை பார்வதியின் உடலிலேயே ஏதோ புதிய ரத்தத்தைப் பாய்ச்சியது போலிருந்தது. அவள் சட்டென்று எழுந்து விஜயரங்கனை அணைத்துக் கொண்டு, ''நீதான் என் விஜயரங்கன். எனக்குப் புரிந்து விட்டது.







# ஜானகி உபயோகிப்பது

## லக்ஸ் டாய்லெட் சோப்

"நானறிந்த சோப்புக்களில் மிகவும் தூய்மையான, வெண்ணிற சோப்!"

சினிமாத் துறையில் நீடித்த வெற்றியுடன் இருப்பதென்றால் படப்பிடிப்பின்போது உழைத்தால் மட்டும் போதாது என்பது ஜானகியின் கொள்கை. தமது மென்மையான மேனியை அவர் கண்ணும் கருத்துமாகப் பராமரிப்பதே இதை நிரூபிக்கும். எப்பொழுதும் லக்ஸ் டாய்லெட் சோப்பே உபயோகித்து அவர் தமது மேனியழகைப் பராமரிக்கிறார்.

வெண்மையும் தூய்மையும் மிகுந்த லக்ஸ் டாய்லெட் சோப்பே சருமத்துக்கு மிக மென்மையான பராமரிப்பு அளிக்கும் நிச்சயமான முறை. அழகிற்சிறந்த திரைப்பட நட்சத்திரங்களின் நம்பிக்கைக்குப் பாத்திரமானது. நீங்களும் உபயோகிக்க வேண்டியது!

# லக்ஸ் டாய்லெட் சோப்

சினிமா நட்சத்திரங்களின் அழகு தரும் சோப்

LTS. 514-50 TM



என்னிடம் யாரும் பொய் சொல்ல முடியாது. எனக்கு எல்லாம் ஏதோ மாய விளையாட்டுப் போலத்தான் தோன்றுகிறது. எது நிஜம், எது பொய் என்றே தெரியவில்லை. அன்று நான் உன்னைக் கண்டதும் மயக்கம் போட்டு விழுந்ததை நிர்மலாவிடம் சொன்னேன். அவள் நான் ஏதோ பேயையோ, பிசாசையோ கண்டு மிரண்டு விட்டதாகச் சொல்கிறாள்...'' என்றாள்.

'' அவள் அப்படித்தான் சொல்லுவாள். அப்படிச் சொன்னால்தானே விடாமல் அவள் தன் நாடகத்தை நடத்திக்கொண்டு போகலாம்?..'' என்றான்.

'' நாடகமா...? எனக்கு ஒன்றும் புரியவில்லையே. உன் பக்கத்திலே யாரோ நிற்கிறானே யார் அவன்...?'' என்று சொல்லி அஞ்சுகத்தை உற்றுப் பார்த்தாள். பிறகு, ''அஞ்சுகமா....! இவள் எங்கே வந்தாள்? வீட்டிலிருந்த நகைகளை எல்லாம் திருடிக் கொண்டு..'' என்றாள் பார்வதி ஆத்திரத்தோடு.

'' பெரியம்மா! நகைகளை அஞ்சுகம் திருடவில்லை. நிர்மலா தான் திருடி விட்டு இவள் மீது பழி வைத்திருக்கிறாள். இதை யெல்லாம் பற்றிப் பின்னால் உங்களுக்கு விவரமாகச் சொல்கிறேன். இப்பொழுது நீங்கள் பதற்றமடையாமல் படுத்துக் கொள்ளுங்கள்'' என்று கூறினான் விஜயன்.

அந்தச் சமயம் போலீஸ் இன்ஸ்பெக்டர் அந்த அறையில் நுழைந்து, ''சொக்கன் அகப்படவில்லை. எங்கோ ஓடி விட்டான். அவனைத் தேடிப் பிடிக்க ஏற்பாடு செய்கிறோம். நிர்மலா தேவியை மாத்திரம் இப்பொழுது கைது செய்து கொண்டு போகிறோம். ஏதேனும் தகவல் இருந்தால் எங்களுக்குச் சொல்லி அனுப்புங்கள்...'' என்றார்.

'' நீங்கள் இவ்வளவு தூரம் உதவி செய்ததற்கு மிகவும் கடமைப்பட்டிருக்கிறேன். ஏதேனும் தகவல் இருந்தால் கொடுக்கிறேன்'' என்று இன்ஸ்பெக்டருக்கு வணக்கம் செலுத்தினான், விஜயரங்கன்.

பிறகு அவன் தன் அறையில் உட்கார்ந்து ஏதோ எழுதிக் கொண்டிருந்தான். அஞ்சுகம் மெதுவாக வந்து அவன் பின்னால் நின்று, ''என்ன எழுதுகிறீர்கள்?'' என்றாள்.

''கடிதம்'' என்றான் விஜயரங்கன்.

''யாருக்கு...?''

''என் தம்பிக்கு!''

''தம்பியா! யாரது...?''

'' அதற்குள் மறந்து போய் விட்டாயா? சொக்கனுக்கு.''



எண்ணற்ற ஏழை மாணவர்களுக்கு உணவும் உடையும் அளித்து, கல்வியும் ஒழுக்கமும் கற்பித்து அரும் தொண்டாற்றி வரும் சென்னை, ஸ்ரீ ராமகிருஷ்ண மிஷன் மாணவர் இல்லம், முப்பது ஆண்டுகளாக ஏழை மக்களுக்கு இலவச வைத்திய சிகிச்சையும் அளித்து வருகிறது. மேற்படி வைத்தியசாலைக்கு வரும் நோயாளிகள் கொஞ்சம் கொஞ்சமாகப் பெருகிக்கொண்டே வந்து, ஒரு லக்ஷத்துக்கு மேல் ஆகிவிடவே, ஒரு பெரிய சொந்தக் கட்டடம் ஒரு லக்ஷ ரூபாய் செலவில் நிறுவ உத்தேசித்து நிதி திரட்டப்பட்டு வருகிறது. நோயுற்ற ஏழைகளுக்கு ஆதரவளிக்கும் மேற்படி நிதிக்காக, பேராசிரியர் ''கல்கி'' அவர்களின் ''பார்த்திபன் கனவு'' நாடகம் 9-12-56 ஞாயிறன்று மயிலை, ரஸிக ரஞ்சனி சபையில், ஸ்ரீ ராமகிருஷ்ண கிருபா அமெச்சூர்ஸ் நடிகர்களால் சிறப்பாக நடத்தப்பட்டது. மேற்படி நாடகத்தின் அற்புதக் காட்சிகளில் ஒன்றைப் படத்தில் காணலாம்.

---

''என்ன எழுதுகிறீர்கள்?''

''அங்குள்ள என் சிநேகிதருக்குப் பணம் அனுப்பி அவனுக்கு ஒரு கடை வைத்துக் கொடுக்கச் சொல்லி இருக்கிறேன். ஒழுங்காகவும் யோக்கியமாகவும் இருந்து தொழிலைக் கவனித்துக் கொள் என்று எழுதியிருக்கிறேன்'' என்று சொல்லிக் கொண்டே கடிதத்தை மடித்தான் விஜயன்.

''சரி. இன்னொரு இடத்துக்கு ஒரு கடிதம் எழுத வேணுமே?''

''யாருக்கு...?''

''சந்திரகிரி ஜெயிலுக்கு!''

''சந்திரகிரி ஜெயிலுக்கா? யாருக்கு? நிர்மலாவுக்கா?''

''இல்லை. அந்த ஜெயில் நிர்வாகியாக இருக்கும் சரளாதேவிக்கு.''

''தாராளமாய் எழுதேன்!''

''எனக்கு எழுதத் தெரிந்தால் நான் ஏன் இப்படி இருக்கிறேன்? நான்தான் இரண்டு எழுத்துக் கூடப் படிக்காத துரதிருஷ்டசாலியாயிற்றே!'' என்றாள்.

விஜயரங்கன் சிரித்தான். ''நீ துரதிருஷ்டசாலி இல்லை; பேரதிருஷ்டசாலி. நிர்மலாவைப் போல் படித்துவிட்டுப் பிறகு...''

''படித்த பெண்கள் எல்லோருக்குமே உபமானமாக நிர்மலாவைச் சொல்லாதீர்கள். படித்தபெண்களில்எத்தனையோ பேர் சமூகத்துக்கு நல்லது செய்கிறார்கள். சந்திரகிரி ஜெயில் அதிகாரியாக இருக்கும் சரளாதேவி படித்த பெண்தான். அவர்களைப் போல் பெண்குலத்துக்குப் பாடுபடுகிறவர்கள் யாரேனும் உண்டா? பெண்கள் சிறையில் நீங்கள் போய்ப் பார்த்தால் தெரியும்!''

''ராம — ராம — ஆண்கள் சிறைக்கே நான் போகாமல் தப்பினேனே என்று நினைக்கிறேன். பெண்கள் சிறைக்கு வேறு போகச் சொல்கிறாயா?''

''விளையாடாதீர்கள். அங்கே ஜெயிலுக்கு வந்திருக்கும் பெண் கைதிகளில் முக்காலே மூணுவீசம் பேர் படிக்காதவர்கள்தான். அவர்களெல்லாம் 'ஏரளவாவது படித்திருந்தால் இப்படிப்பட்ட குற்றமெல்லாம் செய்துவிட்டு ஜெயிலுக்கு வந்திருக்க மாட்டாங்க'ன்னு சரளாதேவி அடிக்கடி சொல்லுவாங்க.''

''சரிதான். அந்தச் சரளா தேவிக்கு எப்படிக் கடிதம் எழுத வேண்டும் என்று சொல்கிறாய்?''

''நான் சொல்லிக் கொண்டு வருகிறேன். நீங்கள் எழுதுங்கள்.''

''ரொம்ப சரி; அதுதான் உத்தமம். சொல்லு'' என்றுசொல்லிக் காகிதத்தையும் பேனாவையும் தயார் செய்து வைத்துக் கொண்டான் விஜயரங்கன்.

''எழுதுங்கள். 'அன்புமிக்க சகோதரி சரளாதேவி அவர்களுக்கு வணக்கம்...' எழுதினீர்களா?''

''எழுதி விட்டேன். சொல்லு!''







ஆகையால்தான்
மற்றெந்தத்
தேயிலையையும் விட
அதிகப்படியான
ஜனங்கள்

**ப்ரூக் பாண்ட்**
**தேயிலையையே**

அருந்துகிறார்கள் !

'''உங்கள் கருணையாலும் ஆசீர்வாதத்தாலும் அஞ்சுகம் இவ்விடம் சந்தோஷமாகவும் சுகமாகவும் இருக்கிறாள். நீங்கள் செய்த பேருதவியை அவள் என்றென்றும் மறக்க மாட்டாள் ....' எழுதினீர்களா ?''

'' எழுதியாகி விட்டது.''

'' அப்புறம்.....இருங்கள். அப்புறம் என்று எழுதி விடாதீர்கள். வந்து....''

'' 'வந்து' என்று எழுதட்டுமா !''

'' அடாடா ! நான் சொல்கிறதை மாத்திரம் எழுதுங்கள்.''

'' சொல்கிறதை மாத்திரம் தான் எழுதுகிறேன். 'அப்புறம்', 'வந்து' இதெல்லாம் நீ சொல்லவில்லையா ?''

'' நான் சொன்னேன். ஆனால் அதையெல்லாம் கடிதத்தில் எழுதச் சொல்லவில்லை. இனிமேல் நான் 'வந்து, அப்புறம்' எல்லாம் இல்லாமல் சொல்கிறேன். எழுதுங்கள்.''

'' சரி ; சொல்லு.''

'' நிர்மலாதேவி என்னும் பெண் இந்த வீட்டில் செய்த சில களவுக் குற்றங்களுக்காகத் தண்டிக்கப்பட்டு உங்கள் சிறைக்கு அனுப்பப் பட்டிருக்கிறாள். படித்த பெண். அழகும் யௌவனமும் கொண்டவள். அவளைப் பார்த்ததுமே உங்கள் மனம் உருகி அவள் மீது உங்களுக்கு இரக்கமும், பச்சாத்தாபமும் ஏற்பட்டிருக்கும். படித்தவளாகவும், சாமர்த்தியசாலியாகவும் இருந்தும் வீண் ஆசையின் காரணமாகத் தகாத காரியங்களைச் செய்யத் துணிந்து விட்டாள். அப்படிப்பட்ட பெண் உலகத்தில் வீணாகக் கூடாது. உங்களது பாதுகாப்பில் இருக்கும் அவளுக்கு நீங்கள் நல்லுபதேசம் செய்து அவள் உலகத்தில் சிறந்த முறையில் வாழ வழிகாட்ட வேண்டுமென்று பிரார்த்திக்கிறேன். அஞ்சுகம் என்றென்றும் உங்களுக்குத் தன் நன்றியைத் தெரிவிக்கச் சொன்னாள் '' என்று சொல்லி நிறுத்திவிட்டு அஞ்சுகம் விஜயரங்கனின் முகத்தைப் பார்த்தாள்.

விஜயரங்கன் எழுதி முடித்து விட்டு, அவ்வளவுதானா ? பேஷ். ஒரு தடவை கூட 'அப்புறம்', 'வந்து' எதுவும் சொல்லாமல் சொல்லி விட்டாயே ! சரி ; கீழே கையெழுத்து எப்படிப் போடுவது ?'' என்று கேட்டான்.

'' 'இப்படிக்கு' என்று எழுதி உங்கள் பெயரைப் போடுங்களேன். இது கூடத் தெரியாதா ?''

'' சாதாரணமாய் 'இப்படிக்கு' என்று போட்டால் நன்றாய் இருக்குமா? இப்படிக்கு 'அஞ்சுகத்தின் அன்புள்ள கணவன் விஜயரங்கன்' என்று போட்டால் எவ்வளவு ஜோராக இருக்கும் ?'' என்றான் விஜயரங்கன் குறும்பாகச் சிரித்துக் கொண்டே.

'' கணவனா—? இன்னும் கல்யாணப் பத்திரிகை கூட அச்சாகி வரவில்லை...'' என்றாள் சிறிது வெட்கத்தோடு.

'' ஓஹோ ! மறந்தே போய் விட்டேன். இன்னும் நமக்குக் கல்யாணமாகவில்லையா ? எனக்கென்னவோ கல்யாணம் செய்து கொண்டு விட்டோம் என்ற ஞாபகம். ஒரு வேளை போன ஜன்மத்தில் உன்னைக் கல்யாணம் செய்து கொண்டதின் நினைவாக இருக்கலாம்.''

'' இருக்கும், இருக்கும். இந்த ஜன்மத்திலேயே என்ன நடந்தது என்பதைக் கொஞ்ச நாட்கள் நீங்கள் மறந்திருந்தீர்கள் அல்லவா ?'' என்றாள் அஞ்சுகம் சிரித்துக் கொண்டே.

''போதும். அதிகமாக என் மானத்தை வாங்காதே. கணவன் என்பதற்குப் பதில் 'இப்படிக்கு அஞ்சுகத்தின் அன்புக் கணவனாகப் போகும் காதலன் விஜயரங்கன்' என்று எழுதட்டுமா ?''

'' எழுதுங்கள். ஆனால் 'இப்படிக்கு அஞ்சுகத்துக்கு அன்புக் காதலனாகப் போகும் கணவன்' என்று தவறி எழுதி விடாதீர்கள்!'' என்றாள் அஞ்சுகம் கலகலவென்று சிரித்துக் கொண்டே. அவனுடைய சிரிப்பும் அவளுடைய சிரிப்போடு கலந்து ஒலித்தது. தன் அறையில் கட்டிலில் படுத்துக் கொண்டிருந்த பார்வதியம்மாளும் காதலர்களின் சிரிப்பொலி கேட்டு ஒரு பெருமூச்சு விட்டு விட்டுத் தன் பொக்கை வாயைத் திறக்காமலே புன்முறுவல் பூத்தாள். (முற்றும்)






# கோமதியின் காதலன்

தொழில் நடிகர்கள் சேர்ந்து நடத்தும் நாடகத்துக்கு விமரிசனம் எழுதுவது சிரமமான காரியம் இல்லை; காரணம், அவர்கள் கூடிய வரையில் திறமையாகவே நாடகத்தை நடத்துவார்கள் என்பதுதான். ஆனால் அமெச்சூர் நடிகர்கள் நடிக்கும் நாடகம் என்றால் அப்படியில்லை. அவர்களில் மிகச் சிலர்தான் நன்றாக நடிப்பார்கள். மற்றவர்கள் நடிப்பெல்லாம் இப்படியும் அப்படியுமாகத்தான் இருக்கும். நன்றாய் நடித்தவர்களை மட்டும் பாராட்டி எழுதினால், மற்றவர்களுக்கெல்லாம் கோபம் வந்து விடும். அதற்காக எல்லோரையும் பற்றி உயர்வாக எழுதினால், விமரிசனத்தில் உயிர் இருக்காது.

மயிலாப்பூர் டிராமாடிக் கிளப் அங்கத்தினர்கள் சென்ற மாதம் ராஜா அண்ணாமலை மன்றத்தில் நடத்திய ''கோமதியின் காதலன்'' நாடகத்தைப் பார்த்ததும் மேலே கூறிய சிரமம்தான் எனக்கு ஏற்பட்டது.

''தேவன்'' எழுதிய ''கோமதியின் காதலன்'' ஏற்கெனவே பல முறை மேடைகளில் நடிக்கப்பட்டிருக்கிறது. கதையை நினைவுபடுத்திக் கொண்டால், வாசகர்களுக்கு என் விமரிசனத்தைப் படிக்கச் சௌகரியமாயிருக்கும்.

சின்னவேலி ஜமீன்தார் மகன் ரங்கராஜன் அண்ணனுடன் சண்டை போட்டுக் கொண்டு சென்னைக்கு வர, தற்செயலாக அழகி கோமதி அவன் கண்களில் சிக்க, அவன் பெட்டி ரௌடி மதராஸ் மணியிடம் சிக்க அதிலிருந்து பல சிக்கல்கள் உதிக்கின்றன. எள வியாபாரி பிரணதார்த்தியிடம் கார் டிரைவராக வேலைக்கு அமர்கிறான் ரங்கராஜன். கோமதியும் அவ்வீட்டில்தான் இருக்கிறாள். ஆகவே, காதல் சுலபமாக வளருகிறது; ரங்கராஜனின் டைரியை வைத்துக்கொண்டு ஏமாற்றிய மதராஸ் மணி சிக்கிக் கொள்ளுகிறான்.

என் வியாபாரி பிரணதார்த்தி மேடைக்கு வருகிற வரையில், என் பொறுமை அளவு கடந்து சோதனைக்குள்ளாகி விட்டது.

எஸ். எம். ஆனந்தன் அண்டு பார்ட்டியாரின் பின்னணி இசையும், குமாரி என். ரேணுகாவின் குரலிசையும் அந்தத் தாமதத்தை மறக்கப் பெரிதும் உதவியாயிருந்தன.

டி. வி. கோபாலசாமி பிரணதார்த்தியாக வந்து நாடகத்துக்கு உயிர் கொடுத்து, நாடகம் பார்ப்பவர்களுக்கு அபரிமிதமான உற்சாகத்தை யளித்தார். அவரது வழுக்கைத் தலை, புராதனமான மூக்குக் கண்ணாடி, தளர்ந்த நடை, இவை யாவற்றையும் தூக்கியடிக்கும் பேச்சு எல்லாம் பிரமாதம்.

''உன்னை ராஜான்னு கூப்பிடுவேன். நீ ஓடிவந்துடணும்....சம்பளம் இருபத்தஞ்சு ரூபா கொடுத்துடறேன். ஆனா...என் அகதாள்ட்டம் மாத்திரம்....பதினைஞ்சு ரூபான்னு நீ சொல்லணும்....உம்? என்ன?....'' என்று பிரணதார்த்தி தமக்கே உரிய பாணியில் ரங்கராஜனிடம் பேசியது இன்னும் என் செவிகளில் ஒலிக்கின்றன.

அடுத்தபடியாக எல்லோருடைய கவனத்தையும் கவர்ந்து பாராட்டப்பட்டவர்



பிரணதார்த்தியின் அக்காளாக நடித்த எம். ஆர். ராமகிருஷ்ணன். அவர் பேச்சும், நடிப்பும் முக பாவமும் நூற்றுக்கு நூறு பொருந்தி யிருந்தன. கோமதியாக நடித்த ஸ்ரீ ஏ. பி. ஈசுவருக்கு வேஷப் பொருத்தம் நன்றாயிருந்தது. இன்னும் கொஞ்சம் நடிப்பிலும் பேசசிலும் கவனம் செலுத்தினால் அவர் நன்கு சோபிப்பார். ஸ்ரீ எஸ். ஆர். வீரராகவன் ரங்கராஜனாக நன்றாய் நடித்தார். இளம் சினிமா நடிகன பாஜி பாலுவாக வந்து வெளுத்து வாங்கியதில் அதிசயப்படுவதற்கு ஒன்றும் இல்லை. வேதராம சாஸ்திரி பாகம் கதையோடு பொருந்தா விட்டாலும், அந்தப் பாகத்தையேற்ற ஸ்ரீ கே. நாகமணி தம் அடுக்கு மொழிகளினாலும் அதிர்வேட்டுச் சிரிப்பினாலும் அண்ணாமலை மன்றத்தை அதிரச் செய்து 'அப்ளா'சையும் தட்டிக் கொண்டுவிட்டார். ஸ்ரீ ஆர். நாராயணசாமி தத்தாத்திரியாக நடித்தது நன்றா யிருந்தது. போக்கிரி பக்கிரியின் பாகம் பி. ஆர். சண்முகத்துக்குப் பொருந்தி யிருந்தது. மதராஸ் மணி நாடகத்தில முக்கியமானவர்; வி. ஆர். கிருஷ்ணராவ் அப்பாத்திரத்தை உணர்ந்து நடித்தார்.

நாடக முடிவில் உண்மை ரங்கராஜன் வெளிப்படும்போது விறுவிறுப்பே யில்லாமல் சப்பென்று இருந்தது. அதை மாற்றினால் இன்னும் சுவாரஸ்யமாயிருக்கும்.

# முருகன் ஓர் உழவன்

ஒரு நாடகம் நன்றாக அமைய வேண்டுமானால் காட்சி ஜோடனைகள் எவ்வளவு முக்கியமோ அவ்வளவு முக்கியம் பாட்டு. ஆனால், பாத்திரங்கள் நிற்பதற்கும் உட்காருவதற்கும் பாட்டாகப் பொழிந்து தள்ளும் பழைய காலப் பாணியைக் கூறவில்லை. பாடல்கள் நிறைய இருப்பது போலவே பாடல்களே இல்லாமல் இருப்பதும் தவறுதான்.

புரசவாக்கம், ஆர்ட்ஸ் அகாடமியின் ஆதரவில் சென்ற மாதம் எழும்பூர், மியூசியம் தியேட்டரில் நடந்த ''முருகன் ஓர் உழவன்'' நாடகம் மேற்கூறிய இசையம்சத்தில் சிறந்து விளங்கியது.

மூன்று ராகங்களில் பாடப்பட்ட ''அன்பின் வடிவமாய் அமைந்தோனே'' என்ற கடவுள் வணக்கம் நன்றாயிருந்தது. அந்த நல்ல இசைக்குக் காரணமா யிருந்தவர் சங்கீத டைரக்டர் தஞ்சை பாலு என அறிந்து மகிழ்கிறேன். பேபி ரேணுவின் குரல் மதுரமாய் ஒலித்து மகிழ்வூட்டியது.

ஆங்கிலப் பேராசிரியர் ஸ்ரீ கே. எஸ். வெங்கடரமணி அவர்களின் நாவலைத் தழுவி இந் நாடகம் தயாரிக்கப்பட்டிருக்கிறது.

உழவின் மேன்மையையும் உழைப்பின் உயர்வையும் விளக்கி, உண்மை ஊழியனின் சிறப்பை உணர்த்தி, குடியின் கேட்டைக் கூறி, ஆடம்பர வாழ்வின் அக்கிரமத்தை அலசி, தகாத நட்பின் தரத்தைக் காட்டி இத்தக் கதை முடிகிறது. கதையில் நாடகத்

துக்கு ஏற்பப் பல மாறுதல்களைப் புகுத்தியிருந்தாலும் யார் கதாநாயகன் என்று நிர்ணயிக்க முடியாமல் இருக்கிறது.

ராமுவின் நிலங்கள் முருகனின் மேற்பார்வையில் இருந்தன. பட்டணவாசத்தை விரும்பிய ராமு முருகனிடமே நிலங்களை ஒப்படைத்து விட்டு, போலீஸ் சப்-இன்ஸ்பெக்டராகிறான். முருகன் கெட்ட சகவாசத்தினால் கள்ளுக்கடை வைத்து, உழவை மறந்து விடுகிறான். பிறகு மிராசுதார் பெரியசாமியின் தூண்டுதலினால் கள்ளுக்கடை தீக்கிரையாகி, அவனும் சிறைபுக நேருகிறது. கடைசியில் முருகன் திருந்துகிறான். ராமு உத்தியோகத்தைத் துறந்து கிராமத்தில் குடியேறுகிறான். இந்தக் கதையில், சந்தடி சிறிதும் இல்லாமல் காதல் கீதல் ஏதும் இல்லாமல் ராமுவுக்குக் கல்யாணம் ஆகிவிடுகிறது.

இந்த நாடகத்தைப் பார்க்கும் போது எனக்கு ஹோட்டலில் சாப்பிடும் ரஸம்சாதம் நினைவுக்கு வந்தது. ரஸம் ஒரு பக்கம் ஓடும், சாதம் தனியாக நிற்கும்; ஒன்றுக்கு ஒன்று சேராது. அதே மாதிரி இந்த நாடகப் பாத்திரங்களும் தனித்தனியாக நிற்கின்றன. ஆனால் நடிகர்களின் மேன்மையான நடிப்பு நாடகத்துக்கு மெருகேற்றியிருக்கிறது.

முருகனாக நடித்த பட்டண்ணா சிறந்த நடிகர்; பண்ணையாளாக வந்து பணிவாக நடந்து கொண்ட போதும், கள்ளுக்கடை முதலாளியாக வந்து மிடுக்கோடு நடந்த போதும் தனித்தனி மனிதர்களாகி விட்டார்.

அடுத்தபடியாகப் பாராட்டுக்கு உரியவர் கேதாரியாக நடித்த டி. எஸ். வி. ரமணி. ராமுவைப் படாடோப வாழ்வுக்குத் திருப்பியதைத் தவிர அவருக்கு நாடகத்தில் முக்கிய பங்கு ஏதுவும் இல்லையென்றாலும் அவர் நடிப்பு நன்றாயிருந்தது. மிராசுதார் பெரியசாமி பாகத்தை ஏற்ற வி. திருமலை அசல் தஞ்சை ஜில்லா மிராசுதாராக மாறி, நாடகத்துக்குத் தனிச் சுவையைத் தந்தார்.

கார்மேகம் இல்லையென்றால் மழை இல்லை; அதேபோல, பெரியசாமியின் குமாஸ்தா கார்மேகம் இல்லையென்றால் இந்த நாடகம் இல்லை. டி. எஸ். ராமசாமி கார்மேகமாக வந்து கன குஷியாக நடித்தார். ராமுவாக நடித்தவர், நிலச்சுவான்தாராகவும், போலீஸ் சப்-இன்ஸ்பெக்டராகவும் நன்கு நடித்தார். ராமுவின் மாமியார் மீனாட்சி அம்மாளாக நடித்த பி. ஆர். சீனிவாசன், சிறிது நேரமேயானாலும் அபாரமாக நடித்தார். ஜானகியாக நடித்த எம். ஆர். விஜயலக்ஷ்மிக்கு நல்ல தோற்றமும் வேஷப் பொருத்தமும் இருக்கின்றன. ஆனால், அவர் சிறிது முயன்று நடிப்பையும் கற்க வேண்டும்.

இந் நாடகத்துக்கு, உயிருள்ள வசனங்கள் எழுதி, கருத்துள்ள பாட்டுக்கள் புனைந்து ஸ்ரீ கலாதர் தம் பணியைப் பாராட்டுக்குரிய முறையில் செய்திருக்கிறார்.

காலத்துக்கு ஏற்ற மாறுதல்களும், சிறிது கவர்ச்சியூட்டும் காட்சிகளும் சேர்க்கப்பட்டால் இந்நாடகம் பிரமாதமாயிருக்கும்.

# இசைக்கலையின் அற்புதம்

கல்கி

★ இசைக்கலைக்கு இணையான கலை வேறு எதுவும் இல்லையென்று நமது மகாகவி பாரதியார் பாடியிருக்கிறார். இத்தகைய அரும் கலையை நமது முன்னோர்கள் ஆயிரம் ஆயிரம் ஆண்டுகளாகப் போற்றிப் பாதுகாத்து வந்திருக்கிறார்கள்.

இந்தப் புண்ணிய பூமியில் அவ்வப்போது தோன்றிய மகா வித்வான்கள் பலர் பூர்வீகமான இசைக் கலையின் தனிச்சிறப்பும், உருவமும், தரமும் கால வெள்ளத்தில் அழிந்து போகாமல் காப்பாற்றித் தந்திருக்கிறார்கள். ஒரு காலத்தில் அரசர்களுக்கும் அரண்மனைகளுக்கும் மட்டுமே உரித்தாயிருந்த சங்கீதக் கலை நாளடைவில் பொது மக்களின் பொக்கிஷமாக மாறியது. பின்னர் எண்ணற்ற சங்கீத ரசிகர்களும் சங்கீத சபையாரும் தோன்றிக் கர்நாடக இசைக் கலையைப் போஷித்து வருகிறார்கள். நமது சுதந்திர சர்க்கார் தகுதி உள்ள சங்கீத வித்வான்களை அழைத்துப் பட்டங்கள் வழங்கிக் கௌரவித்து வருகிறார்கள். சென்னை சங்கீத வித்வத் சபையாரும், இன்னும் சில பிரபல சங்கீத சபையினரும் ஆண்டுதோறும் டிசம்பர் மாதத்தில் சங்கீத மகா நாடுகளும் விழாக்களும் நடத்தி இசைக் கலையை வளர்க்கிறார்கள். பல பழம் பெரும் வித்வான்களும், இளம் வித்வான்களும் இந்த விழாக்களில் கலந்து கொண்டு சங்கீத ரசிகர்களை மகிழ்வித்து வருகிறார்கள். பேராசிரியர் கல்கி அவர்கள் 1953-ம் ஆண்டு இந்தியன் பைன் ஆர்ட்ஸ் சங்கத்தின் இருபத்தோராவது மகாநாட்டுக்குத் தலைமை தாங்கிய போது அவருக்குச் 'சங்கீத கலா ரசிக சிகாமணி' என்ற பட்டம் வழங்கப்பட்டது. அப்போது அவர் நிகழ்த்திய தலைமைப்பேருரை ஒரு சிறந்த கட்டுரையாகவே அமைந்துள்ளது. சென்னையில் சங்கீத விழாக்கள் ஆரம்பமாகும் இந்தச் சந்தர்ப்பத்தில் பேராசிரியரின் பேருரையைப் பெருமகிழ்ச்சியுடன் வெளியிடுகிறோம்.—ஆசிரியர்.



இந்தப் புண்ணிய பாரத பூமியில் பிறந்த நாம் பல வகையில் பாக்கியசாலிகள். ஆயிரக் கணக்கான ஆண்டுகளாகப் பரம்பரை பரம்பரையாக நம் முன்னோர் ஆண்டு பெருக்கிய கலைச் செல்வங்களை நாம் பெற்றிருக்கிறோம். சிற்பம், சித்திரம், கவிதை, இசை, நடனம் என்னும் ஒவ்வொரு கலைத் துறையிலும் விலை மதிக்க வொண்ணாத செல்வங்கள் நமக்குக் கிடைத்திருக்கின்றன.

வாழ்க்கைத் துறையில் சிலவற்றில் புதுமைக்குத்தான் மகிமையுண்டு. ஆனால் கலைத் துறையிலே மட்டும் பழமைக்குத்தான் மதிப்பு அதிகம். இராமாயணம்—மகாபாரதத்துக்கும், சாகுந்தலம்—மேகதூதத்துக்கும் இணையான காவியங்களை யாரும் இயற்ற முடியாது.

மற்றக் கலைகளைக் காட்டிலும், சங்கீதக் கலையிலேதான் பழமையின் சிறப்பை நாம் நன்கு காண முடிகிறது. சங்கீதத்தில் எவ்வளவுக்கெவ்வளவு பழமையான முறைகளைக் கடைப்பிடிக்கிறோமோ, அவ்வளவுக்குச் சங்கீதத்தின் தரம் உயர்ந்து நீடித்து நிற்கும். பாரத நாட்டின் பழமையான சங்கீதக் கலையை, ஆயிரமாயிரம் ஆண்டுகளுக்கு முன்னால் தோன்றி வளர்ந்து வந்த கலையை, தென்னாட்டிலே நாம் அதன் தூய்மை கெடாமல் பாதுகாத்து வந்திருக்கிறோம். வடநாட்டில் வழங்கும் ஹிந்துஸ்தானி சங்கீத முறையில் பாரசீக முறை கலந்து விட்டதென்றும், தென்னாட்டில் வழங்கும் கர்நாடக சங்கீதமே தூய்மை கெடாத பாரதீய சங்கீதம் என்றும் வடநாட்டுச் சங்கீத வித்வான்களும் ரஸிகர்களும் ஒத்துக் கொள்கிறார்கள்.

கர்நாடக சங்கீதத்தில் மிக முக்கியமான அம்சம் ராகங்கள் என்று வழங்கும் இசை வடிவங்கள் ஆகும். ராகங்கள் பல நூறு ஆண்டுகளுக்கு முன்னால் தோன்றியவை. அப்பர், சம்பந்தர் காலத்திலேயே சில ராக வடிவங்கள் வழங்கப்பட்டிருக்கின்றன. பிற்காலத்தில் அவற்றின் பெயர்கள் மாறியிருக்கின்றன. ராகங்களை 72 மேளகர்த்தாக்களுக்குள் வகுத்து முறைப்படுத்திப் பல நூறு வருஷங்கள் ஆகிவிட்டன. நம் முன்னோர் இவ்வாறு ராக வடிவங்களைக் கண்டு பிடித்துத் தலைமுறை தலைமுறையாகப் பின்வரும் சந்ததிகள் ஆண்டு அநுபவிக்கும்படி அளித்துப் போனார்கள்.

ராகங்களின் அமைப்பைப் பற்றி நினைத்துப் பார்க்கப் பார்க்க அவற்றைப் போன்ற இன்னொரு அற்புதம் இந்த உலகத்தில் இல்லையென்று ஏற்படும். கலைகளுக்குள் மிக நுட்பமான கலை சங்கீதம். சிற்பம், சித்திரம் இவற்றைக் கண்ணால் பார்க்கலாம்; அவற்றைத் திருத்தி அமைக்கலாம்; அழித்தும் எழுதலாம்.

கவிஞர்கள் தாங்கள் இயற்றும் கவிதைகளை ஒருமுறை ஏட்டில் எழுதிப் பார்த்து விட்டுத் திருத்தி அமைக்கலாம்.

ஆனால் சங்கீதக் கலையில் இப்படியெல்லாம் செய்ய முடியாது. சங்கீதம் காற்றிலே தோன்றிக் காற்றிலே மறைந்து விடுகிறது. அதற்கு உருவம் கிடையாது; கண்ணால் பார்க்க முடியாது; திருத்தி அமைக்க முடியாது.

இப்படி உருவமில்லாத கலையாயினும், சங்கீத வித்துவான் ஒரு ராகத்தை ஆலாபனை செய்யத் தொடங்கிய உடனே, "இது சங்கராபரணம்", "இது மோகனம்", "இது பந்துவராளி" என்று நாம் தெரிந்து கொள்கிறோம். பல காலம் பார்த்துப் பழகிய நண்பர்களை எதிரில் பார்த்து அறிவது போல் அந்த ராகங்களை நாம் அறிந்து கொள்கிறோம். இந்த அற்புதத்தை என்னவென்று சொல்வது?

ஒவ்வொரு ராகமும் ஏழு ஸ்வரங்களை அடிப்படையாகக் கொண்டதுதான். அந்த ஸ்வரங்களின் சேர்க்கையில் ஒரு சிறிய மாறுதலினால் ராகத்தின் வடிவமே மாறி விடுகிறது.

சங்கராபரணத்தின் ஸ்வரங்களில் சுத்த மத்திமத்தைப் பிரதி மத்திமமாக மாற்றியவுடனே நம் மனக் கண் முன்னால் 'கல்யாணி' விஜயம் செய்து காட்சி தருகிறது. ஹரி காம்போதியில் ஆரோகணத்தில் நிஷாதம் என்கிற ஒரு ஸ்வரத்தை விட்டு விட்டுப் பாடினால், ஒரு தனிப்பட்ட இனிய வடிவத்துடன் காம்போதி நிற்கிறது. இம்மாதிரி ஏழு ஸ்வரங்களின் வெவ்வேறு விதச் சேர்க்கையினாலும், சிலவற்றை விடுவதினாலும், சிலவற்றை முன் பின்னாகச் சேர்ப்பதினாலும், நூற்றுக்கணக்கான ராக வடிவங்கள் ஏற்பட்டு விடுகின்றன.

காலையில் எழுந்து ஒரு நந்தவனத்துக்குள் பிரவேசித்தோமானால் அங்கே பற்பல விதப் பூச்செடிகளைப் பார்க்கிறோம். ஒரே மண்ணில் உற்பத்தியானவை; ஒரே வித உரம் இட்டவை; ஒரே கிணற்றிலிருந்து தண்ணீர் மொண்டு தோட்டக்காரன் ஊற்றுகிறான்; ஆனால் ஒவ்வொரு செடியும் ஒரு விதம்; ஒவ்வொரு செடியின் இலையும் வெவ்வேறு விதம். புஷ்பங்களைப் பற்றியோ சொல்ல வேண்டியதில்லை. ஒரு செடியில் தூய வெள்ளை நிற மலர்; பக்கத்தில் தங்க நிற மலர்; அருகில் இரத்தினச் சிவப்பான பூ; நீல வர்ணப் பூ. ஒவ்வொரு நிறத்திலும் எத்தனையோ வகை. மணங்களின் வேறுபாட்டைத்தான் என்னவென்று சொல்வது? மல்லிகையின் மணம் வேறு; பன்னீரின் மணம் வேறு; ரோஜாவின் மணம் தனி; பாரிஜாதத்தின் சுகந்தம் தனி. இவ்வளவும் ஒரு விதமான மண்ணில் உற்பத்தியானவைதான்.

இறைவனுடைய படைப்பில் காணப்படும் இந்த அற்புதங்களைக் கண்டு பாரதியார் வியந்தார். பின்னர், ஏழு ஸ்வரங்களின் சேர்க்கையினால் ஏற்படும் ராக வடிவங்களாகிற அதிசயத்தையும் எண்ணி வியந்தார். இவை இரண்டுக்குள்ளே இசைக் கலையின் அற்புதம்தான் அதிக அதிசயமானது என்று தீர்மானித்துக் கூறினார்:—

"பூதங்கள் ஒத்துப் புதுமைதரல்
விந்தை எனில்
நாதங்கள் சேரும்
நயத்தினுக்கு நேராமோ?"

என்று குயிற் பாட்டில் வியந்து கூறினார்.

சப்தஸ்வரங்களின் சேர்க்கையினால் ஏற்படும் ராக வடிவங்களின் அற்புதம் ஒருபுறம் இருக்கட்டும். அவற்றைச் சங்கீத வித்துவான்கள் ஆலாபனம் செய்யும் போது வேறொருவித அற்புதத்தை அநுபவிக்கிறோம். ஒரு ராகத்தை எடுத்து வித்துவான் ஆலாபனை செய்யும் போது, அதன் ஸ்வரக் கட்டுக் கோப்புக்குள் நின்றுதான் அதை விஸ்தரிக்க வேண்டியிருக்கிறது. ஆனால் ஆலாபனை செய்யும் போது வித்துவான் ஸ்வரங்களை நினைத்துக்கொண்டா பாடுகிறார்? முதலில் வித்துவான் ராகத்தை ஆளுகிறார்; பிறகு ராகம் அவரை ஆட்கொண்டு விடுகிறது. சங்கீத வித்தையை நன்கு பயின்ற வித்துவான், மனோதர்மமும் உள்ளவராக இருந்தால் ராக ஆலாபனையின் போது தம்மை மறந்து விடுகிறார்: ஸ்வரங்களையும் மறந்து விடுகிறார்; சபையோரையும் மறந்து விடுகிறார். ராகமும் தாமும் ஒன்றாகி வானத்திலும் பூமியிலுமாக வட்டமிட்டுச் சஞ்சாரம் செய்கிறார். அத்தகைய வித்துவானுடைய ஆலாபனையைக் கேட்கும் ரஸிகர்களும் தங்களை மறந்து விடுகிறார்கள்.

சங்கீத உலகில் பிரக்யாதி பெற்றவர்களான மகா வைத்தியநாதய்யர், திருக்கோடிக் காவல் கிருஷ்ணய்யர், புல்லாங்குழல் சரப சாஸ்திரிகள், மலைக் கோட்டை கோவிந்தசாமிப் பிள்ளை, மதுரை புஷ்பவனம் ஐயர் முதலிய வித்வான்களின் பெயர்களைக் கேட்டாலே நமக்குப் புளகாங்கிதம் உண்டாகிறது. சங்கீதக் கலையானது அவர்களையெல்லாம் நமக்கு அவ்வளவு நெருங்கிய உறவினர்கள் ஆக்கி விட்டது. ஸ்ரீ தியாகராஜரையும், தீக்ஷிதரையும் சங்கீத ரஸிகர்கள் இஷ்ட தெய்வங்களோடு சேர்த்துப் போற்றுகிறார்கள். இப்போதுள்ள திருவாங்கூர் மகாராஜாவின் பெயர் உங்களில் சிலருக்கு ஒருவேளை தெரிந்திருக்கலாம். இவருக்கு முந்தைய மகாராஜாவின் பெயரோ, அவருக்கு முந்தையவரின் பெயரோ நிச்சயம் நினைவில் இராது! ஆனால் நூறு ஆண்டுகளுக்கு முன்னால் திருவிதாங்கூரை அரசு புரிந்த ஸ்வாதித் திருநாள் மகாராஜாவின் பெயர் இன்று எல்லோருக்கும் தெரியும். அவர் இயற்றியுள்ள சாஹித்யங்கள் அவருக்கு அத்தகைய சிறப்பை அளித்திருப்பதுடன் இந்தக் காலத்தில் வாழும் நமக்கு அவரை நெருங்கிய உறவினராகவும் செய்திருக்கின்றன!

கர்நாடக சங்கீதக் கலையைப் போல் நமது நாட்டுக்கே தனிச் சிறப்பாக உரிய பரத நாட்டியக் கலையும் ஒப்பற்ற மகிமை வாய்ந்தது. கங்கையையும் யமுனையையும் போன்ற இந்த இரண்டு அருமையான கலைகளையும் போற்றி வளர்ப்பவர்கள், இக்காலத்தில் வாழ்கிறவர்களுக்கு மட்டுமின்றி வருங்கால சந்ததிகளுக்கும் மகத்தான சேவை செய்கிறார்கள்.

Printed and Published by T. Sadasivam at the Kalki Press, Kilpauk, Madras-10 for the Proprietors Messrs Bharathan Publications Private Limited. Managing Editor: T. Sadasivam.

பாருங்கள்! ஒரு அரை வில்லை
சன்லைட் தான்
இவ்வளவு சலவையும்
செய்து முடித்து
விட்டது!

அதன் அதிகப்படியான நுரையே இதைச் சாதித்தது!




பளிச்சென்று
வெண்மையாக
வெளுப்பது

ஸன்லைட் சோப்

S. 243-50 TM

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon